# மங்கையர் மலர்

ஜூன் '87 ரூ. 3



## தங்கம் விலை ஏறியது ஏன்?

மீண்டும் பார்க்கத் தூண்டும் ஜொலிப்பு...
மின்னலடிக்குது ஸுப்பர் ரின் வெளுப்பு.




**மின்னலடிக்கும் ஸுப்பர் ரின்— அதி வெண்மை.**
இதர டிட்டர்ஜெண்ட் வில்லை, பார் எதனையும் மிஞ்சும் வெண்மை.

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

LINTAS RIN 115 2417 TM

சென்ற இதழில் 'ஐந்து மைல் போனால்தான் ஒரு குடம் தண்ணீர் எடுக்க முடியும்' என்று வறட்சியால் பாதிக்கப்பட்ட பெண்களின் பேட்டியை வெளியிட்டிருந்தோம். தமிழ் நாடு குடிநீர் வடிகால் வாரியத் தலைவர் திரு. உகம்சந்த் இங்கு அதற்குப் பதிலளிக்கிறார்: —

"எந்த ஒரு கிராமத்திலோ, சிறு நகரங்களிலோ ஒரு மைல் சுற்றளவுக்குள்ளேயே நிச்சயமாக ஒரு கிணறோ, மேல்நிலைத் தொட்டியோ இருக்கத்தான் செய்யும். சுற்று வட்டாரத்தில் ஒரு சொட்டுத் தண்ணீர் கூடக் குடிப்பதற்குக் கிடையாது என்ற நிலைமை எங்கேயும் கிடையாது...

"...ஆனால் மேல்நிலைத் தொட்டியெல்லாம் தான் பயன்படுவதே இல்லையாமே... அதைப் பற்றித்தான் பத்திரிகைகள் எழுதுகின்றனவே...?"

"நாங்கள் மேல்நிலைத் தொட்டிகளை அமைத்துக் கொடுக்கிறோம். அதைப் பராமரிக்க வேண்டியது உள்ளாட்சித் துறையினுடைய பொறுப்பு. பல இடங்களிலே அதற்கான நிபுணர்களோ, நிதி வசதியோ அவர்களிடம் இல்லை. சில இடங்களிலே அரசியல் காரணங்கள். அதனால்தான் மேல்நிலைத் தொட்டிகள் பயன்படாமல் போய்விடுகின்றன. நான் இதைப் பற்றி மாண்புமிகு முதல்வர் அவர்களுக்கு எழுதி இருக்கிறேன். கூடிய விரைவில் அதற்கான நிதி வசதிகளும், பொறியியல் நிபுணர்களும் கிடைப்பார்கள்.

"தவிரவும் 'போர்வெல்' போட்டிருக்கிறோம். நிலத்தடி நீரைத்தான் கைபம்புகளின் மூலமாக எடுக்கிறோம். இது தற்காலிக ஏற்பாடுதான். அருகில் இருக்கும் ஆற்று நீரைக் கொண்டு வந்து பயன்படுத்துவதுதான் சிறந்த முறை. அதற்கான திட்டத்தைத்தான் துவக்கியிருக்கிறோம். தமிழக முதல்வரால் 'ஒகனேக்கல் திட்டம்' போன்ற பல திட்டங்கள் சேலம், வடார்க்காடு, திருச்சி மாவட்டங்களில் துவக்கப்பட்டுள்ளன. நாங்களும் வெகு விரைவாகத்தான் செயல்பட்டுக் கொண்டிருக்கிறோம்.

"குடிநீரைச் சிக்கனமாகப் பயன்படுத்துங்கள் என நீங்கள் சொல்கிறீர்கள். பொது மக்களோ தண்ணீரையே காணோம் என்கிறார்கள்...?"

# தண்ணீர், தண்ணீர்!

"பொது மக்களின் மனப்பான்மை கூட சிறிது மாற வேண்டும். என்னைக் கேட்டால் சேவைகளிலேயே சிறந்த சேவை குடிதண்ணீர் கொடுப்பதுதான் என்பேன்.

"'தெலுங்கு கங்கா' திட்டத்தில்கூட நமக்குத் தண்ணீர் கொடுப்பதை கர்நாடக, மகாராஷ்டிரா மாநிலங்கள் மறுக்கவில்லை. அதைக் காரணமாகக் கொண்டு ஆந்திராவிலேயே சில பகுதிகளுக்குப் பாசன வசதி செய்து கொள்வதைத்தான் ஆட்சேபிக்கின்றன. எனவே குடிக்கத் தண்ணீர் கொடுக்க யாருமே மறுக்க மாட்டார்கள்.

"ஆனால் நம் ஊரிலோ ஓர் இடத்தில் அதிகமாகத் தண்ணீர் கிடைத்தால் அங்கிருந்து பக்கத்து ஊருக்குத் தண்ணீரைக் கொண்டுசெல்ல அனுமதிக்கமாட்டேனென்கிறார்கள். ஒரு கிணற்றில் அதிகத் தண்ணீர் இருந்தால் மற்றவர்களுக்கும் தந்து உதவ வேண்டும்.

வாகைகுளம், பாதராபட்டி போன்ற இடங்களில் நிலத்தடி நீர் நிறையக் கிடைக்கிறது. சில இடங்களில் பக்கத்துக் கிராமங்களுக்குக் குழாய்களைப் போட அனுமதிக்க மறுக்கிறார்கள்.

அதேபோலப் பெண்களாகிய நீங்களும் தண்ணீரைச் சிக்கனமாகச் செலவழிக்க வேண்டும். குடிதண்ணீரைப் பூந்தோட்டத்திற்குப் பயன்படுத்துகிறார்கள். அதற்குக் கிணற்று நீரை, மற்ற கழிவு நீர்களைப் பயன்படுத்தலாம்.

நமக்குத் தேவையானதைப் பிடித்துக் கொண்டு குழாயை மூடிவிட்டால் எங்கோ தேவையானவர்களுக்குக் கிடைக்குமே. சமுதாய உணர்வும் பொறுப்பும் எல்லோருக்கும் இருக்குமானால் இப்படிப்பட்ட சோதனையான நேரங்களை எளிதில் கடக்கலாம்.

"அவரவர் வட்டாரத்தில் இருக்கின்ற தண்ணீர்ப் பிரச்னைகளைப் பெண்கள் எழுதினால் கவனிப்பீர்களா?"

"நிச்சயமாக. கடிதம் எழுதிப் போடச் சொல்லுங்கள். சமீபத்தில் ஒரு பத்திரிகையில் மரகதவல்லிபுரம் என்ற ஊரின் குடிதண்ணீர்ப் பற்றி ஒரு தவறான தகவல் வந்திருந்தது. அதன் நிருபர்களை அழைத்துக் கொண்டு போய்க் காண்பித்தோம். எனவே யாரானாலும் எங்களுக்குக் கடிதம் எழுதுங்கள்."

பேட்டி: **மஞ்சுளா ரமேஷ்**

புகைப்படம்: **யோகா**

---

# மங்கையர் மலர்

அடுத்த இதழில்...

## 'காஞ்சிபுரம் பட்டுப்புடவை'யென கண்டுபிடிப்பது எப்படி?

மற்றும் பட்டுப் புடவைகளைப் பற்றிய சிறப்புத் தகவல்கள்!





# இலவசம்!




## பாப்பாவுக்கு ஒரு பளிங்குக் கிண்ணம் —பாசத்துடன் அளிப்பது ஃபாரெக்ஸ்.




அழகான பயனுள்ள ஒரு
பளிங்குக் கிண்ணம்—
அதிலே, பாப்பா மிகவும்
விரும்பி உண்ணும். உங்களது
பாப்பாவின் சுவைமிக்க
சத்துணவு ஃபாரெக்ஸ்
வாங்குந்தோறும் இலவசம்
இப் பளிங்குக் கிண்ணம்.

இப்போது கிடைக்கிறது
தேர்ந்தெடுத்த இடங்களில்!

25/203 TML.

# மருமகள் மாமியாரால்...



குழந்தையாக, சகோதரியாக, மனைவியாக, தாயாக, அத்தையாக, பாட்டியாக எல்லோராலும் விரும்பப்படும் ஒரு பெண் மாமியார் என்ற ஸ்தானத்தை வகிக்கும் போது மாத்திரம் அவளிடம் ஒரு சில மாற்றங்கள் வருவது ஏன்? என்ற கேள்விக்குப் பதிலாக அமைவதே இந்தக் கட்டுரை. நல்ல மாமியார்கள் இந்தக் கட்டுரையைப் படித்து மனம் வருந்த வேண்டாம்.

### அன்பிலே பங்கு

திருமணமாகும்வரை பெரும்பாலான பிள்ளைகள் தங்கள் பெற்றோர்களுடன் சேர்ந்தே வசிக்கின்றனர். வேறு நிர்பந்தத்தின் காரணமாக வெளியூர்களில் தனித்து இருக்கும் ஒரு சிலரைத் தவிர. 'அம்மா, அம்மா' என்று தன் மகன் அழைப்பதில், அவனுக்கு உணவு பரிமாறுவதில், அவனுக்கு அறிவுரை, ஆறுதல் சொல்வதில், அவன் தன் பேச்சைக் கேட்டு நடப்பதில், அவள் ஆனந்தமும் தன்னிறைவும் அடைகிறாள்.

மனைவி என்பவள் வந்தால் முதல் பயம் எங்கே அவள் தன் மகனைத் தன்னிடம் இருந்து பிரித்துச் சென்று தனிக் குடித்தனம் வைத்து விடுவாளோ என்பது. அப்படித் தனிக் குடித்தனம் அவர்கள் செல்லாவிட்டாலும்கூட தன் மகன் தன்னிடம் காட்டும் அன்பினில் பெரும் பகுதியை அவனுடைய மனைவி கவர்ந்து கொள்கிறாளே என்ற பொறுமை உணர்ச்சியால் பரிதவிக்கிறாள்.



ஒரே வீட்டில் எல்லோரும் இருந்தால்கூட மகனுடைய தேவைகளை — அவனுக்கு உணவு பரிமாறுவது போன்ற வேலைகளை அவனுடைய மனைவியே கவனித்துக் கொள்வதால், அது போன்ற வேலைகளைச் செய்து வந்ததால் அவளுக்குக்கிடைத்த மன திருப்தியை இழக்க நேரிடுகிறது. இதுபோன்ற சிறிய இழப்புக்கள் சிறிய மாற்றங்களுக்குக் காரணம் மருமகள்தான் என்று நினைத்து அவள் மருமகளை

ஒரு எதிரியாகக் கருதத் தொடங்குகிறாள்...

### பணத்திலே பங்கு

திருமணமாகும்வரை சம்பளம் வாங்கினால் தாயிடம் கொடுத்துக் கொண்டிருக்கும் மகன், திருமணமானவுடன் மனைவியிடம் கொடுக்க ஆரம்பிக்கிறான். தாய்க்கு அந்தப் பணம் கிடைத்துக் கொண்டிருந்ததால், கிடைத்துக் கொண்டிருந்த சந்தோஷம், அவளிடம் இருந்த தெம்பு, மருமகளின் வருகையால் மாறுபடுகிறது. வேலையில் இல்லாத விதவையான தாயாரின் நிலைமை இன்னும் பரிதாபமானது. சில சமயங்களில் தன்னுடைய தேவைகளுக்குத் தன்னுடைய மகனிடமோ, மருமகளிடமோ கேட்டு வாங்க வேண்டிய சூழ்நிலை வரும்போது அவள் மிகவும் கூச்சப்படுகிறாள்., கோபப்படுகிறாள். தனக்கு உரிமையுள்ள ஒன்றை மருமகள் பறித்துக் கொண்டு விட்டாளே என்று அவள் மேல் எரிச்சல் படுகிறாள்.

### வசதியில் பங்கு

பெரும்பாலான நடுத்தரக் குடும்பங்கள் வாடகை வீட்டிலோ சொந்தமாக இருந்தாலும் சிறிய வீட்டிலோ அல்லது ப்ளாட்டிலோ வசிக்கிறார்கள். இந்த மாதிரி இடங்களில் பெரும்பாலும் ஒரே ஒரு அறையே படுக்கை அறையாக உபயோகப்படுத்தப்



படுகிறது. அதுவே பெட்ரூம்—கம் ஸ்டோர் ரூமாக பல வீடுகளிலும் இருக்கும் என்பது வேறு விஷயம். இந்த ரூமையே தங்களின் பெட்ரூமாக மருமகள் வீட்டுக்கு வரும்வரை உபயோகப்படுத்திக் கொண்டிருந்த மகனின் பெற்றோர்கள்,மருமகள்வீட்டுக்குவந்தவுடன் அவர்களுக்கு அந்த ரூமைத் தானம் செய்து விட நேரிடுகிறது. அவர்களின் படுக்கை ஹாலுக்குத் தள்ளப்படுகிறது.

மகனின் பெற்றோர்களுக்குக் கிடைத்து வந்த தனிமைமறுக்கப்படுகிறது. அவர்களின் தாம்பத்ய உறவு கேலிக்கிடமாகிறது. அவளுடைய மன நிறைவில் ஒரு பெரும்பகுதியை இதனால் இழக்க நேரிடுகிறது. இப்படி அவளுக்கு நேரக் காரணம் — வேறு காரணங்களை ஆராயாமல் — மருமகளே என்று நினைத்து அவள் மேல் தன்னுடைய ஏமாற்றத்தை கோபத்தை பல ரூபங்களில் காண்பிக்க ஆரம்பிக்கிறாள்....

### உடல்நிலையில் மாறுதல்

சாதாரணமாக வீட்டிற்கு மருமகள் வரும்போது எந்த மாமியாருக்கும் ஏறக்குறைய நாற்பத்தைந்து ஐம்பது வயதாகிவிடுகிறது. இந்த சமயத்தில் அவர்களுடைய உடல் ஆரோக்கியத்தில் பல வித மாற்றங்கள் ஏற்படுகின்றன. ஒரு சில பெண்கள் ப்ளட் ப்ரஷர், டயபடீஸ் போன்ற வியாதிகளால் பீடிக்கப்பட்டு அவதிப்படுகிறார்கள். இன்னும் சில பெண்கள் மூட்டு வலி, முதுகு வலிபோன்றவற்றாலும்,வேறுசிலபெண்கள் கேன்ஸர் போன்ற வியாதிகளாலும் தாக்கப்படுகிறார்கள்.

பெரும்பாலான பெண்களுக்கு இந்த வயதில் மாதவிலக்கு நிற்கிறது. மாதவிலக்கு நிற்கும்போது அது பெண்களுடைய மன நிலையில், உடல் நிலையில் பெருத்த மாற்றங்களை உண்டு பண்ணுகின்றன. தங்களுக்கு வயதாகிவிட்டது, தங்களுக்குத் தள்ளாமை வந்துவிட்டது என்ற உணர்வு அவர்களைப் பெரிதும் பாதிக்கிறது. அதனால் அவர்களுக்கு இருந்து வந்த சகிப்புத் தன்மை குறைகிறது. சிறிய சிறிய விஷயத்துக்கெல்லாம் எரிச்சலையும் கோபத்தையும் காண்பிக்க ஆரம்பிக்கிறார்கள். ஊருக்கு இளைத்தவன் பிள்ளையார் கோவிலாண்டி என்பது போல, வீட்டிற்கு இளைத்தவள் மருமகளாகிறாள்...

### நிலைமையில் மாறுதல்

துர்பாக்கியவசமாக ஒரு சில பெண்கள் வீட்டிற்கு மருமகள் வந்த ஒரு சில வருடங்களில் விதவைகளாக ஆகிவிடுகிறார்கள். அவர்களுடைய கணவர்கள் இந்தியாவின் சராசரி வயதை விடப் பல வருடங்கள் அதிகமாக வாழ்ந்தவர்களாகவே இருக்கலாம். இருந்தாலும் மாமியார் ஸ்தானத்தில் இருக்கும் ஒரு பெண், தான் விதவையானதற்குக் காரணம் வீட்டில் மருமகள் வந்த ராசியே என்றும் கருதுவது மருமகளைக் கொடுமைப்படுத்த ஒரு காரணம். விதவையாக இருப்பதால் ஏற்பட்ட மனத் தளர்ச்சி, தனிமை, சமூகத்தில் கிடைத்து வந்த அந்தஸ்தை இழந்ததால் ஏற்பட்ட வெறுப்பு, பல இடங்களில் விதவைகள் நடத்தப்படும் விதத்தைக் கண்டு ஏற்படும் கொந்தளிப்பு, நன்றாக விதம்விதமாக அலங்காரம் செய்து கொள்ள விருப்பப்பட்ட பெண்கள் கணவனை இழந்த கொடுமையால் தங்களது சாதாரண ஆசைகளைக் கூட கட்டுப்படுத்திக் கொண்டு வாழ வேண்டிய சம்பிரதாய போலி கட்டாயத்தினால் ஏற்படும் பலதரப்பட்ட எதிர்மறையான உணர்ச்சிகளுக்கெல்லாம் வடிகாலாக அமைகிறாள் மருமகள்....

# "அதிக அளவு நெய், அதிக மணம் தருகிறது




ஆம், இந்த இல்லத்தரசி கூறுவது நூற்றுக்கு நூறு உண்மை. அனுபவத்தில் கண்ட உண்மை! ஆவின் வெண்ணெய் புதிய, சுத்தமான பாலிலிருந்து தயாரிக்கப்படுகிறது. நவீனமான முறையில் தானியங்கி இயந்திரங்கள் மூலம் வெண்ணெயிலிருந்து தண்ணீர் முழுமையாக அகற்றப்பட்டு, பேக் செய்யப்படுகிறது. இதனால் வெண்ணெய் காய்ச்சும்போது அதிக அளவு நெய் கிடைக்கிறது.

ஆகவே ஆவின் வெண்ணெய் சிக்கனமானதாக அமைகிறது.

புதுத்தன்மை மற்றும் உயர்ந்த தரம் காரணமாக நெய் மிகுந்த மணமுள்ளதாகவும் இருக்கிறது. ஆவின் வெண்ணெய் நிகரற்று விளங்குகிறது... அதன் தரம், தூய்மை, புதுத்தன்மை காரணமாக! இன்றே வாங்கிப் பாருங்கள், உண்மை உங்களுக்கு விளங்கும்.

## ஆவின்

### வெண்ணெய்

**வெண்மையானது · தரமானது · சிக்கனமானது.**

## பரம்பரைப் பழக்கம்

தான் மாமியாரால் கொடுமைப்படுத்தப்பட்டிருந்தால், அவள் பெரும்பாலும் தனக்கு மருமகளாக வரும் பெண்ணையும் கொடுமைப் படுத்தத் தொடங்குகிறாள். தான் பட்ட கஷ்டங்கள் அவள் நெஞ்சை விட்டு அகலுவதில்லை. இன்னொரு பெண்ணை அவள் கொடுமைப்படுத்துவதன் மூலம் தனக்குத் தன் மாமியார் செய்த கொடுமைகளுக்கு வஞ்சம் தீர்த்துக்கொள்கிறாள். அதாவது தன்னுடைய மாமியாரிடம் தான் காட்ட முடியாத கோபத்தைத் தன்னுடைய மருமகளிடம் காட்டித்தீர்த்துக்கொள்ளத்தொடங்குகிறாள்....

## அதிகார பயம்

எங்கே தன்னுடைய மருமகள் தங்களை மதிக்காமல் போய்விடுவாளோ என்கிற பயம் பெரும்பாலான மாமியார்களுக்கும் இருக்கிறது. அதனால் மருமகள் செய்யும் ஒவ்வொரு காரியத்திலும் ஏதேனும் ஒரு சிறிய குறையாவது கண்டு பிடித்து அவளைத் திட்ட ஆரம்பிக்கிறார்கள். இந்தப் பயம் வேலைக்குச் செல்லும் மருமகள்களின் மாமியார்களுக்கு நிறையவே இருக்கிறது. சம்பாதிக்கும் 'திமிரி'ல் (மாமியாரின் கண்ணோட்டத்தின்படி) எங்கே அவள் தன்னை மதிக்காமல் போய்விடுவாளோ என்று அவளைக் குறை சொல்லிக் கொண்டே இருக்கும் மாமியார்கள் பலரும் இருக்கிறார்கள். மருமகள் நன்றாகப் படித்து, புத்திசாலிப் பெண்ணாக, நல்ல வேலையில் இருந்தாலும் இந்தப் பயத்தினால் அவளைத் துன்புறுத்தத் தொடங்குகிறார்கள்....

## வரதட்சணை

என்னைப் பொறுத்தவரை வரதட்சணை விவகாரத்தைக் கடைசிக் காரணமாகக் கருதுகிறேன். ஆனால் பலரும் இதையே முதல் காரணமாகச் சொல்ல அபிப்ராயப்படலாம். நான் வரதட்சணை விவகாரத்தைக் கடைசிக் காரணமாகக் கருதக் காரணம் வரதட்சணைப் பிரச்னை இல்லாத வீடுகளிலும், மருமகள் கொடுமைப்படுத்தப்படுவதே. வரதட்சணைப் பிரச்னைக் காரணமாக ஏற்படும் சண்டைகளில் மாமியார் தன் மகனுடைய படிப்புக்காக, அதிலும் டாக்டர் இன்ஜினியர் போன்ற படிப்புக்காக செலவு செய்ததை 'இன்வெஸ்ட்மெண்ட்'டாக நினைத்து அதற்கு 'ரிடர்ன்' வட்டியுடன் கிடைக்க வேண்டும் என்று நினைக்கிறாள். மேலும் ஒரே மகனுடன் ஒன்றிரண்டு மகள்கள் இருக்கும்போது, மகன் மூலமாகப் பெறும் வருமானத்தை மகளுக்காக செலவு செய்ய வேண்டிய தேவையில் அவள் இருக்கிறாள். பொருட்களை நல்ல விலைக்கு விற்பது போலத் தன்னுடைய மகனையும் நல்ல விலைக்கு விற்கத் தயாராக இருக்கிறாள். பேசிய தொகையை கொடுப்பதில் தாமதம் ஏற்படும்போதோ, கொடுக்காமல் ஏமாற்றப்படும்போதோ அவள் கோபம் அடைந்து மருமகளைக் 'கொண்டு வா, கொண்டு வா' என்று துன்புறுத்துகிறாள்....

இந்த நிலைமை எல்லாம் மாற வேண்டுமானால் நம்முடைய அடிப்படை பழக்க வழக்கங்கள், சம்பிரதாயங்கள் எல்லாம் மாற வேண்டும். திருமணங்களுக்காக அதிகச் செலவு செய்து ஆடம்பரமாக நடத்துவதைக் குறைக்க வேண்டும். பெண்களுக்குப் பொருளாதாரச் சுதந்திரம் வேண்டும் என்ற எண்ணத்தை வளர்க்க வேண்டும். ஒவ்வொரு பெண்ணும் வீட்டில் இருந்து அரட்டை அடித்து வெறுமனே நேரத்தைப் போக்காமல், வெளியில் வேலை செய்தோ அல்லது வீட்டில் இருந்தபடியோ ஒரு வருமானத்திற்கு வழி செய்து கொள்ள வேண்டும்.

கேரளாவில் பெரும்பாலும் இந்த மாமியார்க் கொடுமை என்ற பேச்சைக் கேட்க முடியாது. காரணம் எத்தனையோ தலைமுறைகளுக்கு முன்பே பெண்கள் வேலைக்குச் செல்ல ஆரம்பித்த இந்த சமூகத்தில் மாமியார்க்காரியும் மருமகளைப் போலவே வேலைக்குச் செல்வதால் அவளுக்கென்று ஒரு தனி வருமானம் அவள் ஓய்வு பெற்ற பிறகு கூட கிடைக்கிறது. அவளும் வேலைக்குச் செல்வதால், மருமகளின் குறைகளைக் கண்டு பிடிக்க அவளுக்கு நேரம் கிடையாது. அப்படியே மருமகளிடம் குறைகள் இருந்தாலும் அதைச் சகித்துக் கொள்கிறாள் — ஏனென்றால் அவளும் தன்னைப் போலவே வேலைக்குச் செல்பவள் ஆயிற்றே. அதனால் அவளுக்கும் களைப்பு இருக்கலாம், நேரம் இல்லாமல் இருக்கலாம் என்று மருமகளைப் புரிந்து கொள்கிறாள்.

கேரளாவில் இந்தப் பிரச்னை குறைய இன்னொரு காரணம் வீடு. சாதாரண வேலையில் இருந்தாலும்கூட அவர்கள் சொந்த வீடு கட்டுவதை வாழ்க்கையின் பிரதான லட்சியமாகக் கொண்டிருக்கிறார்கள். அதனால் மாமியாருக்கும் சொந்த வீடு உண்டு, மருமகளுக்கும் சொந்த வீடு உண்டு. இட நெருக்கடியால் தங்கள் சௌகரியங்களைத் தியாகம் செய்ய வேண்டிய அவசியம் அவர்களுக்கு இல்லை. இன்னொரு காரணம் இங்கு பெண்களுக்குள்ள சொத்துரிமை. பெண்களுக்கும் பெற்றோர்கள் மனம் உவந்து சொத்தில் பங்கு தருவது குறிப்பிடத்தக்கது.

திருமணம் ஆன பிறகு தன் மகனிடம் காணப்படும் மாறுதல்கள் இயற்கையானவை. ஆரோக்கியமானவை என்பதை ஒவ்வொரு தாயும் உணர வேண்டும். அதைப் போலவே முடிந்த அளவு மகனும், மருமகளும் இனிமையாக அவளது மனம் நோகாமல் அவளுக்கு மதிப்பு அளித்து நடந்து கொள்ள வேண்டும்.

— கமலநாதன்

---

அடைக்கு அரைக்கும்பொழுது சிறிது தனியா, ஓமம் (அ) சோம்பு சேர்த்து அரைத்தால் மணத்துடன் நன்றாக இருக்கும்.

— சரோஜா.




# செல்லப் பிள்ளை பள்ளி செல்ல சில யோசனைகள்

ஜூன் மாதம் பிறந்தவுடனேயே தெருவுக்கு இரண்டு குழந்தைகளாவது ஒவ்வொரு ஊரிலும் புதிதாக பள்ளிக்குச் செல்ல ஆரம்பிக்கும். பிறந்து நாலு வருடங்கள் வீட்டின் பாதுகாப்பான சூழலில் அன்னை தந்தை தாத்தா பாட்டியின் செல்ல அரவணைப்பில் வளர்ந்துவிட்டுத் திடீரென்று பள்ளியில் கொண்டு சேர்க்கவும், புத்தில் இரண்டு குழந்தையாவது பள்ளிக்குச் செல்ல விரும்பாது மிரண்டு அடம் பிடித்து அழுவது சர்வ சகஜம்.

**பள்ளி செல்ல வைக்க சில வழிமுறைகள் :**

பள்ளி திறக்க பதினைந்து நாட்கள் முன்பிருந்தே உங்கள் வீட்டிற்கு வரும் உற்றார் உறவினர் நண்பர் சூழாம் முதலியவர்களிடம் உங்கள் குழந்தையின் முன்னிலையில் அவள் பள்ளியில் சேர்ந்து படிக்கப் போவது பற்றிப் பெருமையாகக் கூற ஆரம்பியுங்கள். அது உங்கள் குழந்தையின் மனத்தில் புது உற்சாகத்தினைத் தந்து தான் பள்ளி சென்று படிக்கப் போவது வீட்டில் எல்லோரும் மகிழ்ச்சியடையவும், பெருமைப்படும் விஷயம் என்று உணர்த்தும்.

2. எக்காரணத்தையொட்டியும் அதிக விஷமம் செய்யும் துறுதுறுப்பான சூடிகையான குழந்தைகளை நோக்கி கோபிக்கும்போது, 'பள்ளித் திறக்கட்டும். உன்னை முதலில் அங்கு கொண்டு சேர்க்கிறேன். உன் கொட்டமெல்லாம் அடங்கும். அங்கே போய் நீ விஷமம் செய்தால் மிஸ் நன்றாக அடிப்பார்கள்' போன்ற சொற்றொடர்களைப் பயன்படுத்தாதீர்கள்.

3. பள்ளி திறக்கப் பத்து நாட்கள் முன்பிருந்தே புது ஸ்கேல், பென்சில், ஸ்கூல் பை, குட்டி கர்சீப், சாக்ஸ், ஷூ போன்ற சாமான்களை விட்டு விட்டு தினம் ஒரு பொருளாக வாங்கி வந்து உங்கள் குழந்தையின் கையில் தந்து ஸ்கூல் திறந்தவுடன் நீ கொண்டு செல்ல இவையென்று கூறி அதன் கையால் பீரோவில் வைத்துப் பத்திரப் படுத்தச் சொல்லுங்கள். குழந்தை மனத்தில் தான் பள்ளி செல்லப் போவதால் கிடைக்கின்ற புதுப் பொருட்களால் மகிழ்ச்சி ஏற்பட்டு, பள்ளி போகும் நாளை ஒரு கோலாகலமான விழா நாளாக எண்ணி அந்த நாளை எதிர்நோக்கி ஆவலோடு காத்திருக்கும்.

4. எக்காரணம் கொண்டும் பள்ளிக்குப் புதி

தாகச் செல்லும் குழந்தைகளைக் கூட்டிப் போகும்போது வழியில் உள்ள தாடிக்காரன், நொண்டிப் பிச்சைக்காரன் போலீஸ்காரன் இவர்களைக் காட்டி பயமுறுத்தாதீர்கள்.

5. முதன்முதலில் பள்ளி செல்ல அழுது முரண்டு செய்யும் குழந்தையுடன் நீங்கள் அதீத பொறுமையாக, தட்டிக் கொடுத்து, தாஜா பண்ணி முதல் ஒரு வாரம் கூட்டிச் செல்லத்தான் வேண்டும். இதை விடுத்து நீங்கள் பொறுமை இழந்து முதல் நாளே அடித்துவிரட்டி, அதட்டிஉருட்டினுல்குழந்தை மனத்தில் பள்ளி, படிப்பு இவற்றின் மீது தீரா வெறுப்பு ஏற்பட்டு ஆழ்மனத்தில் அவ் வெண்ணம் ஆழப் பதிந்து விடும்.

6. முதல் முதலாக பள்ளி செல்லும் குழந்தைகளை முதல் நாளிலிருந்தே பள்ளி சென்று வந்தவுடனே வீட்டு அங்கத்தினர் ஒருவர் மாற்றி ஒருவர் 'ரைம் சொல்லு, ஏபிஸிடி சொல்லு' என்று நச்சரிக்காதீர்கள். மாருக, அதனிடம் பள்ளியைப் பற்றி, டீச்சரைப் பற்றி மற்ற குழந்தைகளைப் பற்றி நீங்கள் கேள்வி கேட்டு அவளது அனுபவத்தினை அவளது வாயாலே சொல்லத் தூண்டிவிட லாம்.

7. முதல் ஒரு மாதம் மாலை ஸ்கூல் விட்டு வந்தவுடன் இரவில்ரொம்பக் கண்டிப்புடன், கட்டுப்பாடாக நேரம் காலம் இவை அமைத்து அதற்கு வீட்டுப் பாடம் ஏபிஸிடி என்று கற்றுக் கொடுக்காது சற்று விட்டுப் பிடியுங்கள். அது கேட்கும் அல்லது சொல் லும் நேரங்களில் பாடங்களைச் சொல்லிக் கொடுக்கவும்.

8. இதுபோல் காலை கண் விழித்து எழுந்த உடனேயே, ஸ்கூல் போக வேண்டியதை ஞாபகப்படுத்தி, அவசரப்படுத்தி அதன் மூடை கெடுக்க வேண்டாம். பள்ளி சேர்ந்த வுடன் முதல் மாதம் இரவில் ஒரு மணி நேரம் வழக்கத்தைவிடச் சீக்கிரமாக படுக்கைக்கு அனுப்பி காலை அரை மணி முன்னதாக எழுப்பி பால் காப்பி தந்த பின் அவர்களை என்றும் போல் சிறிது விளையாட விட்டு விட்டு பின் குளிக்கும் நேரத்தில் குளிக்க வைத்து காலை சிற்றுண்டி அளித்த பின், பள்ளிக்குச் செல்ல வேண்டியதை ஞாபகப் படுத்தி டிரஸ் பண்ணி தயார் படுத்துங்கள். காலை உணவு முடிக்கும்வரை பள்ளியை பற்றி குறிப்பிட வேண்டாம். ஞாபகப்படுத்த வேண்டாம்.

9. இருவரும் ஆபீஸ் போகும் பெற்ருேர் கள், முதல் ஒரு மாதம் உங்கள் குழந்தை பள்ளி செல்லப் பழகும்வரை சற்று தினம் ஒரு மணி காலையில் முன் எழுந்து உங்கள் வேலைகளை முதலில் முடித்துக் கொண்டு, உங்கள் குழந்தையை அமைதியுடன் சற்று நிதானமாகக் கிளப்பி பள்ளி செல்லத் தயார் படுத்துங்கள். நீங்கள் வேலைகளில் லேட்டாகி, உங்கள் டென்ஷன் அவசரத் தினை, உங்கள் குழந்தை கண் விழிக்கும் போதே அதன் மீது கொட்டி, அதைத் திட்டி அவசரப்படுத்தி, அடித்துப் பயமுறுத்தி உங்கள் டென்ஷனை அதன் தலையிலும் திணித்து அதை பீதியுறச் செய்யாதீர்கள். இதனால் தினம் பள்ளி போவது வீட்டில் ஒரு களேபரமாகத்தான் முடியும்.

எப்படிப்பட்ட குழந்தைக்கும் பள்ளி சேர்ந்தவுடன் முதல் மாதம்தான் சற்று கஷ்ட மான காலம். இந்த ஒரு மாதம் பெற்ருேர் களாகிய நீங்கள் சற்று அதீத பொறுமை, நிதானம், அமைதியான அணுகுமுறையுடன் மேற்சொன்ன வழிமுறைகளைப் பின்பற்றி னுல், வெகு எளிதில் உங்கள் வீட்டு செல்லப் பிள்ளையையும் சிரமமின்றி பள்ளிச் செல்லப் பழக்கப்படுத்தி விடலாம்.

— ஜெயலட்சுமி

நம் அரசு மதுவிலக்கைக் கொண்டு வந்தது பற்றிச் சந்தோஷப்பட வேண்டி யதுதான். 'குடி குடியைக் கெடுக்கும்' என்று மதுக்கடைகளில் வாசகங்கள் போய், 'பிராந்தி லைவன் குடியுங்கள்' என்று அதற்கு அரைகுறை ஆடைகளுடன் ஒரு பெண்ணின் படத்தையும் போட்டு விளம்பரம் செய்யும் மதுக் கடைகளை அரசு கொஞ்சம் கவனிக்க வேண்டும்.

சினிமாவிற்கு நாங்கள் சென்றிருந்த போது விளம்பரத்தில் அரைகுறை ஆடை களுடன் பிராந்தி பாட்டில் ஏந்திய பெண் களின் ஸ்லைடுகளைப்பார்த்துக்குமுறினேன். எப்போது மதுவிலக்கு அமலுக்கு வந்து விட்டதோ அப்போதே மது விளம் பரத்தையும் தடை செய்ய வேண்டும். இது முன்னுக்குப்பின் முரணுன விஷய மாக இருக்கிறது. அரசு மக்களின் மேல் அக்கறை கொண்டு மதுவைத் தடை செய் துள்ளது. இதே அக்கறையை இந்த விஷ யத்திலும் காட்டி முழுமையான நற்பெய ரைத் தேடிக் கொள்ளும் என்று நான் நம்புகிறேன்.

— இந்திரா கோபாலன்.



# வளரும் வயதில் குழந்தைகளுக்குத் தேவை காம்ப்ளான்



**காம்ப்ளான் ஒன்றில்தான் அவர்களுக்கு அன்றுடம் தேவைப்படும் 23 ஊட்டச் சத்துக்கள் அடங்கியுள்ளன.**

சாதாரணமாக 15 அல்லது 16 வயதிற்குள் குழந்தைகளின் வளர்ச்சி பெரும்பாலும் முழுமையடைந்து விடுகிறது. அவர்களுடைய வளர்ச்சிக்கு நேரடியாக உதவுவது புரதம் என்ற சத்துதான். ஆகவே உங்கள் குழந்தைகளுக்கு தேவை காம்ப்ளான்—இப்போது. காம்ப்ளான் சிறந்த புரதம் கொண்டுள்ளது—பால் புரதம் (20%) அது 22 மூலதார சத்துணவுகளும் கொண்டதாகும்.

காம்ப்ளான் கிடைக்கிறது இனிய சுவைகளில்.




## 23

மூலதார சத்துணவுகள் திட்டமிட்ட விகிதங்களில்

| | |
|---|---|
| புரதம் | ரிபோ |
| கொழுப்பு | ஃப்ளேவின் |
| கார்போ | நிகோடி |
| ஹைட்ரேட் | னமைடு |
| கால்ஷியம் | கால்ஷியம் |
| பாஸ்பரஸ் | பேன்டோதெனேட் |
| சோடியம் | கோலின் |
| குளோரைடு | பைரிடாக்ஸின் (பி6) |
| (வி வடிவில்) | வைட்டமின் (பி12) |
| பொட்டாஷியம் | ஃபாலிக் அமிலம் |
| இரும்புசத்து | வைட்டமின் ஸி |
| அயோடின் | வைட்டமின் டி |
| வைட்டமின் 'ஏ' | வைட்டமின் ஈ |
| வைட்டமின் 'பி1' | வைட்டமின் கே |

பால் சேர்த்திடத் தேவையில்லை.



**காம்ப்ளான்® — திட்டமிட்ட பரிபூரண உணவு**



# "சமுதாய உணர்வு வேண்டும்!"

தமிழ்நாட்டில் ஆங்காங்கே ஏராளமான சமூக சேவை நிறுவனங்கள் செயல்பட்டு வருகின்றன. மகளிர் மன்றங்கள், அரிமா, அரிவையர் சங்கங்கள், ரோட்டரி, இன்னர் வீல், ரவுண்ட் டேபிள், ஜேசீஸ்.... இன்னும் நிறைய....

அரசாங்கமும் இப்படிப்பட்ட சமூக சேவை நிறுவனங்களை ஓரளவு பொருளுதவி கொடுத்து ஊக்குவிக்கின்றன, சமூக நலத்துறை சமூக நல வாரியம் எனும் இரண்டு அமைப்புக்களின் மூலமாக.

ஆனால் பலருக்கும் அரசாங்கம் என்ன உதவிகள் செய்கின்றன எனத் தெரிவதில்லை. இவ்விரு தரப்பினரும் சந்தித்தால்....?

இங்கே சந்திப்பவர்கள் —

திருமதி ஷீலா ராணி சுங்கத் — இயக்குனர் சமூகநலத்துறை, தமிழக அரசு,

| | | |
|---|---|---|
| திருமதி கீதா விஸ்வநாதன் | — | கௌரவ செயலாளர், கில்ட் ஆஃப் சர்வீஸ், |
| திருமதி லலிதா சேதுராமன் | — | ஈவ்ஸ் கிளப், கும்பகோணம், |
| திருமதி மயிலாம்பிகை குமரகுரு | — | அரிமா அரிவையர் சங்கம், வேலூர், |
| திருமதி நிர்மலர் தேசிகன் | — | தலைவி, ரோட்டரி இன்னர் வீல் |
| குமாரி லதா சேஷாத்ரி | — | மனவியல் நிபுணர் சி.பி. ஆர்ட் சென்டர் |
| திருமதி பொன்னி சுப்பிரமணியம் | | |
| திருமதி பத்மா ராமச்சந்திரன் | — | தேவி துளசி மாதர் சங்கம் |
| திருமதி ஷமீம் சாதிக் | — | கில்ட் ஆஃப் சர்வீஸ் |
| திரு ஆறுமுகம் | — | சமூக சேவகர் |

ஷீலாராணி: நிறைய பேர் சமூக நலத் துறையையும் சமூக நல வாரியத்தையும் போட்டுக் குழப்பிக்கிறாங்க. இது வேறே, அது வேறே, சமூக நலத் துறை கைம்பெண்கள், உடல் ஊனமுற்றவர்கள், போன்றவர்களுக்கும், பால்வாடி போன்று கிராமங்களில் இருக்கிற அமைப்புகளுக்கும் உதவி செய்யும். இன்னும் ஏராளமான உதவிகளை செய்து வருகிறது. தமிழக அரசுதான், இப்படிப்பட்ட சமூக சேவைகளை ஊக்குவித்து நிறைய உதவிசெய்கிறதுஎனச்சொல்லலாம்.

சமூக நல வாரியமும் இப்படிப் பல உதவி

களைச் செய்து வருகின்றது. பெண்களுக்குத் தையல் போன்ற கைத்தொழில்களையெல்லாம் ஊக்குவிக்கிறோம்.

லலிதா: நாங்க கும்பகோணத்துல வருஷா வருஷம் 'மாஸ் மாரேஜ்' ஒண்ணு செய்து வருகிறோம். ஏழைத் தம்பதிகளுக்குக் கல்யாணம் செய்யறோம். ஆனா கிராமவாசிகளான அவர்களுடைய கல்யாணத்தைப் பதிவு செய்ய போறப்ப 'பர்த் சர்டிபிகேட்' கேக்கறாங்க. அவங்க பிறப்பை எங்க பதிவு செய்து இருப்பாங்க?

ஷீலா: ரிஜிஸ்டரார் ஆபிஸில் பிறப்புச் சான்றிதழ் கேட்கறதுலே தப்பில்லே. ஏன்னா, பெண்ணுக்குப் பதினெட்டும், ஆணுக்கு இருபத்தியொன்றும் நிறைஞ்சிருக்கான்னு தெரியணுமே. ஆனா நீங்க சொல்ற மாதிரி கிராமங்களில் பிறப்பைப் பதிவு செய்ய முடியாதுதான். நீங்க அந்தக் கிராமத்து முன்சிப் பிடம் அல்லது டாக்டர் சர்டிபிகேட் வாங்கிக் கொடுங்கள்.

நிர்மலா: உங்க துறை நிறைய உதவிகளைச் செய்யறதாச் சொன்னீங்க. ஆனா பல மாதர் சங்கங்களுக்கு யாரை அணுகறதுன்னு தெரியலே. நீங்க ஏன் உங்க உதவிகளைப் புத்தகமா போடக் கூடாது?"

ஷீலா: இப்பவே போட்டிருக்கோம். தேவைப்பட்டவங்க எழுதி வாங்கிக்கலாம். எந்த மகளிர் சங்கமா இருந்தாலும் எங்களைத் தாராளமா அணுகலாம். நாங்க அவர்களுக்கு உதவி செய்வோம். மத்திய அரசும் கூட இப்படிப்பட்ட 'வாலண்டரி சர்வீஸ்' செய்பவர்களை அதிகம் ஊக்குவிக்க வேண்டும் எனக் கூறுகிறது.



மயிலா: எல்லா சேவை நிறுவனங்களுக்கும் நீங்கள் உதவி செய்கிறீர்களா?

ஷீலா: அது சாத்தியமா? நாங்கள் தரும் பண உதவியை அவர்கள் தவறாகப் பயன்படுத்தலாம் இல்லையா? அதனால்தான் சில நிபந்தனைகள் வைத்திருக்கிறோம். அதுவும் தவிர அவர்கள் எங்கள் துறையின் கீழ் பதிவு செய்யப்பட வேண்டும்.

நிர்மலா: எங்களுடைய ரோட்டரி இன்னர் வீலே உங்களுடைய துறையில் பதிவு செய்ய முடியாது. ஆனால் உலகில் பல நாடுகளுடன் இணைந்து சேவை செய்யும் நிறுவனம் எங்களுடையது. அப்படிப்பட்ட நிலையில் நீங்கள் ஏன் உதவி செய்யக் கூடாது?

ஷீலா: உங்களைப் போன்ற உலகறிந்த அமைப்புக்களுக்குச் செய்யலாம். நீங்கள் முறையாக அணுகுங்கள். நான் செய்கிறேன். ஆனால் அடுத்து வரும் இயக்குநரும் இதே கொள்கையைப் பின்பற்றுவார் எனச் சொல்ல முடியாது.

பொன்னி: நாங்கள் புதிதாக மகளிர் சங்கத்தை ஆரம்பித்து இருக்கிறோம். எங்களுக்கு என்ன மாதிரி உதவிகளைச் செய்வீர்கள்?

ஷீலா: நீங்கள் தையல் வகுப்புக்கள் ஆரம்பிக்கலாம். தையல் படிக்கும் ஏழைப் பெண்களுக்கு 'ஸ்டைபண்ட்' தருகிறோம். மிஷின் வாங்க உதவுகிறோம். அருகிலுள்ள சத்துணவு





கூடம், பால்வாடி போன்றவற்றை உங்கள் கண்காணிப்பின்கீழ் எடுத்துக் கொண்டால் அதற்கும் உதவுகிறோம். கலப்புத் திருமணம் செய்து கொள்ளும் தம்பதிகளுக்கு உதவி செய்கிறோம். கைம்பெண்களின் மகளின் திருமணத்திற்கு உதவுகிறோம். உங்களைப் போன்று புதிதாகத் தொடங்கும் மாதர் சங்கங்கள் எங்களின் கீழ்ப் பதிவு செய்து அணுகினால் நேரிலேயே விவரங்களைத் தருகிறோம்.

பத்மா: நாங்க முப்பது பேர்தான் இருப்போம். எப்படி ரிஜிஸ்டர் செய்வது?

கீதா: முப்பது பேரா? ஏழு பேர் இருந்தால் போதும்மா ரிஜிஸ்டர் செய்வதற்கு!

லலிதா: உங்களிடம் உதவிகளைப் பெற்றால் ரொம்பத் தொல்லை என்கிறார்களே. முப்பது ரூபாய் கொடுத்துவிட்டு முப்பதாயிரம் கேள்விகள் கேட்பார்கள் என்கிறார்களே...

ஷீலா (சிரித்து): கணக்கு வழக்குகளைச் சரியாக வைத்துக் கொண்டு, முறையாக சேவை செய்து வந்தால் எந்தச் சிக்கலும்



வராது. அரசு உங்களைப் போன்ற சேவை அமைப்புக்களுக்கு உதவ காத்திருக்கிறது. நீங்கள்தான் அதை முழுமையாகப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

ஷமீம்: இன்றைய பெண் படுகிற கஷ்டங்கள் நிறைய. கல்யாணமாகி திரும்பும் பெண்ணை பிறந்த வீட்டில் ஏற்றுக் கொள்வதில்லை. புகுந்த வீட்டிலும் விரட்டப்படும் போதோ அல்லது மிகுந்த குழப்பமான நிலையிலோ ஓரிரண்டு நாள் இருப்பதற்கு ஒரு அமைப்பை ஏற்படுத்தினால் என்ன?

அதாவது ஒரு எமர்ஜென்ஸி என்று வந்தால் உங்கள் சமூக நலத் துறை பெண்களுக்கு உதவுமா?

ஷீலா: இப்போதே ஷெல்டர் ஹோம் தாம்பரத்தில் இருக்கிறது. அங்கு தங்கலாம். அதுவும் தவிர பெண்களின் பிரச்னைகளைப் புரிந்து அறிவுரை சொல்லவே ஒரு 'கௌன்ஸிலிங் பீரோ' வைத்திருக்கிறோம். ஒவ்வொரு மாவட்டத்திலும் 'குடும்ப கோர்ட்'டுகள் அமைத்திருக்கிறோம்.

மயிலா: சரி. நீங்கள் சொல்கிற இந்த பெண்களுக்கு உதவும் ஷெல்டர் ஹோம் கட்ட மகளிர் சங்கங்களுக்கு உதவுவீர்களா?

ஷீலா: நிச்சயமாக உதவி செய்யலாம். இப்போதே பெண்கள் விடுதிகள் கட்ட உதவி செய்து கொண்டுதான் இருக்கிறோம்.

ஆறுமுகம்: ஒரு கிராமத்தைத் தத்து எடுத்துக் கொண்டு ஒரு சமூக சேவை நிறுவனம் தொண்டு செய்கிறது. அங்கு ஏற்கெனவே பால்வாடி நடந்து கொண்டு இருக்கிறது. அதை இவர்கள் எடுத்துக் கொள்ளலாமா?

ஷீலா: தாராளமாக எடுத்து நல்ல முறையில் நடத்தலாம்.

ஆனால் அரசாங்கம் என்பது மிகப் பெரிய அமைப்பு. ஒவ்வொரு வேலையும் சரியாக நடக்கிறதா என பக்கத்திலேயே போய் உட்கார்ந்து கண்காணிக்க முடியாது. இப்படிப்பட்ட நிலையில்தான் உங்களைப் போன்ற சமூக சேவை நிறுவனங்கள் அக்கறை கொண்டு செயலாற்ற வேண்டும் என எதிர்பார்க்கிறது. சமூக சேவை நிறுவனங்களின் கண்காணிப்பு, சமுதாயத்தின் ஒத்துழைப்பு இரண்டும் இருந்தால் நம்முடைய திட்டங்களை நல்ல முறையில் நிறைவேற்றலாம்.

லதா: தமிழ்நாட்டில் சத்துணவுக் கூடங்களின் நிலைமை ரொம்பப் பரிதாபமாக இருக்கிறது. கூடங்களைச் சுற்றித்தான் கழிப்பிடமே.

ஷீலா: சமுதாய ஒத்துழைப்புன்னு நான் சொன்னது இதைத்தான். நம் குழந்தைகள் வந்து சாப்பிடுகிற இடம்தானே இது எனத் தாய்மார்கள் பொறுப்புடன் நடந்து கொள்ள வேண்டும். குழந்தைகளுக்கு அடிப்படைச் சுகாதாரங்களைக் கற்றுத் தர வேண்டும். அந்தந்த ஏரியாவில் இருக்கும் சமூக சேவை நிறுவனமும் அடிக்கடி இவற்றைக் கண்காணித்து சுத்தமாக, தரமாக வைத்துக் கொள்ளச் செய்தால் அதுவே பெரிய சமூக சேவைதான்.

மயிலாம்பிகை: நாங்க ஒவ்வொரு வருடமும் சில ஏழைக் குழந்தைகளுக்கு புக்ஸ் கொடுக்கிறோம். ஆனா நிறைய பேர் கேக்கறாங்க. இதுக்கு உங்க துறை உதவி செய்யுமா?

ஷீலா: நாங்களே இலவச பாடப் புத்தகங்களை பள்ளிப் பிள்ளைகளுக்குத் தர்றோம். நீங்க இந்த விஷயமா கேட்க வேண்டியது கல்வித் துறையை.

லதா: நீங்க ஏன் உங்களிடம் ரிஜிஸ்டர் செய்திருக்கும் நிறுவனங்களை அழைத்து மீட்டிங் போடக் கூடாது?

சீதா: போட்டாங்களே. சமீபத்திலே கூட நூற்றுக்கணக்கான சமூக சேவை அமைப்புக்கள் இதில் கலந்து கொண்டன.

ஷீலா: அதுவும் தவிர சமீபத்தில எல்லா மாவட்ட சமூக நல அதிகாரிகளுக்கும் ஒரு

கற்றறிக்கை அனுப்பி இருக்கிறேன். அந்தந்த மாவட்டத்தில் இருக்கும் சமூக நல அமைப்புக்கள் அனைத்தையும் பற்றி அவர்கள் தெரிந்து வைத்திருக்க வேண்டும். அதிகாரிகளை அவர்களை விசாரித்துத் தெரிந்து கொள்ள வேண்டும் எனக் கூறியிருக்கிறேன்.

ஆறுமுகம்: மேலும் பல பொது நலப் பணிகளை இப்படிப்பட்ட அமைப்புக்களுக்கு விடலாமே. போலீஸ்கூட டிராபிக் கண்ட்ரோல், இரவு ரோந்துப் பணி போன்றவற்றிற்கு இவர்களின் உதவிகளை நாடுகின்றன.

ஷீலா: நாங்களும் மோட்டார் வாகன வரிகளை வசூலிக்கும் பொறுப்பை விட்டிருக்கிறோம். தபால் பணி, ஸ்டாம்ப் பத்திர விற்பனை போன்றவற்றைக் கூட சமூக நல சேவை நிறுவனங்களுக்குத் தரத் திட்டமிட்டுள்ளோம்.

லலிதா: எல்லாம் சரி, ஆனால் பொதுவாகவே சமூக சேவகிகளைப் பற்றிய கேலியான அபிப்ராயமே நிலவி வருகிறது. இவளுக்கென்ன வேலை? வீட்ல வேலை செய்யாம வந்துட்டா, அங்கேருந்து என்றுதான் சொல்கிறார்கள்.

கீதா: இல்லேம்மா. அந்த நிலை இப்போ ஓரளவு மாறியிருக்குன்னுதான் சொல்லணும்.

லலிதா: ஓரளவுதானே? நான் சொல்ல வந்தது வேறே விஷயம். ஒரு குடும்பத்தில் தகராறு. அந்தப் பெண் அழுது கொண்டே எங்கள் சங்கத்திற்கு வந்தாள். நாங்கள் சமாதானப்படுத்தி கணவரிடம் கொண்டு சேர்த்தோம்.

''யார் பக்கம் தவறிருந்தாலும் அந்தப் பெண் வாழவே விரும்புகிறாள். அவளை மன்னித்து ஏற்றுக் கொள்ளுங்கள்...'' என்றோம். அவர்கள் எங்களைப் பேசிய பேச்சு இருக்கிறதே! கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளாத குறைதான். ''எங்க வீட்டு விவகாரத்தில் நுழைய நீங்கள் யார்?'' என கன்னாபின்னாவென திட்டினார்கள்.

பெண்களின் பாதுகாப்புக்குச் செல்லும் எங்களைப் போன்ற சமூக சேவகிகளின் பாதுகாப்புக்கு என்ன செய்வீர்கள்?

ஷீலா (சிரித்து): இதில் பல விஷயங்கள் இருக்கின்றனம்மா. சமூக சேவை என்று வந்து விட்டாலே ஒரு சில அபிப்ராயங்களைத் தாங்கித்தான் ஆகவேண்டும். ஆனால் அவை இப்போதெல்லாம் மாறி வருகின்றது.

இரண்டாவது.இப்படிப்பட்ட சமயங்களில் சமூக சேவை நிறுவனங்களுக்குள்ள பொறுப்புக்களை நீங்கள் விவரிக்க வேண்டும். யாரோ எனக்கென்ன வந்தது என்று யாருமே இருந்து விட முடியாது. நீதிமன்றங்களில் கூட தனிப்பட்டவர்கள் எழுதும் கடிதங்களையே மனுவாக ஏற்றுக் கூட வழக்கு தொடர்கிறார்கள்.

அடுத்தது பிரச்னை என வருமானால் நீங்கள் காவல்துறையின் உதவியை நாடலாம். இப்படிப்பட்ட நிறுவனங்களுக்கு அவர்கள் நிச்சயம் உதவுவார்கள்.

மீண்டும் பழைய கருத்தைத்தான் இந்த இடத்தில் வலியுறுத்த விரும்புகிறேன். நாங்கள் உங்கள் சேவைகளுக்கு உதவ காத்திருக்கிறோம். நீங்களும் சமுதாய உணர்வோடு பணியாற்றுங்கள். அரசாங்கத்திலும் பல துறைகளுடனும் நீங்கள் இணைந்து பணியாற்றினால் நல்ல சமூக நலத் திட்டங்களை நிறைவேற்றலாம்.

ஏற்பாடு. தொகுப்பு: **டி. ஆர். ரமேஷ்**

புகைப்படங்கள்: **யோகா**

# இம்மாத இல்லத்தரசி போட்டி

பொருள்: மாம்பழம்

கடைசித் தேதி: 15.6.87

**சமையல் கூப்பன்**

................ என்று தலைப்பில் சமையல் குறிப்பை இத்துடன் அனுப்பியுள்ளேன். இச் சமையல் குறிப்பு இதுவரை எந்தப் பத்திரிகையிலும், எந்தப் புத்தகத்திலும் வெளியானதல்ல என்று உறுதி கூறுகிறேன்.

கையொப்பம்

# ஏன் இந்த அதிருப்தி?



படிப்பு முடிந்துவிட்டது. வேலை கிடைத்து விட்டது. நல்ல இடத்தில் கல்யாணமும் ஆகி விட்டது. ஃப்ரிட்ஜ், டீ.வி. வாங்கியாகிவிட்டது. அழகான ஒரு பிள்ளை பிறந்தாயிற்று. வீடு கட்டியாயிற்று. காரும் வாங்கியாகிவிட்டது. எல்லாம் ரொம்ப சந்தோஷமான சமாசாரங்கள்தான். தனித்தனியாகக் கொண்டாடியாகிவிட்டது.

ஒவ்வொன்றிற்கும் எதிர்பார்த்து, காத்திருந்து அடைந்தாகி விட்டது.

ஆனால் இன்னமும் ஏன் இந்த அதிருப்தி. ஒவ்வொரு நிகழ்ச்சிக்கு முன்பும் இதுதான் 'முடிவான குறிக்கோள்' போலத் தோன்றியதே. ஒரு சின்ன உற்சாகத்திற்குப் பின் மறுபடி ஏனோ யந்திர வாழ்க்கையாகி விடுகிறதே?

இதுதானா வாழ்க்கை, இவ்வளவுதானா என்று ஏன் இந்த மனத்தளர்ச்சி?

இதென்ன? இந்தப் படிப்பு படித்திருக்கக் கூடாதோ, இவரை மணந்து கொண்டிருக்கக் கூடாதோ, இந்த இடத்தில் இப்படி வீடு கட்டியிருக்கக் கூடாதோ, இந்த ஊரில் இல்லாமல் அந்த ஊரில் இருக்க வேண்டுமோ என்று எப்பொழுதும் ஒரு சஞ்சலம்.

பட்சணம் நன்றாகச் செய்ததும் ஒரு திருப்தி. பாத்திரங்களை நன்றாக அலம்பிக் கவிழ்த்து துடைத்து ஒழுங்காக வைத்த போது ஒரு திருப்தி. நன்றாகத் துவைத்து உலர்த்திய துணியை அழகாக மடித்து இஸ்திரி போட்டு அலமாரியில் அடுக்கி வைத்ததும் ஒரு திருப்தி. வீட்டைச் சுத்தமாக வைத்துக் கொண்டிருக்கிறாய், என்று மற்றவர்கள் பாராட்டியதும் ஒரு பெருமிதம் என்று இருந்தாலும், இரவு படுக்குமுன், என்ன வாழ்க்கை இது, சமைப்பதும் சாப்பிடுவதும், தூங்குவதுமாக என்று ஒரு அலுப்புத் தோன்றுகிறதே.

வீட்டு வேலைகளைச் செய்து கொண்டு சந்தோஷமாக இருக்கும் பெண்களையும், ''நீ வேலைக்குப் போகவில்லையா?'' என்று கேட்டுக் கேட்டுத் தன்னிடமே சந்தேகம் கொள்ள வைத்துவிடுகிறார்களே. கைவேலை செய்வதையும் புத்தகம் படிப்பதையும், ஸ்வெட்டர் பின்னுவதையும், தோட்ட வேலை செய்வதையும், ஏதோ போக்கத்துப் போய் செய்வதாக அல்லவா நினைக்கிறார்கள்?

இந்தத் திருப்தியற்ற மனநிலைக்குக் காரணம் என்ன? எதெல்லாம் இருந்தால் சந்தோஷமாக இருக்க முடியும் என்று சமூகம் குறிப்பிட்டுச் சொல்கிறதோ அதெல்லாம் சரியான அளவுகோல்கள் இல்லையோ?

இந்த நம் மனநிலை ஓர் எச்சரிக்கை. இது பல விஷயங்களைத் தெரிவிக்கிறது. முக்கியமாக:

1. நம் தேவைக்கும் வெளி நடப்புக்கும் ஓர் ஒட்டுதல் இல்லை.
2. சுற்றுப்புறச் சூழ்நிலை சரியாகத்தான் இருக்கிறது. ஆனால் நம் எண்ணத்தில் அபிலாஷையில் பெரிய மாற்றம் ஏற்பட்டிருக்கிறது.
3. உங்களுக்கு எது வேண்டுமென்று உங்களுக்கே தெரியவில்லை.
4. எதுகிடைத்தாலும்திருப்திப்படத்தெரியாதவர், நீங்கள்.
5. நம் எல்லோருக்குமே சந்தோஷத்தைப் பற்றிய ஒரு தப்பான அபிப்பிராயம் அல்லது வக்கிரமான எண்ணம் இருக்கிறது.

ஒருவன் எப்படியெல்லாம் இருந்தால் சந்தோஷமாக இருக்க முடியும் என்பதன் வரைமுறை சமூகக் கண்ணோட்டத்தில் மாறிக் கொண்டே வருகிறது.

பாட்டி, வீட்டு வேலைகளைச் செய்து கொண்டு குடும்பத்தவரின் தேவைகளைக் கவ

ளித்துக் கொண்டு பூஜை, விசேஷம் என்று தீவிரமாக ஈடுபாடு கொண்டு சந்தோஷமாக இருந்தாள். (அதாவது அப்படித்தான் நாம் நினைக்கிறோம்.)

சில பெண்கள் படிக்க ஆரம்பித்த காலத்தில் படிக்காத அம்மா வருத்தப்பட்டாள்.

சில பெண்கள் வேலைக்குப் போகும் காலத்தில், படித்தும் வேலை பார்க்காத பெண், மனக்கிலேசம் அடைந்தாள்.

படித்து, வேலை பார்த்து, கேரியர், ப்ரொஃபெஷன் என்று மேலும் மேலும் முன்னேறும் பேத்தி, வீட்டுப் பராமரிப்பு, குழந்தை வளர்ப்பு முதலியவற்றில் அவ்வளவு கவனம் செலுத்தமுடியவில்லையே என்று வருத்தப்படுகிறாள்..

மாறி வரும் இந்த சமூக நடப்புக்கள் எல்லோருக்கும் பொருந்துவதில்லை. நாம் எல்லோரும் ஒரே தெய்வத்தை, ஒரே மாதிரியாகவா வழிபடுகிறோம்? எல்லோரும் ஒரே வகையான உணவு வகைகளை, ஒரே விதமான உப்பு உரைப்புடனா ரசிக்கிறோம்? புடைவையில் ஒரே கலர், நகையில் ஒரே மோஸ்தரா எல்லோரும் அணிந்து கொள்கிறோம்? அப்படியில்லாத பொழுது, பெண் என்றால் இப்படி இருக்க வேண்டும், சந்தோஷமாக இருக்க வேண்டுமானால் இதை இதைச் செய்ய வேண்டும் என்று பொதுவாக எப்படி ஒரு விதிமுறையைப் பின்பற்றப் பார்க்கலாம்?

அதிருப்தி என்பது கற்பனையில் நாம் அடைய நினைக்கும் நிலைக்கும், நம் உண்மை நிலைக்கும் இடையே உள்ள இடைவெளியின் அளவே.

சின்ன வயதில் பெரியவர்களைப் பார்த்து, அவர்கள் பயமில்லாமல், தன்னம்பிக்கையுடன், எல்லாம் தெரிந்தவர்களாக இருக்கிறார்கள், நாமும் பெரியவர்கள் ஆகி அப்படி இருப்போம் என்று நினைத்தோம். (பெரியவர்கள் அப்படி ஒரு அபிப்பிராயத்தை நம்மிடம் ஏற்படுத்தவில்லை. இது நாமே அவர்களைப் பற்றிக் கொண்ட தப்பான அபிப்பிராயம்.)

நாமும் பெரியவர்களாக ஆன பின்பும், இந்தக் குழந்தைத்தனமான எண்ணம் தொடர்கிறது. பிரச்னைகள் இல்லாத, மன நிறைவு கொண்ட அந்த மேஜிக் மோமென்ட் வரக் காத்திருக்கிறோம். ஒவ்வொரு சமயமும் இதோ அடுத்த நிகழ்ச்சியில் நிறைவு வந்து விடும் என்று எதிர்பார்க்கிறோம். ஆனால் நிறைவு என்பது இன்னமும் கொஞ்சம் தூரமாகவே இருக்கிறது.

நம் பெற்றோர்களும் நம்மைப் போலவே தான் ஒவ்வொரு நிலையையும் தாண்டியிருப்பார்கள் என்பது புரிந்த பின்பும், சிநேகிதர்களில், தெரிந்தவர்களில், அக்கம் பக்கத்தில் இருப்பவர்களில் சிலரை, நாம் ஆதர்சப் பெண்ணாக, மனைவியாக, குடும்பமாக கற்பனை செய்து கொண்டு, நாம் அப்படியில்லையே என்று குறைப்படுகிறோம்.

அப்படி ஆதர்சத் தம்பதிகளாக இருப்பவர்கள் என்று நினைத்துக் கொண்டிருப்பவர்களிடம் நெருங்கிப் பழகும் பொழுது, கணவனுக்கும், மனைவிக்கும் இடையே அடிக்கடி வாக்கு வாதம் வரும் என்று தெரிவது கூட ஒரு விதத்தில் நமக்கு ஆறுதல் அளிப்பதாக இருக்கிறது. யாருமே பர்ஃபெக்ட் இல்லை. எவர் வாழ்விலும் சில குறைகள் இருந்து கொண்டேதான் இருக்கும் என்பது புரிகிறது. அப்படியானால் சந்தோஷமாக இருக்க வழியே கிடையாதா?

உண்டு.

1. முதலாவதாக வாழ்க்கையில் உள்ள மாற்ற முடியாத குறைகளை ஏற்றுக் கொள்ளப் பழகிக் கொள்ள வேண்டும்.
   மாற்றமுடிந்தவற்றை மாற்றமுயற்சிக்க வேண்டும். இது நம் வளர்ச்சிக்கு மிகவும் அவசியம்.

2. இந்த 'இன்னமும் வேண்டும், இன்னமும் வேண்டும்' என்ற தணியாத தாகம் நம் அதிருப்திகளுக்குக் காரணமாகவும் இருக்கலாம். அல்லது நம் படைக்கும் ஆற்றலை வளர்ப்பதாகவும் இருக்கலாம்.

   'இவ்வளவுதானா வாழ்க்கை?' என்று தோன்றும் பொழுது, 'இல்லை, அடைய வேண்டியது இன்னமும் இருக்

---

ஜவ்வரிசி வடகம் செய்யத் தேவையான படி கூழ் கிளறிக் கொள்ளவும். உப்பு, காரம் எலுமிச்சைச் சாறு சேர்த்துக் கலக்கவும். இந்தக் கூழை மூன்று பகுதிகளாகப் பிரித்துக் கொண்டு ஒரு பகுதியைத் தனியே எடுத்து வைத்து விடவும்.

புதினாவையும் கொத்து மல்லித் தழையையும் நைசாக அரைத்து இரண்டாம் பகுதிக் கூழோடு கலந்து கொள்ளவும். தக்காளிப் பழங்கள் சிலவற்றைச் சாறு எடுத்து விதை இல்லாமல் வடி கட்டவும். இந்தச் சாற்றை மூன்றாம் பகுதிக் கூழோடு கலந்து அடுப்பில் வைத்து ஒரு கிளறு கிளறி இறக்கவும். ஒரு பாலிதின் பேப்பர் மீது எண்ணெய் தடவிக் கொள்ளவும். முதலில் தக்காளி கலந்த கூழை ஒரு ஸ்பூனால் 3" × 1" என்ற அளவில் ஒரு வரி செவ்வக வடிவில் ஊற்றவும். இதன் மேலே ஒட்டினாற்போல் அதே அளவில் வெள்ளை நிறத்திலும் அதற்கும் மேலே பச்சை நிறத்திலும் கூழை விடவும். இது மூன்று நிறங்களோடு கூடிய ஒரு செவ்வகமான அழகிய வடகமாக இருக்கும். மிகவும் மணமாகவும் சுவையாகவும் இருக்கும்.

— விசாலாட்சி

# உங்கள் தலைவலிக்குத் தேவை ஒரு சிறந்த ஸ்பெஷலிஸ்ட்.

## ஸாரிடான்.
## தலைவலி நீக்கும் ஸ்பெஷலிஸ்ட்.

சிறந்த ஸ்பெஷலிஸ்ட் யார்? உங்கள் நம்பிக்கைக்கு உகந்தவர். நீங்கள் வலியால் துன்புறும்போது, அதை நீக்கும் சக்திமிக்கவர் என ஒவ்வொரு முறையும் நம்பக்கூடியவர், உங்களுக்கு நிவாரணமளிக்க விரைந்து பணியாற்றுபவர்.

ஸாரிடான் போலவே. எனவேதான் ஸாரிடான் தலைவலி நீக்கும் ஸ்பெஷலிஸ்ட் என்கிறோம். உலகெங்கிலும் அனுபவம் கொண்ட தலைவலி நீக்கும் ஸ்பெஷலிஸ்ட்.

**ஸாரிடான். சிறந்த ஸ்பெஷலிஸ்ட்டைப் போல். ஒன்றே ஒன்று போதுமானது.**




HTA 1123

கிறது. செய்ய வேண்டியது இன்னமும் இருக்கிறது' என்று ஓர் உந்துதலாகக் கொள்ளலாம்.

3. வாழ்க்கையில் ஓர் முடிவான போய்ச் சேரும் இடம், செய்ய வேண்டியதைச் செய்து முடித்துவிட்டோம் என்ற நேரம் கிடையாது என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். ஒரு வேலையைச் செய்து முடிக்கும் பொழுதே அடுத்தின் துவக்கம் ஆரம்பித்து விடுகிறது. புதிதாகச் செய்ய ஆர்வம் தோன்றுகிறது. செய்ய வேண்டும் என்று தோன்றும் ஆர்வத்தில், செய்வதில் இருக்கும் திருப்தி, செய்து முடித்தபின் வெகு நாள் இருப்பதில்லை. சந்தோஷமே ஒன்றை அடைய நாம் எடுத்துக் கொள்ளும் முயற்சி. உழைப்பிலேயே இருக்கிறது.

4. அதிருப்தி தோன்றும் பொழுதெல்லாம் எனக்கு எது வேண்டும், என்னால் எதைச் செய்ய முடியும் என்று தீவிரமாக யோசிப்பது அவசியம்., அப்படி யோசித்துத் தீர்மானித்துச் செயல்படுத்தப் படிப்படியாக முயல வேண்டும்.

யாருடைய அளவு கோலாலும் உங்கள் வாழ்க்கையை நிர்ணயிக்காதீர்கள். அவள் படிக்கிறாள், நானும் படிக்க வேண்டும். அவள் வேலைக்குப் போகிறாள் நானும் வேலைக்குப் போக வேண்டும் என்று தோன்றினால் மட்டும் போதாது. அப்படித் தீவிர ஆசையிருந்தால் செயல்பட முயல வேண்டும். தீவிர ஆசை எந்தத் தடையையும் உடைக்க வல்லது. செய்ய முடியாததற்கு சின்னச் சின்ன காரணங்களைக் காட்டுவீர்களானால் உங்களுக்கு அவ்வளவு தீவிர எண்ணம் இல்லை என்று அர்த்தம். தன் கையாலாகாத் தனத்தை, தன் தகுதியின்மையை மறைக்க மற்றவற்றைக் காரணம் காட்டி, அதனாலேயே உங்கள் ஆசை பூர்த்தியாகவில்லை என்று சொன்னீர்களானால் அதிருப்திதான் மிஞ்சும். ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் இது யோசித்துப் பார்க்க வேண்டிய விஷயம்.

திருப்தியாக இருப்பவர்கள் சிலரை கூர்ந்து கவனித்தீர்களானால், ஓர் உண்மை புலப்படும். அவர்கள் தங்கள் தகுதியை, எண்ணங்களை, ஆசைகளைப் பூரணமாக அறிந்தவர்கள். உலகத்துக்காக வேஷம் போடுபவர்கள் அல்ல. மற்றவர்களின் மதிப்பீட்டிற்காகச் செயல்படுபவர்கள் அல்ல. தனக்கு எது வேண்டும் என்று தெரிந்து கொண்டு ஒரு லட்சியத்துடன் உழைப்பவர்களாக இருப்பார்கள்.

இன்பம் நமக்குள்ளேயேதான் இருக்கிறது. அதை வெளி உலகில் தேடுவதில் பயனில்லை.

— ஜெயா. வி. ராமன்



## 2

சியாமளாராவ்

மகள் பாரதி நாளைக்கு வருவதால், மனத்தில் கொஞ்சம் சந்தோஷம் தலைதூக்கியது. மத்தியான்ன வேளையில் இவளுடைய தனிமை அவ்வளவு தெரியாதில்லையா....

மகளின் வருகைக்காக, என்னென்ன சாமான்கள் வேண்டும் என்று மனத்திலேயே ஒரு லிஸ்ட் போட்டாள். அதற்குள் குழந்தைகள் சாப்பிட டேபிளில் அமர்ந்து, தாளம் போட்டுக் கூப்பிட்டார்கள்.

சாப்பாடு முடிந்து, டிபன் பாக்ஸும் தந்து அவர்களையனுப்பிய பின், பூஜைக்குச் சென்றாள் காமாட்சி.

பூஜையறையில் விழுந்து வணங்கியபின் ஜபமாலையைக் கையில் எடுத்துக் கொண்டாள். மான் தோலின் மீது சப்பணமிட்டு அமர்ந்து கொண்டவள் தலைப்பால் வலது கையை மூடிக் கொண்டு, கண்களையும் மூடி, ஜபிக்கத் தொடங்க, கைகளிலிருந்த மணிகள் ஒவ்வொன்றாய் மாலையிலிருந்து கீழ்நோக்கி உருளத் தொடங்கின. ஸ்லோகங்கள் கூறி, ஸ்ரீராமஜெயம் நூற்றியெட்டு எழுதி முடியும் வரை, அந்த அரைமணி நேரம் அவளுக்கே அவளுக்குத்தான். யார் அழைத்தாலும் சரி, எவரானாலும் சரி, அந்த அரை மணி நேரமும் இறைவனைத் தவிர வேறு யாரோடும் பேசாமல் மௌனமே கடைபிடிப்பாள். அந்த நேரம் இறைவனுடன் ஐக்கியமாகி அவனையே நினைக்கும் நேரமாகும். அதை வேறு எந்த விஷயத்துக்கும் பகிர்ந்தளிக்க அவள் விரும்புவதில்லை.

வேடியோ, பொங்காலியோ வாசலில் காவலிருந்து, வருகிறவர்களை ஹாலில் உட்கார வைத்து விடுவார்கள். அதனால் எந்த விதமான இடையூறும் இல்லாமல் அவளால் ஜபிக்க முடிந்தது.

சைக்கிள் மணி சப்திக்க வரது வந்து ஒரு காலை கீழே ஊன்றி மற்றொரு காலைப் பெடலின் மேலேயே வைத்தபடி, அங்கிருந்தே குரல் கொடுத்தான்.

''வேடிப்பா, பெரிம்மாகிட்டே போய் ஏதாவது சாமான் வேணுமா கேளு. நான் டவுனுக்குப் போறேன். சீக்கிரமாத் திரும்பி வரணும். சீக்கிரமா கேட்டுட்டு வா.''

''வரது தம்பி, கால்ல கஞ்சியைக் கொட்டிக்கினு இப்படிப் பறந்தா நடக்குமா? பெரிம்மா பூசையிலே இருக்கிறாங்க. இப்பப் பேச ஏலாதுப்பா. உனக்கு நேரம் இருந்துச்சுன்னா காத்திருந்து கேளு. இல்லாட்டி போ. பொறவு நான் போய் வாங்கியாறேன்.''

சட்டென்று சைக்கிளிலிருந்து இறங்கியவனாய், உள்ளே வந்து, வண்டியை ஸ்டாண்டு போட்டு நிறுத்தி, அவர்களுடனேயே படியில் உட்கார்ந்தான். சகஜமாய் பேச ஆரம்பித்தான்.

இந்த வரது என்கிற வரதன், காமாட்சி வீட்டுடன் பழக ஆரம்பித்ததே ஒரு வெயில் நேரத்தில்தான். அப்பா, அம்மா இல்லாத அனாதை வரதன். மாமாக்களும், அத்தை, சித்தப்பாக்களும் அவன் பெரியவனாகும் வரை, படிப்பிற்காக, மாறி மாறி, ஒருவர், மற்றொருவரிடம் அவனைப் பந்தாய் நினைத்து உதைத்தார்கள். இத்தனைக்கும் யார் வீட்டில் இருக்கிறானோ, அவர்கள் வீட்டுச் சேவகனாக வேலை செய்து, கொடுத்த ஊசிப் போன பழையதைத் தின்று, பக்கத்து வீட்டு வெளிச்சத்தில் இவன் படிப்பைப் படித்து, கடுமையான வார்த்தைகளைக் கூடப் பனிக்கட்டியாய் நினைத்து விழுங்கி, முதுகில் விழும் அடிகளை, தட்டிக் கொடுப்பதாய் நினைத்துப் பழகி, வாயே திறக்காத அவனை, பள்ளி இறுதி வகுப்பு ஆனதும் அவர்கள் ஒரேயடியாய் வேகமாய் எட்டி உதைத்தபோது, அவன் வந்து விழுந்த இடம்தான் வக்கீல் ராகவாச்சாரி வீடு.

வரதுவின் மென்மையான சுபாவம் ராகவாச்சாரியையும், அவர் மனைவி சாந்தாவையும் வெகுவாகவே ஈர்த்தது. இரண்டு பிள்ளைகளும் வெளிநாட்டில் படித்து, அங்கேயே



வேலை செய்ய, இவர்கள் இருவரும் இந்தப் பெரிய பங்களாவான 'சாந்தி நிலையத்'தில் தனியாகவே இருந்தார்கள். வேலைக்கு ஆட்கள் இருந்தாலும் தன்னுடன் கோர்ட்டுக்கு வர, வாக்கிங் போகும்போது பேச்சுத் துணைக்கு, மாமிக்கு வேண்டிய சில்லறை வேலைகள்செய்யஇத்தியாதிகளுக்குஇவனைப் போன்ற ஒரு வாலிபன் அவசியமாயிருந்தான். வரதுவும் அவர்களுக்குத் தக்கபடி நடந்து நல்ல பெயர் சம்பாதித்தான்.

படிப்பின் மீது அவனுக்கு இருக்கும் ஆர்வத்தையறிந்து, 'கரஸ்பாண்ட்டன்ஸ் கோர்ஸில் படிக்கப் பணம் கட்டினார் சாரி. தெரியாதவைகளைச் சொல்லியும் தந்தார்.

வெயில் நேரத்தில் ஒரு நாள் கடைக்குப் போய் விட்டு வரும்போது நாக்கு வரள, சைக்கிளை உருட்டிக் கொண்டே வந்தான் வரதன். தெருவில் ஈ, காக்கை இல்லை. புரட்டாசி வெயில் தகித்தது. இனியும் முடியாது என்று தோன்றியபோது அவன் நின்ற இடம் காமாட்சியின் வீடு.

"அம்மா.... அம்மா....."

வாசலிலிருந்தே குரல் கொடுத்தான்.

கூடத்தில் அமர்ந்து புத்தகம் படித்துக் கொண்டிருந்த காமாட்சி, வாசல் ஆழிக் கதவின் பின்னாலிருந்து பார்த்தாள்.

"பாட்டி, தாகம் நெஞ்சு வரள்றது. கொஞ்சம் தண்ணீர் தர்றீங்களா?"

வரதன் கூறியதும், கதவைத் திறந்த காமாட்சி, உள்ளே போய்ச் சொம்பில் நீரும்



ஒரு பெரிய டம்ளரில் மோருமாய் வந்தாள். பரிவுடன் தந்தாள். அனுசரணையுடன் அவனைப் பற்றி விசாரித்தாள். அன்று தொடங்கிய வாத்ஸல்யம், இன்று வரை தொடருகிறது.

மனித நேயம் என்பதைச் சாரி வீட்டிலிருந்து உணரத் தொடங்கியவன், இப்போது காமாட்சி வீட்டிலும் அறிந்தான். அனாதை என்பதையே மறந்துவிட்டான். அன்பிலேயே திளைத்தான். ஆனாலும் தன்னை உணர்ந்து கொண்டவனானதினால், வரம்பு மீறிச் செல்லாமல் ஒரு கட்டுப்பாட்டுக்குள்ளேயே நிற்கத் தெரிந்து கொண்டிருந்தான். அதனால் அவர்களுடைய அன்பும், பரிவும் இவனுக்கு நிரந்தரமாகக் கிடைத்துக் கொண்டிருக்கிறது.

"நாழியுகடா வரது. காலையிலேருந்து உன்னைத்தான் நெனச்சுக்கிட்டிருந்தேன். நாளைக்கு எம் பொண்ணு வராத் தெரியுமா? முக்கியமான சாமான்களை லிஸ்ட் போட்டு வெச்சிருக்கேன். வாங்கிண்டு வந்துடடா கண்ணா. சாப்பிட்டியாடா.....?"

"வக்கீல் மாமி கார்த்தாலேயே பழையதும், வடு மாங்காவும் தந்தா. அதோட இட்லி வேறே. வயிறு ஓவர் லோடு. ஊசி குத்த இடமில்லே. டவுனுக்குப் போயிட்டு வந்தப்புறம் பசிச்சா, உங்களைக் கேக்கறேன் பாட்டி. இப்போ ஒண்ணுமே வேண்டாம். சீக்கிரமா லிஸ்டும், பணமும் கொடுங்க".

பரபரத்தான் வரதன்.

அவன் அவசரத்தை உணர்ந்த காமாட்சி, எழுதி வைத்த லிஸ்டையும், பணத்தையும் ஒரு பையில் போட்டு அவனிடம் தந்தாள். அவன் சென்றதும், வாசற்புறக் கதவைச் சாத்திவிட்டு, கொல்லைப்புறம் வாழை மரத்திலிருந்து வாழையிலைப் பறித்து வந்தாள்.

உருளைக்கிழங்கு வதக்கல் கிரிஜாவிற்குப் பிடிக்கும். அதுவும் இந்த கோலி குண்டு உருளைக் கிழங்கு என்றால், கொள்ளை ஆசை. தோல் உரித்த கோலி குண்டு உருளைக்கிழங்கு, உப்பு, காரம், பெருங்காயம் அரைத்துத் தடவி, பொன்னிறத்தில் எண்ணெயில் புரட்டினால் சப்புக் கொட்டிக் கொண்டு சாப்பிடுவாள்....

"குழந்தைக்கு இருக்கட்டும். நமக்கு அப்பளம் சுட்டுண்டாப் போச்சு..." கூறியபடி அப்பளம் எடுத்துச் சுட்டாள் காமாட்சி. சுட்ட அப்பளத்தைக் கையில் எடுத்துக் கொண்டு, திரும்புகையில் தவறிக் கீழே விழுந்து, துண்டு துண்டாய் உடைந்தது.

"ம், காமு.... சுப்புணிக்கு அப்பளத்தை சரியாவே தட்டி உடைக்கத் தெரியலே. நீ நல்லா சுத்தித் தட்டுப் பார்க்கலாம்."

அத்தை கூறியவுடன் நலங்கிற்காக உட்கார்ந்திருந்த காமு பாட்டி எடுத்துத் தந்த அப்பளத்தை, சுப்புணியின் தலையில் இப்படி ஒரு சுற்று, அப்படி ஒரு சுற்றாகச் சுற்றி இரண்டையும் அங்கைகளில் வைத்து அவன் தலைமேல் ஓசையுடன் வேகமாகத் தட்ட, தூள் தூளான அப்பளம் அவன் தலையிலும் முதுகிலும் விழ 'ஹோ....' என்ற சிரிப்பு அனைவரிடத்திருந்தும் எழ, காமு பெருமிதத்துடன் மாலையைக் கையில் திருகியபடி, ஓரக் கண்ணால் அவனை உதட்டைச் சுழித்துப் பார்த்தவுடன், இரண்டும்கெட்டான் வயதிலிருந்த சுப்புணி தடாரென்று எழுந்து போய் விட்டான். அப்போது அவன் பார்த்த பார்வை மட்டும் இன்றும் மனத்தில் இருந்தது.

உடைந்து சிதறிய அப்பளத் துண்டுகளைத் திரட்டும்போது, காமாட்சிக்கு சுப்புணியின் அந்தப் பார்வையே தன்னைத் துளைப்பது போல் தோன்ற, தலையை ஆட்டி நினைவைக் கலைத்து, திரட்டியவைகளைத் தூர எறிந்து, இலைமுன் உட்கார்ந்தான். சாப்பாடு கொள்ளவில்லை. இலையுடன் சுருட்டி எறிந்துவிட்டு, தண்ணீர் குடித்தாள். சமையலறையைச் சுத்தம் செய்தபின், தோட்டத்துப் பக்கமாய் உள்ள கதவைத் திறந்து, வாசற்படியில் தலையை வைத்துப் படுத்துக் கொண்டாள்.

காலையிலிருந்தே வீடு அளி துமளிப் பட்டது. அவரவர் வேலையை நறுக்கென்று முடித்து, குளித்து, அம்மா, அப்பாவின் வருகைக்காகக் காத்திருந்தார்கள். வேடியும் பொங்காலியும் தோட்டத்தின் மூலையிலிருந்து வீடு வரை ஒரு ஒட்டடையோ, தும்போ, தூசியோ இல்லாமல் 'பளிச்' சென்று வைத்திருந்தார்கள். அப்படியும், சின்னம்மா ஒன்றும் தப்புக் கண்டு பிடிக்காமல் இருக்க வேண்டுமே என்று தங்களுக்குத் தெரிந்த தெய்வங்களையெல்லாம் வேண்டிக் கொண்டிருந்தார்கள்.

குழந்தைகளிலிருந்து வேலைக்காரர்கள்

அல்வா கிளறும் போது இறுகி பாறை போல் ஆகிவிட்டால், தலையில் கைவைத்து உட்கார்ந்து விட வேண்டாம். முழுத் தேங்காயை அரைத்துப் பாலெடுத்து அல்வாவில் ஊற்றி, மிதமான சூட்டில் அடுப்பை எரிய வைத்துக் கிளறினால் அல்வா நெகிழ்ந்து கட்டியில்லாமல் கடை அல்வாவைப் போல் ஆகி விடும். இது என் அனுபவத்தில் கண்ட உண்மை.

— உமா.

# நல்ல வளர்ச்சி போர்ன்விடா பயிற்சி!

அன்னையர், அறிவர்: காட்பரியின் போர்ன்விடா கோகோ, மால்ட், பால் மற்றும் அசல் சீனியின் ஊட்ட நலன்களைக் கொண்டது. போர்ன்விடா குழந்தைகள் மிக விரும்பும் அத் தனிச் சுவையை பாலின் குணத்துடன் அளிக்கிறது.

தினமும் போர்ன்விடா அளிக்கப்படும் குழந்தைகள் வேலையிலும் விளையாட்டிலும் கூர்மையோடிருக்கிறார்கள். அது அவர்களுக்கு ஆரோக்கியத்தையும் சுறுசுறுப்பையும் அளிக்கிறது. அவர்களுடைய வளர்ச்சிக்கு எல்லா வகையிலும் நலன் அளிக்கிறது.

அதன் தனிச் சுவையுடன் இணைந்திட்ட இன்றைய வளர்ச்சி.

காட்பரியின்
**போர்ன்விடா**



வரை அனைவருக்கும் பாரதியின் வருகையில் ஒரு எதிர்பார்ப்புடன், பயமும் கூடவே இருந்தது ஒரு நிஜம்தான்.

நகத்தை ஸ்வாரஸ்யத்துடன் கடித்தபடியே வாசலைப் பார்த்துக் கொண்டு நின்றிருந்த கிரியின் தலையை லேசாகக் குட்டினான் பிரபு.

"கிரி, வாயிலேருந்து கையை எடு. அம்மா வரும்போதே மூடை ஸ்பாயில் பண்ணாதே. அம்மாவுக்கு இந்த மாதிரி எச்சில் பண்ணினாப் பிடிக்காதுன்னு தெரியாது?"

மகள், மருமகன் வரவில் நெஞ்சு நிறைய எதிர்பார்ப்பும், துள்ளலும் இருந்தாலும், குழந்தைகள் எதிரில் காட்ட வெட்கப்பட்டுக் கொண்டு, சமையலறையில் கைகள் பரபரப்புடன் வேலையில் ஈடுபட்டிருக்க, காதும் கழுத்தும் வாசலை ஒட்டியே நீண்டிருக்க, கண்கள் அடிக்கடி வாசலை நோக்கிச் சென்று, சென்று மீண்டது.

"ஹாய்! பிரபு, எப்படி இருக்கே, கொஞ்சம் லேசா தொப்பை விழுந்திருக்கிற மாதிரி இருக்கே. ஜாகிங் செய்யறியா இல்லையா...?"

"வேடியப்பா, சாமான்களையெல்லாம் உள்ளே கொண்டு போயி வையி. ஏன் இப்படி மலைச்சுப் போய் நிக்கறே?"

"நீங்க ஏன் அந்தப் பொட்டியைத் தூக்கிட்டு வர்றீங்க? வேடியும், பொங்காலியும் இருக்கறச்சே....?"

"ஏய் கிரி, வாடாக் கண்ணு, அம்மா உனக்கு என்னெல்லாம் வாங்கிண்டு வந்திருக்கேன் தெரியுமா? எப்படி இருக்கு உன் ஸ்டடீஸ் எல்லாம். நல்ல ரேங்க் வாங்கறியா இல்லே பாட்டிட்டே செல்லம் கொஞ்சிண்டு இருக்கியா....?"

தன்னைச் சேர்த்து அணைத்துக் கொண்டே பேசும் அம்மாவை வெட்கத்துடனும், சந்தோஷத்துடனுமே ஏறிட்டாள் கிரிஜா. எப்போதும் படபடவென்று நெல் பொரியாய் பொரியும் அவள் வாய் திறக்கவே தயங்கியது.

சத்தத்தைக் கேட்டுச் சரசரவென்று வெளியே வந்த காமாட்சி போர்த்திய தலைப்பை இன்னும் இழுத்துவிட்டுக் கொண்டு, "வாங்க மாப்பிள்ளே, வா பாரதி..." என்று வாயெல்லாம் புன்னகையுடன் கூப்பிட்டாள்.

பாரதி கொண்டு வந்த பட்சணங்களையும் துணிமணிகளையும் எடுத்துக் காண்பித்துக் கொடுக்க, குழந்தைகள் அவளைச் சுற்றி உட்கார்ந்து கொண்டு,

ஹா....ய் லவ்லி....

பெண்டாஸ்டிக் யா....

ஹவ் நைஸ்.....

அத்தனையையும் அவரவர் அள்ளிக் கொண்டு பாட்டியிடம் ஓடினார்கள்.

"பிரபு! இந்த 'ஷாட்ஸ்' ஜாகிங்குக்காகக் கொண்டு வந்தேன். பிடிச்சிருக்காப் பாரு. இந்த டீ-ஷர்ட்டெல்லாம் சிங்கப்பூருது. அளவு சரியாயிருக்காப் பாரு."

எல்லாம்புதுவிதமானமோஸ்தரில்இருக்க பிரபுவின் மனம் துள்ளியது.

"யூ ஆர் கிரேட் மா. தேங்க்யூமா...."

கண்கள் பளபளக்கக் கூறினான்.

எல்லாரும் குளித்து, அரட்டையடித்தபடியே சாப்பிட்டார்கள். பிறகு அவரவர் வேலையைப் பார்க்கப் போனதும், காமாட்சியும் சாப்பிட்டேன் என்று பேர் பண்ணிவிட்டு வந்து உட்கார்ந்தாள்.

"பாரதி, இன்னிக்கு நீ சரியாவே சாப்பிடலை. ஏன்? வண்டிலே வந்த களைப்பாம்மா? உனக்குப் பிடிக்குமேன்னுதான் சேப்பங்கிழங்கை மொறு மொறுன்னு வதக்கினேன். ஏன் சாப்பிடலே. நல்லாயில்லையா? உப்பு, காரம் அதிகமாயிடுத்துன்னு....?"

"அம்மா....."

நெகிழ்ச்சியுடன் கூப்பிட்டபடியே காமாட்சியைப் பார்த்தாள். கண்களில் லேசாகப் படிந்த நீரின் பளபளப்பு. அப்படியே நகர்ந்து, அம்மாவின் மடியில் படுத்துக் கொண்டாள். காமாட்சியும் வாஞ்சையுடன் மகளின் தலையைத் தடவிக் கொடுத்தாள்.

கல்யாண வயதில் பெண் பிள்ளையிருந்தாலென்ன? அம்மாவின் ஒரே செல்லப் பெண் என்பது போய்விடுமா? இல்லே வயதானதினால் அம்மா பெண் என்ற பாசம்தான் குறைந்து போகுமா?

"பாரதி, தலை கொதிக்கிறதேம்மா. எண்ணெய் தேய்ச்சு குளிச்சியோ? நாளைக்கு நல்லா மிளகும் மொளகாயும் போட்டு எண்ணெய் காய்ச்சித் தலைல அழுந்தத் தேய்க்

**நன்னாரி விரும்பப் பொன்னாகும் மேனி**

நன்னாரி வேரை அரைத்துக் கடலை மாவுடன் குழைத்து உடம்பிற்குத் தடவி குளித்து வந்தால் மேனி பொன்னாகும்

**சங்கிலைத் தின்றால் குரல் வெண்கலமாகும்:**

சங்கிலை என்ற மூலிகை இலையை கசக்கி சாறைப் பாலுடன் கலந்து சாப்பிட்டால் குரல் வெண்கலமாகும்.

**கோரைக்கிழங்கும் வேலைக்கும் உதவும்**

கஞ்சா மற்றும் போதைப் பொருளை உட்கொள்பவர்களுக்கு நஞ்சு முறிப்பாக கோரைக் கிழங்கு உதவுகிறது.

டீ.வி.யில் கேட்டதைத் தொகுத்து எழுதியவர்: இந்திரா கோபாலன்

இறேன். சூடு பறந்து போயிடும். தலைமுடியெல்லாம் வரவரன்னு இருக்கு. நீ எங்கேயோ தனியா இருக்கே. யார் கவனிச்சுச் சொல்லுவா? இந்த ஊருக்கே மாத்திக்கிட்டு வந்திடுங்களேன்!''

''ஐயோ... ம்மா.... டாக்டரானா, உம் மாப்பிள்ளைக்கு கொலஸ்டிரால் வந்துடும், எடையைக் குறைக்கணும்கறார். நீயானா எளைச்சுப் போயிட்டார்ங்கறே. நான் எண்ணெய் தேய்ச்சுக்கறதெல்லாம் விட்டுட்டேம்மா. அதான் தினுசு தினுசா 'ஷாம்பூ' விக்கிறதே. அஞ்சே நிமிஷம். தலை கலகலன்னு ஆயிடும். இன்னும் என்னை கிரி மாதிரி நெனச்சுண்டு தபதபன்னு எண்ணெய் தேய்ச்சு விடலாம்னு பாக்கிறியா, விடிஞ்சா மாப்பிள்ளையும் மாட்டுப் பொண்ணும் வர வயசாச்சும்மா எனக்கு....''

சிரிப்புடன் கூறிய பாரதியை உற்றுப் பார்த்தாள் காமாட்சி.

''பாரதி, பிரபுவோட சிநேகிதன் பிரகாஷ்னு ஒரு பையன் வரான். ரொம்ப நிதானமா, பவ்யமா இருக்கான். பிரபு மாதிரி அவனும் பேங்க்குல ஆபீஸராம். ஒரு அக்கா அண்ணாவாம். ரெண்டு தங்கைகளாம். அப்பா ரயில்வேயில் அக்கவுண்ட்ஸ் ஆபீஸராயிருக்காராம். மாமி ஒரு தடவை வந்திருந்தா. பளிச்சுனு, தொடச்சு வச்ச குத்துவிளக்கு மாதிரி லக்ஷ்மிகரமா இருக்கா. உங்கப்பாவோட ஊர்க்காராதான். சுத்தி வளைச்சுப் பார்த்தா சொந்தமாக்கூட இருக்கலாம். நம்ப நீருவுக்கு அந்தப் பையனைப் பாக்கலாம்னு தோணறது. நீ ஏதாவது வரன் பார்த்து வச்சிருக்கியா? ம்....''

''இல்லேம்மா. நீருவுக்கு இப்பவே பாக்கணும்னு என்னம்மா அவசரம்? காலேஜுல கடைசி வருஷம்தானே. முடிக்கட்டுமே...!''

''பாரு, பொண்ணு வளத்தியோ, பீர்க்கங்கா வளர்த்தியோம்பா. உனக்கும் மூணு பொண்ணு இப்பவே தயாராயிருக்கா. கிரியும் இன்னும் கொஞ்ச நாள்ல தயாராயிடுவா. ஜலஜாவுக்கு வேணும்னா இன்னும் ரெண்டு மூணு வருஷம் போகலாம். ஆனா நீருவும், வனஜாவும் என்னைப் பாரு, உன்னைப் பாருன்னு ஜதை போட்டுண்டுன்னா நிக்கிறா. அதனால இப்பவே நீருவுக்குப் பார்க்க ஆரம்பிச்சு முடிச்சாதான், வனஜாவுக்கும் முடிச்சுக் கொஞ்சம் மூச்சுவிட நேரமிருக்கும். காலம் போற போக்குல, விலைவாசி இருக்கற இருப்புல, ஆச்சு, ஆச்சுன்னு அந்தந்த சமயத்துல நடத்திடணும்பாரதி. அப்புறமா முழிச்சுண்டு நிக்கப்படாதுன்னுதான் சொல்றேன்!''

பாரதி வாயே திறக்கவில்லை. பேசாமலிருந்தாள். ஆனால் மனத்தில் அம்மாவின் வார்த்தைகள் நன்றாய்க் ஊறிவிட்டு யோசிக்க வைத்தது.

''சரிம்மா, அவரிட்டேயும் ஒரு வார்த்தை கேட்கிறேன். அவரும் ஒத்துண்டார்னா, பார்க்கலாம்மா...''

காமாட்சி நிம்மதியுடன் புன்னகை புரிந்தாள்.

> பலகாரம் செய்த பிறகோ, அப்பளம் பொரித்த பிறகோ—மிச்சமாகும் எண்ணெயை உடனே வேறு கண்ணாடி பாட்டிலில் ஊற்றி, வையுங்கள். இரும்பு வாணலியிலேயே இருந்தால், அது நஞ்சாகி விடும் வாய்ப்பு உள்ளது.
>
> — எஸ். ஜே. இதயா.

காலையில் எல்லாருக்கும் அன்று டிபனே செய்துவிட்டாள் காமாட்சி. அனைவரும் தட்டு வைத்து உட்காரும்போது, நாகநாதனுக்கும் இட்லியும், நெய்யும் போட்டு, சட்னியும் மிளகாய்ப் பொடியும் தனித் தனியாய் சிறு தட்டுகளில் வைத்தாள்.

ஆசையுடன் விண்டு சாப்பிடப் போகும் சமயம், அங்கே வந்த பாரதி, 'ஐய்யய்யோ...' என்று கத்தினாள்.

என்னவோ ஏதாவென அனைவரும் திடுக்கிட்டுப் பார்க்க, ''என்னா! உங்களுக்குக் கார்த்தாலே 'வெஜிடபுள் ஸூப்பும் சுக்கா ரொட்டி'யும்தானே ஆகாரம். இங்கே வந்து என்ன புதுசா இட்லியை நல்லா வெட்டிண்டு இருக்கீங்க? நான் அங்கே ஸூப் பண்ணிண்டு இருக்கேன். ரொட்டி பண்ணி வச்சிருக்கேன். இன்னும் எச்சில் பண்ணலையோன்னோ.... அந்தத் தட்டை இங்கே தாங்கோ. நான் உள்ளேயிருந்து ரொட்டியும் ஸூப்பும் கொண்டு வரேன். நல்லா சாப்பிட உட்கார்ந்தேள் இட்லியை.....''

''பாரதி இன்னிக்கு ஒரு நாள் சாப்பிட்டுட்டுப் போகட்டும். நாளையிலேயிருந்து உன் ரொட்டியும் ஸூப்பும் கொடேன். சாப்பிடப் போறச்சே, தட்டைப் பறிக்கிற மாதிரி எடுக்காதேம்மா....''

''பேசாம இரும்மா. அவருக்கு என்ன தரணும், தரக் கூடாதுன்னு எனக்குத்தான் தெரியும். இதுக்கெல்லாம் வராதே...''

இட்லி தட்டை எடுத்துப் போய், வேறு தட்டில் சுக்கா ரொட்டியும் ஸூப்பும் ஒரு டம்ளர் மோரும் கொண்டு வந்து வைத்தாள் பாரதி. பரிதாபமாய், அனைவரையும் ஒரு அசட்டுச் சிரிப்புடன் பார்த்துவிட்டு, ரொட்டியைப் பிய்த்துப் பிய்த்துத் தின்றார் நாகநாதன். குழந்தைகளின் குதூகலம் திடீரென்று அடங்கி, ஒருவர் முகத்தை ஒருவர் கீழ் நோக்காய்ப் பார்த்த பார்வையில், பாவம் அப்பா...! என்று உணர்ச்சியே முண்டி நிற்க, அவர்களுக்கும் சாப்பிடப் பிடிக்காமல், தட்டில் இருந்ததை வேண்டா வெறுப்பாக அடைத்துக் கொண்டு மௌனமாய் எழுந்து சென்றனர்.

காமாட்சியின் மனதும் வேதனையடைந்தது.

(தொடரும்)



மங்கல சௌபாக்கியத்தின் சின்னம்

# ஐடெக்ஸ்

குங்குமம் டீலக்ஸ்

matt finish



ஐடெக்ஸ்
48 ஆண்டுகளாக
உங்கள் நம்பிக்கையின்
மகத்தான சின்னம்

அரவிந்த லாபரடரீஸ், சென்னை-600 033.

மஞ்சள் காமாலை நோயைப் பற்றி நாம் அடிக்கடி கேள்விப்படுகிறோம். இந்நோய் வந்தவர்களின் கண்கள் மஞ்சள் நிறமாக இருக்கும் என்று எல்லோருக்கும் தெரியும். பிறந்த குழந்தை முதல் அனைத்து வயதினருக்கும் வரும் இந்நோய் எதனால் வருகிறது? என்ன அறிகுறிகள்? என்ன சிகிச்சை? மஞ்சள் காமாலை நோயைப் பற்றி விளக்கமளிக்கிறார் டாக்டர் கிறிஸ்துதாஸ் —

கே: மஞ்சள் காமாலை ஆண்டு முழுவதும் வருமா? அல்லது குறிப்பிட்ட மாதங்களில் தான் வருமா?

ப: மஞ்சள் காமாலை ஹெபாடைடிஸ் வைரஸ் ஏ அண்ட் பி என்னும் கிருமியால் ஏற்படும் ஒரு தொற்று வியாதி. எனவே இந்நோய் ஓர் ஆண்டில் எந்த மாதத்தில் வேண்டுமானாலும் வரலாம். சிறுவர்கள், பெரியவர்கள் எல்லோருக்குமே இந்நோய் வர வாய்ப்பு உண்டு.

கே: நோய்க்கிருமிகள் உடலில் எவ்வாறு மஞ்சள் காமாலை நோயை உண்டாக்குகின்றன?

ப: மஞ்சள் காமாலை வைரஸ்கள் நீர், உணவு இவற்றின் மூலம் உடலுக்குள் சென்று லிவர் எனப்படும் கல்லீரலை அடைகின்றன. அங்கு அவை எண்ணிக்கையில் பல மடங்கு பெருகுகின்றன. இதனால் கல்லீரல் பெரிதாக வீங்கிப் பழுதடைகிறது. இவ்வாறு கல்லீரல் செயலற்றுப் போவதே நோயின் தொடக்கமாகும்.

கே: மஞ்சள் காமாலை நோயின் அறிகுறிகள் யாவை?

ப: மஞ்சள் காமாலை நோய் ஏற்பட்டவர்களுக்குப் பசியின்மை ஏற்படும். ஜுரம், வாந்தி இவற்றுடன் வயிற்றின் மேல் பகுதி வீங்கியிருக்கும். அப்பகுதியில் வலி ஏற்படும். ஆழ்ந்த மஞ்சள் நிறத்தில் சிறுநீரும், வெளிறிய நிறத்தில் மலமும் கழிப்பார்கள். கண்கள் மஞ்சளாகத் தெரியும்.

கே: டாக்டர், இந்நோய் கண்டவர்களின் சிறுநீர் ஆழ்ந்த மஞ்சள் நிறத்தில் இருப்பது ஏன்?

ப: கல்லீரலில் பைல் (bile) எனப்படும் மஞ்சள்நிற திரவமான பித்த நீர் சுரக்கிறது. உணவு ஜீரணமாவதற்கு இந்தச் சுரப்பு நீர் அவசியமான ஒன்று. கல்லீரல் வைரஸ் கிருமிகளால் தாக்கப்படுவதால் இந்தப் பித்தநீர் இரைப்பைக்குச் செல்லும் குழாய் அடைபடுகிறது. எனவே மலம் வெளிர் நிறத்தில் இருக்கிறது. பித்தநீர் கலந்து பிறகு சிறுநீர் மூலமாக வெளியேறுவதால் சிறுநீர் வழக்கத்தைவிட அதிக மஞ்சள் நிறமாய்த் தெரிகிறது. இதற்குக் காரணம் பைல் பிக்மெண்ட் என்ற நிறமிப் பொருளாகும்.

கே: சிறு குழந்தைகளுக்குக் காமாலை வந்தால் பிறகு மீண்டும் அவர்கள் பெரியவர்களான பின் வருமா?

ப: மஞ்சள் காமாலை ஒருமுறை ஒருவருக்கு வந்தபின் மீண்டும் வரலாம். சிறு குழந்தைகளுக்கு நோயின் அறிகுறி தென்பட்ட உடனேயே சிகிச்சை அளித்தால் நோயை முற்றிலுமாகக் குணப்படுத்தி விடலாம். கால தாமதம் செய்தால் சிகிச்சை பலனில்லாமல் போகும் அபாயமும் உண்டு.

கே: மஞ்சள் காமாலை நோய்க்கு என்ன சிகிச்சை?

ப: இந்நோயினால் கல்லீரல் பழுதடைகிறது. எனவே கல்லீரலைப் பழையபடி இயங்க வைத்து விட்டாலே பெருமளவு நோய் நீங்கிவிடும். உணவில் சில கட்டுப்பாடுகளும், 'பி' வைட்டமின்களும் மட்டுமே கூட நோயைக் குணப்படுத்தி விடும்.

# மஞ்சள்



ஆயினும் சில சமயங்களில் மருத்துவர்கள் மஞ்சள் காமாலைக்கென உள்ள மருந்துகளையும் கொடுப்பார்கள்.

முக்கியமாக நோயாளிக்கு நல்ல ஓய்வும், சரியான உணவும் தேவை. புரதச் சத்துக்களையும், கொழுப்பையும் முற்றிலும் தவிர்க்க வேண்டும். சிறு குழந்தைகளாயின் எண்ணெய், நெய், சேர்க்காமலும், பெரியவர்களானல் எண்ணெயில் பொரித்த, வதக்கிய உணவுப் பண்டங்களைச் சேர்க்காமலும் இருக்க வேண்டும். அதிக வைட்டமின்களும், கார்போஹைடிரேட்டும் உணவில் சேர்க்க வேண்டும். நிறைய திரவ உணவு உட்கொள்ள வேண்டும். நிறைய மோர், பழச்சாறு, குளுகோஸ் சேர்த்த நீர், இளநீர் சாப்பிடலாம்.

தவிர முறையான மருத்துவச் சோதனை செய்து மருத்துவர் ஆலோசனையின்படி வேறு நோய்கள் (செகண்டரி இன்ஃபெக்ஷன்) இருப்பின் அவற்றிற்குச் சிகிச்சையும், சோடியம், பொட்டாசியம் போன்ற தாதுக்களின் அளவு உடலில் தேவைக்கு அதிகமாகவோ, குறைவாகவோ (எலக்ட்ரோலைட் இம்பேலன்ஸ்) இருப்பின் அதைச் சரி செய்ய சிகிச்சையும் மேற்கொள்ள வேண்டும். நோய் நீங்கிய சில மாதங்கள் வரை மருத்துவ ஆலோசனையின்படி உணவு அளிக்க வேண்டும்.

கே: மஞ்சள் காமாலை முற்றிய நிலையில் ஒருவருக்கு ஏற்படும் அறிகுறிகள் யாவை?

ப: மஞ்சள் காமாலை முற்றிய நிலையில் நினைவு இழந்த நிலை நோயாளிக்கு ஏற்படும். கைகளில் நடுக்கம் ஏற்படும். காஸ்டிரோ இன்டஸ்டைனல் எனப்படும் உணவுப் பாதையில் இரத்தக்கசிவு ஏற்படுவதால் நோயாளியின் வாந்தி அல்லது மலத்தில்

# காமாலை

உதிரம் கலந்து இருக்கும். சிறுநீரகமும் பாதிக்கப்படுவதால் சிறுநீரகம் தொடர்பான நோய்களும் ஏற்படும். மருத்துவரின் தீவிரச் சிகிச்சையினுல் மட்டுமே நோயாளி பிழைக்க முடியும். இந்நிலையைத் தவிர்க்க, ஆரம்ப அறிகுறிகளைக் கண்டதுமே சிறுநீர்ப் பரிசோதனை மூலம் மஞ்சள் காமாலை நோய் உள்ளதா என்பதை மருத்துவமனையில் கண்டறிய வேண்டும்.

கே: மஞ்சள் காமாலைக்குக் கீழாநெல்லி சிறந்த மருந்து என்கிறீர்களே, எவ்வாறு அது நோயைக் குணப்படுத்துகிறது?

ப: நான் முன்பே குறிப்பிட்டபடி உணவுக் கட்டுப்பாடும், ஓய்வுமே ஓரளவு நோயைக் குணப்படுத்திவிடும். கீழாநெல்லிச் செடி கல்லீரலின் செயலை ஒழுங்கு படுத்தும் சக்தி உடையது. சரியான மருத்துவ முறைப்படி அச்செடியைப் பயன்படுத்தலாம்.

கே: முதலில் கைவைத்தியமாகவோ, அல்லது வேறு வைத்திய முறையிலோ சிகிச்சை செய்துவிட்டு அதன்பின் ஆங்கில மருத்துவச் சிகிச்சை செய்து கொண்டால் பலன் உண்டா?

ப: மஞ்சள் காமாலைக்கு எல்லாவித மருத்துவ முறைகளிலும் சிகிச்சை உண்டு. ஆயினும் பாதியில் சிகிச்சை முறையை மாற்றி ஆங்கிலச் சிகிச்சை முறை செய்து கொள்வதால் ஆபத்து எதுவும் நேராது. நோய் முற்றுவதற்கு முன் சிகிச்சை அளித்தால் நிச்சயம் பலன் உண்டு.

கே: சிறு குழந்தைகள் உள்ள வீட்டில் ஒருவருக்கு மஞ்சள் காமாலை வந்தால் மற்றவருக்கும் வருமா? தடுப்பு ஊசி உண்டா?

ப: பொதுவாகவே சிறுகுழந்தைகளை நோயாளிக்கு அருகில் செல்லாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். நோயாளி பயன்படுத்திய துணிகள், பாத்திரங்களைத் தனியாகச் சுத்தப்படுத்த வேண்டும். காமாகுளோபுலின் (Gamma Globulin) என்னும் தடுப்பு ஊசியைப் போடலாம். இதனுல் நோய் பரவாமல் இருக்கும்.

கே: சூடான சோற்றில் மோர் ஊற்றிச் சாப்பிட்டால் மஞ்சள் காமாலை வரும் என்பது உண்மையா?

ப: மருத்துவரீதியாக இதற்கு எந்த ஆதாரமும் இல்லை. இது ஒரு தவறான கருத்துதான்.

கே: மஞ்சள் காமாலை வந்தவர்கள் உடல் நிலை எதிர்காலத்தில் எவ்வாறு பாதிக்கப் படுகிறது?

ப: மஞ்சள் காமாலை வந்தவர்கள் நோயிலிருந்து முற்றிலும் விடுபட்டால் கூட, ஒரு சில வைரஸ்கள் அவர்கள் உடலில் இருக்கலாம். இதனுலேயே மஞ்சள் காமாலை நோய் வந்தவர்கள் இரத்ததானம் செய்வது தவறு என்று கருதப்படுகிறது. மஞ்சள் காமாலை நோய் வந்தவர்களில் 95% பேர் குணமடைந்து விடுவார்கள். மிகச் சிலர் குரோனிக் ஹெபாடைடிஸ், ஸிரோஸிஸ் (Chronic Hepatitis Cirrhosis) போன்ற நோய்களுக்குப் பிற்காலத்தில் உட்படலாம்.

கே: கருவுற்ற பெண்களுக்கு மஞ்சள் காமாலை வருவது ஆபத்து என்கிறீர்களே, ஏன்?

ப: கருவுற்ற பெண்களுக்கு மஞ்சள் காமாலை வருவது என்பது சிக்கலான விஷயம்தான். இவர்களின் கல்லீரல் முற்றிலும் செயலிழந்துவிடும். மேலும் இரத்தத்திலும் நோய்க் கிருமிகள் பரவி விடுவதால் கருவிலுள்ள குழந்தையையும் தாக்கும். இந்நிலையில் இப்பெண்களுக்குக் கருச்சிதைவு இயற்கையாகவே ஏற்பட்டுவிடும்.

கே: பிறந்தவுடனேயே சில குழந்தைகளுக்கு மஞ்சள் காமாலை வருவது ஏன்?

ப: பிறந்த குழந்தைக்கு வேறு பல நோய்களின் அறிகுறியாகத்தான் மஞ்சள் காமாலை வரும்.

1. ஹிமாலினிஸ் (Haemolysis) என்பது இரத்தத்திலுள்ள சிவப்பணுக்கள் வெடிப்பது. இந்நோய் காரணமாக மஞ்சள் காமாலை ஏற்படும். ஆனால் அது தானாகவே சரியாகி விடும்..

2. தாயின் இரத்தம் ஆர் ஹெச் நெகடிவாகவோ அல்லது ஏ பி ஓ (ABO) பிரிவாகவோ இருக்கும்போது மஞ்சள் காமாலை வரும்.

3. தாய்க்குப் பால்வினை நோய் இருந்து. கருவிலேயே குழந்தைக்கும் அது பரவியிருந்தால் அப்போதும் காமாலை வரும்.

4. பிறவியிலேயே ஹெபேடிக் குழாய்களில் அடைப்பு இருந்தாலும், ஸெப்டிஸிமியா (Septicaemia) நோய் வந்தாலும் குழந்தை பிறந்தவுடனேயே மஞ்சள் காமாலை நோய்க்கு உள்ளாகும். மேற்கண்ட அறிகுறிகளைக் கண்டதும் மஞ்சள் காமாலையைக் குணப்படுத்துவதோடு, எந்த நோய் காரணமாக காமாலை வந்தது என்பதைக் கண்டு பிடித்து அதையும் குணப்படுத்த வேண்டும். மிகவும் கவனமாகக் குழந்தைக்குச் சிகிச்சை செய்தால் குழந்தை பிழைக்க வாய்ப்பு உண்டு.

பேட்டி: **லக்ஷ்மி சங்கர்**

சுரைக்காய் என்று தமிழ் நாட்டில் வழங்கும் காய் இங்கு குஜராத்தில் தூதி — என்கிற பெயரில் வழங்குகிறது. தமிழ்நாட்டில் பெரும்பாலோர் இதைச் சமையலில் சேர்ப்பதில்லை. ஆனால் இந்த தூதியினால் 'அல்வா' செய்து பாருங்கள். பிறகு சொல்வீர்கள், அதன் மகிமையை!

தேவையான பொருட்கள்:

தூதி (சுரைக்காய்) — 500 கிராம்,
சர்க்கரை — 500 கிராம்,
மாவா (கோவா) — 100 கிராம்,
ஏலக்காய்ப் பொடி, சிறிதளவு
நெய் + பச்சை நிற கலர்.

செய்முறை:

சுரைக்காயை நன்ருக அலம்பி, தோல் சீவி, விதையை நீக்கிவிட்டு, காரட் துருவியில் துருவிக் கொள்ளவும். துருவலுடன் அரை டீஸ்பூன் பேக்கிங் பவுடர் அல்லது சுண்ணும்பு சேர்த்து இரண்டு மணி நேரம் ஊற வைக்கவும். தண்ணீர் விட்டு நன்ருக அலம்பி வடிய வைத்துக் கொள்ளவும்.

சர்க்கரையில் சிறிதளவு தண்ணீர் விட்டு அடுப்பில் வைக்கவும். கரைந்தவுடன் வடிய வைத்துத் துருவல்+கலர் சேர்த்துக்கிளறவும். நன்ருகக்கெட்டிப் பதம்வந்தவுடன் ஏலம்+கோவாவையும் சேர்த்துக் கிளறவும். அடிப்பிடிக்காமல் நெய் விடவும். நன்ருக உருளும்பதம் வந்தவுடன் நெய் தடவிய தாம்பாளத்தில் கொட்டி வில்லை போடவும். அப்படியே துண்டுகள் போடாமலும் உபயோகிக்கலாம்.

— காயத்ரி.

அரிசி களைந்த நீரைச் சுத்தமான துணியில் வடிகட்டி வைத்திருக்க வேண்டும். திடீர் விருந்தாளிகள் வந்து, மோரும் கொஞ்சமாக இருந்தால், ஏற்கெனவே உள்ள மோருடன், அரிசி களைந்த நீரையும் ஊற்றி, கறிவேப்பிலை, உப்பு, பச்சை மிளகாய், இஞ்சி, எலுமிச்சம்பழம் பிழிந்து சாப்பாட்டில் ஊற்றினுல், மோர் நீர்த்துவிடாமல் கெட்டியாக இருப்பதுடன் சுவையாகவும், சத்துள்ளதாகவும் இருக்கும்.

— உமா.



# தங்கம் விலை ஏறியது ஏன்?

சென்ற மாதம் சவரன் இரண்டாயிரத்துக்கு விற்றுக் கொண்டிருந்த தங்கம் திடீரென மூவாயிரம் ரூபாய்க்கு ஏறிக் கொண்டு விட்டது. மகளுக்குத் திருமணம் வைத்துக் கொண்டிருக்கும் பெற்றோர்கள், நகை வாங்கத் திட்டமிட்ட பெண்கள் எல்லோரும் திணறிக் கொண்டிருக்கிறார்கள். திடீரென தங்கம் விலையுயர்ந்ததற்குக் காரணம் என்ன?

ஜி. ஆர். தங்கமாளிகையின் உரிமையாளரும், இருபத்தி மூன்று வருடங்களாக இந்தத் தொழிலில் அனுபவம் வாய்ந்தவருமான திரு இராஜேந்திரனை அணுகி இதைப் பற்றிக் கேட்டபோது —

கே: திடீர்னு ஆயிரம் ரூபாய்க்கு மேல் தங்கத்தின் விலை ஏறினதுக்குக் காரணம் என்ன?

ராஜேந்திரன்: நாம்ப கிராம் கணக்குல பார்க்கலாமே? கிராம் இருநூற்றி எண்பத்து ஐந்து ரூபாய்க்கு விலை ஏறினது. அப்புறம் ஒரு பத்து நாளில் கொஞ்சம் விலை குறைந்து இப்போ இருநூற்றி எழுபத்து மூன்று ரூபாய்க்கு விற்கிறது.

இதற்குக் காரணம் டாலர் மதிப்பு குறைந்ததுதான். உலகப் பொருளாதாரத்தில டாலர் மதிப்பு குறைந்தவுடன் அதிக டாலர் கொடுத்துத் தங்கம் வாங்க வேண்டியதாப் போச்சு. அந்த டாலரின் அளவிற்கு இந்திய ரூபாய்களும் அதிகம் கொடுக்க வேண்டியதாயிற்று. அதுதான் காரணம்.

கே: இந்தியாவில் தங்கத்தின் விலையை நிர்ணயிக்கிறது யார்?

ரா: பம்பாயில் புல்லியன் மார்க்கெட் என்ற பெயரில் தங்க மார்க்கெட் ஒன்று உள்ளது. அதுதான் இந்தியா முழுமைக்கும் தங்கத்தின் விலையை நிர்ணயிக்கிறது. இங்கே தமிழ்நாட்டில் நகை வியாபாரிகள் சங்கம் புல்லியன் மார்க்கெட்டிற்குத் தகுந்தாற்போல எங்களுக்கு விலை நிர்ணயம் செய்கிறது. காலை மாலை இருவேளையும் எங்களுடைய சங்கத்திலிருந்து விலை நிர்ணயச் சீட்டு வரும். அதற்குத் தகுந்தாற் போல நாங்கள் விற்கிறோம்.

கே: இந்த விலை உயர்வினால் வாடிக்கையாளர் வருவது குறைந்திருக்கா?

ரா: அதிகமா பாதிக்கப்படலைன்னுதான் சொல்லணும். ஏன்னா நகை வாங்கணும்னு (அ) வாங்கியாகணும்னு தீர்மானிச்ச பிறகு நிறுத்தப் போறதில்லை. கொஞ்சம் குறைச்சுப்பாங்க. அவ்வளவுதான். திருமணத்திற்கெல்லாம் வாங்கறவங்க வாங்காம இருக்க முடியாதே!

கே: விலை குறைவதற்கு ஏதாவது வாய்ப்பு இருக்கிறதா?

ரா: இல்லைன்னுதான் சொல்லணும். இந்தக் காலத்துல எந்தப் பொருள் விலை

ஏறிய பிறகு இறங்கியிருக்கு? வாடிக்கை யாளர்களும் வந்து யோசனை கேக்கறாங்க. ரெண்டு மூணு நாள் பாருங்கன்னுதான் சொல்ல முடியுது.

கே: ஏற்கெனவே நீங்க ஏராளமான நகைகளை செஞ்சு ஷோ—கேஸில் வச்சிருக்கீங்க. அதெல்லாம் பழைய விலையில் செஞ்சது தானே.

ரா: நீங்க கேக்கறது புரியுது. இதனால் புதிய விலையில் விக்கறப்போ அது லாப மானதுதானேன்னு சொல்ல வர்றீங்க. ஆனா அவைகளெல்லாம் விற்க விற்க நாங்க மீண்டும் அந்த இடங்களுக்கு வேறு நகைகளை வச்சுக்கிட்டே இருக்கணும். புதிய விலையில தான் அந்த நகைகளைச் செஞ்சாகணும். அதனால ஷோ—கேஸ்ல இருப்பவையெல்லாம் ஒரு 'ஸ்டேண்டிங் காபிடலா'தான் மதிக்கணுமே தவிர இதனாலே ஒண்ணும் லாபம் கிடையாது. நாளைக்கு விலை குறைந்துவிட்டால், இது பழைய விலையில் செய்த நகை, கூடப் பணம் கொடுங்கன்னு சொல்ல முடியுமா?

கே: தங்கத்திற்கு ஏன் இவ்வளவு கெடுபிடி? சாதாரண மக்களும் சாதாரணமாக வாங்கற விலையிலே தங்கம் வரவே வராதா?

ரா: இந்திய அரசு இறக்குமதி கொள்கைகளில் கொஞ்சம் மாற்றம் செய்தா இவ்வளவு கெடுபிடி இருக்காது. நாங்க ஒருமுறை பழைய நிதியமைச்சர் வி.பி. சிங்கை சந்தித்து சில யோசனைகளைக் கூடச் சொன்னோம். அரசின் அளவில் ஏதாவது மாற்றங்கள் வந்தால் இந்த நிலை மாறலாம்.

கே.: ஒரு தனி நபர் இவ்வளவு தங்கம் தான் வச்சுக்கலாம்னு ஏதாவது கட்டுப்பாடு இருக்கா?

ரா: இருக்கு. ஒரு தனி நபர் இரண்டாயிரம் கிராம் வரை வச்சுக்கலாம். கூட்டுக்குடும்பமா இருந்தா நாலாயிரம் கிராம் வரை வச்சுக்கலாம். அதுக்கும் மேலே இருப்பவர்கள் அரசாங்கத்திற்கு, 'எங்களிடம் இவ்வளவு தங்கம் இருக்கிறது' என அறிவித்துவிட்டு வைத்துக் கொள்ளலாம். ஆனால் நம்முடைய நாட்டில் இது தாராளம். ஒரு சராசரி மனிதர் இரண்டாயிரம் கிராம் தங்கத்திற்கு எட்டுவதே பெரிய விஷயம்.

கே: அந்தக் காலத்தில் பனிரெண்டு ரூபாய்க்கெல்லாம் தங்கம் விற்றிருக்கு. அப்போது அதிகம் வாங்கினார்களா? இப்போது அதிகம் வாங்குகிறார்களா?

ரா: இப்போதுதான் அதிகம் வாங்குகிறார்களென சொல்லணும். ஏன்னா வாங்கும் தன்மை இப்போது அதிகமாயிருக்குன்னு சொல்லணும். பணப் புழக்கம் அதிகமாக இருக்கு.

இப்போதெல்லாம் போனஸ் முக்கால் வாசிப் பேருக்கு வருகிறது. இது போல அதிகப்படி வரும் பணத்தை நகை வாங்கத்தான் பயன்படுத்துகிறார்கள். அதற்கும் மேல் பணம் வந்தால்தான் வீடு கட்ட நினைக்கிறார்கள். எனவே நகை வாங்குவது என்பது இப்போது அதிகமாகிவிட்டது.

கே: சேமிப்புப் பணத்தைத் தங்கத்தில் போடுவது நல்லதா? நிலத்தில் போடுவது நல்லதா? பேங்க்கில் போடுவது நல்லதா?

ரா: நான் நகை வியாபாரி என்பதற்காக இதைச் சொல்லவில்லை. நாளுக்கு நாள் தங்கத்தின் விலை ஏறி வருவதைப் பார்த்தால் தங்கத்தில் போடுவதுதான் நல்லது. வங்கியின் வட்டியை விட இதன் மதிப்பு அதிகம். ரியல் எஸ்டேட் பற்றி அதிகம் எனக்குத் தெரியாது. எனக்குத் தெரிந்த அளவில் ஒப்பிட்டுப் பார்க்கும்போது தங்கத்தில் போடுவது நல்லது எனப் படுகிறது.

ஏனென்றால் இந்த இருபத்து மூன்று வருட அனுபவத்தில் தங்கத்தின் விலை குறைந்ததாகவே தெரியவில்லை!

கே: இப்படி விஷம் போல விலை ஏறுகிறதே. நீங்கள் இல்லத்தரசிகள் நகை சேர்க்க என்ன ஆலோசனை கூறுகிறீர்கள்?

ரா: முடிந்த வரையில் சிறு சிறு காசுகளாகவோ, தங்க நகையாகவோ வாங்கி வைத்துக் கொள்வது நல்லது. பிறகு மொத்தமாக வாங்கப் போகும்போது கையைப் பிசைவதைவிட கொஞ்சம் கொஞ்சமாக சேர்த்து வருவது நல்லது.

கே: கல் நகைகளை அதிகம் வாங்குகிறார்கள். இதனால் தங்கம் நஷ்டம்தானே?

ரா: என்னைப் பர்சனலாகக் கேட்டால் கல் இல்லாத நகை வாங்குவது நல்லது என்பேன். ஆனால் திருமணம் போன்ற விசேஷங்களுக்கு வாங்கும்போது வெறும் தங்க நகையாகவே எத்தனை வாங்க முடியும்? கூடிய வரை தவிர்ப்பது நல்லது. கற்களினால் 15% சதவீதம் தங்கம் குறைய வாய்ப்பு உண்டு.

கே: நகைகளை எப்படிப் பாதுகாக்கலாம்?

ரா: வாங்கும்போது ஆசையாக வாங்கும் பெண்கள், அதைப் பத்திரமாக பாதுகாக்க வேண்டும். திருமணம் போன்ற விசேஷங்களுக்குப் போய்விட்டு வந்து அப்படியே 'குப்பலாக' அவிழ்த்து வைக்கக் கூடாது. அதற்கு என ஒரு பெட்டி தருகிறோம். அதில் கவனமாக வைக்க வேண்டும். ஒரு ஐந்து நிமிஷம்தானே ஆகும் அதற்கு.

அடிக்கடி பாலீஷ் போடுவதையும் தவிர்ப்பது நல்லது. அதுவும் வீதியில் பாலீஷ் போடுகிறேன் என வருபவர்களை அறவே தவிர்ப்பது நல்லது.

பூந்திக் கொட்டை சாதாரண கடைகளில் கிடைக்கும். அதை நல்ல நீரில் ஊற வைத்துத் தேய்த்தால் நுரை வரும். அதை வைத்துக் கழுவினாலே நகைகள் 'பளிச்'சென்று ஆகிவிடும்.

பேட்டி: **மஞ்சுளா ரமேஷ்**
அட்டை வண்ணப்படம்,
புகைப்படங்கள்: **யோகா**
அட்டையில்: **பானுலட்சுமி**
அட்டைப் படத்திற்கு உதவி:
**ஜி. ஆர். தங்க மாளிகை**

புதிய

# விப்ரோ சீகாகாய் சோப்

சீயக்காயின் இயற்கையான
குணங்கள் நிறைந்த, புதிய
விப்ரோ சீகாகாய் சோப்.
இதன் செழுமையான,
மிருதுவான, நறுமணம்
கமழும் நுரைவளம்
அன்புடனும் ஆதரவுடனும்
சுத்தம் செய்கிறது.
உங்களை இயற்கையாக
அழகு மிளிரச் செய்கிறது.




விப்ரோ
## சீகாகாய்
சோப்

பட்டுப் போன்ற மென்மையான
கேசத்திற்கு

everest/86/WIL/574-tm

# விஸ்ட்ரம்

ஒரு டயபடிக் உணவு







நீரிழிவுக்காரர்களுக்கென்றே பிரத்யோகமாக வடிவமைக்கப்பட்டது.

சோர்வை நீக்கி, சக்தியை கொடுத்து தெம்பை ஊட்டுகின்றது

கொழுப்புச் சத்து சிறிதும் இல்லாதது

முழுவதும் தானிய, பருப்பு வகைகளால் ஆனது

செயற்கை வண்ணமோ, மணமோ, ருசியோ சேர்க்கப்படாதது இயற்கை தந்த பாதுகாப்புடன் அளிக்கப்படுகிறது

ஸ்பென்ஸர்ஸ், சிந்தாமணி, நீல்கிரீஸ் மற்றும் எல்லா மருந்துக் கடைகளிலும், டிபார்ட்மெண்டல் கடைகளிலும் கிடைக்கும்.




"இதோ பாருங்களேன்... இதைப் பாருங்களேன்..." ஜானகியின் பதற்றமான குரலைக் கேட்டு பட்டாபி முகம் நிமிர்ந்தார். ஜானகி அந்த வாரத்து 'மல்லிகை' இதழை எடுத்துக் கொண்டு ஓடி வராத குறையாக வேகமாக வந்தாள். முகத்தில் பரபரப்பு. திகைப்பு.

"என்...ன... ஜானகி! என்ன? ஏன் இப்படி ஓடி வர்றே?" ஜானகி பேச முடியாமல் மல்லிகை இதழை அவரிடம் நீட்டினாள். அதை வாங்கிக் கொண்டு அவள் விரல் சுட்டிக் காட்டிய பக்கத்தை நிதானமாகப் பார்த்தார். பார்த்தவரின் முகத்திலும் வியப்பும் திகைப்பும் படர்ந்தது.

"ஜானு... ஜானு... இது திவ்யா மாதிரி இல்லே?"

அவர் அருகில் சோபாவில் அமர்ந்த ஜானகி, "அவள் மாதிரியே இருக்கா இந்தப் பொண்ணு. படியுங்களேன்..." என்றாள். நெற்றியில் பொடிப் பொடியாக வியர்த்ததைப் புடைவைத் தலைப்பினால் துடைத்துக் கொண்டாள். பட்டாபி அந்தப் புகைப்படத்தை ஒட்டி பிரசுரமாகி இருந்த விஷயத்தை வாய்விட்டுப் படித்தார்.

"அடையாறிலுள்ள கருணை இல்லத்தில் சென்ற வாரம் நடந்த ஆண்டு விழா நிகழ்ச்சியில் அந்த இல்லத்துப் பெண்கள் நடித்த 'புதுமைப் பெண்' என்ற நாடகத்தைக் கவர்னர் பாராட்டிப் பரிசுகள் அளித்தார். நாடகத்தில் கதாநாயகியாக நடித்த வித்யா மிகவும் நன்றாக நடித்ததால் அவளுக்கு விசேஷ பரிசும் அளித்தார். மற்றும் கோலாட்டம் கும்மி, நாட்டியம், பாட்டு முதலிய நிகழ்ச்சிகளும் வெகு நன்றாக இருந்ததையும் பாராட்டினார்.

ஜானகியின் விழிகளில் கண்ணீர் முத்துக்கள். பட்டாபியின் மனமும் கலங்கியது. இருவர் உள்ளத்திலும் இரண்டு மாதங்களாக வீட்டில் நடக்கும் நிகழ்ச்சிகள் வந்து அலை மோதின.

அவர்கள் ஒரே மகன் நிரஞ்சனுக்கு ஒரு வருஷத்துக்கு முன்தான் கல்யாணம் நடந்தது. பட்டாபி ஒரு தொழில் அதிபர். நிரஞ்சன் எம்.பி.ஏ. பாஸ் பண்ணிவிட்டு, அந்த ஆபீசிலேயே பெரிய பதவி ஏற்றான். பெங்களூரில் அவர்களுடைய தூரத்து உறவினர்களின் பெண் திவ்யாவை எல்லாவிதத்திலும் பிடித்திருந்ததால் வெகு விமரிசையாகத் திருமணத்தையும் நடத்தினார்கள். திவ்யாவும் ஒரு பட்டதாரி. நல்ல சிவப்பு. மூக்கும் முழியுமாக வெகு லட்சணமாக இருந்தாள். யார் கண் திருஷ்டியோ, திருமணமான ஒரே வருடத்தில் அந்த சம்பவம் நடந்தது.

திவ்யா தன் சித்தப்பா பெண் கல்யாணத்துக்காக, பெங்களூர் சென்றாள். நிரஞ்சனுக்கு அவளைப் பிரிய மனமில்லாமலேயே அனுப்பி வைத்தான்.

மறு சனிக்கிழமை. திவ்யா ஊரிலிருந்து வரும் நாள். ஆபீசில் பட்டாபி மகனை அழைத்தார். அன்று நிரஞ்சன் இருந்தே ஆக வேண்டிய டைரக்டர்ஸ் மீட்டிங் இருந்ததால், அவனால் ஸ்டேஷனுக்குப் போக முடியவில்லை. பட்டாபி தான் அவளை அழைத்து

வருவதாகவும், அவனை நேராக வீட்டுக்குப் போகும்படியும் கூறிவிட்டார்.

ஸ்டேஷனுக்கு வந்த அவருக்கு இடி போல செய்தி காத்திருந்தது. திவ்யா வந்த டிரெயின் ஜோலார்பேட்டையருகே விபத்துக்குள்ளாகி.... குமுறும் நெஞ்சைப் பிடித்துக் கொண்டு, அழுது கொண்டிருந்த மற்றவர்களைத் தள்ளிக் கொண்டு வீடு வந்து சேர்ந்தார்.....

வேகமாக உள்ளே சென்ற பட்டாபி சோபாவில்,சாய்ந்து அழத் தொடங்கினார்.

''என்....ன.... என்ன...... என்ன ஆச்சு?'' தாயும் மகனும் பதறி வந்தனர்.

''ஐயோ ஜானகி! என்னடி பண்ணுவேன்... ரயில் ஜோலார்பேட்டைகிட்டே ஆக்ஸிடெண்டாம். ரொம்பப் பேர் செத்துப் போயிட்டாளாம். ஒரே களேபரம்....''

''ரயில் ஆக்ஸிடெண்டா? ஐயோ.... திவ்யா.... திவ்யா....'' நிரஞ்சன் மயங்கி விழுந்தான்.

பட்டாபி சட்டென்று குடும்ப டாக்டரும் பால்ய நண்பருமான டாக்டர் காசிக்குப் போன் செய்தார்.

''நான் வரேன்... பட்டாபி.... கவலைப் படாதே...'' போனில் ஆறுதல் கூறிவிட்டு, சில நிமிஷங்களில் வந்து சேர்ந்தார். நிரஞ்சனைப் பரிசோதித்துப் பார்த்தார்.

''உயிருக்கு ஒண்ணும் ஆபத்தில்லே பட்டாபி! அதிர்ச்சியில் மயக்கம். எதற்கும் நான் இவனை ஆஸ்பத்திரிக்கு அழைச்சுக்கிட்டுப் போறேன்....'' என்றார் காசிராம்.

டாக்டரின் காரிலேயே புறப்பட்டுச் சென்ற பட்டாபி, அங்கு வந்திருந்த திவ்யாவின் பெற்றோருடன் சேர்ந்து அழுது முடித்து, உடல் மிகவும் சிதைந்துவிட்டதால் அருகேயே எரித்துவிட்டு வீடு வந்து சேர்ந்தனர்.

விடியற் காலையில் மயக்கம் தெளிந்த நிரஞ்சனிடம் டாக்டர் ஆதரவாக தட்டிக் கொடுத்து சுற்றி வளைத்து, வேதாந்தம் பேசிக் கடைசியில் விஷயத்தை நிதானமாகக் கூறினார். நிரஞ்சன் 'கலகல'வெனச் சிரித்தான். ஜானகியும் டாக்டரும் திகைத்தனர்.

''பயப்படாதேம்மா.... திவ்யா செத்துப் போகலே. நிச்சயம் வருவாள். பாரேன்...'' என்றான். டாக்டர் ஜானகிக்குச் ஜாடை காட்டவே அவள் பதில் எதுவும் கூறாமல் மகனுக்குப் ப்ளாஸ்கிலிருந்து சூடாக காப்பியை டம்ளரில் ஊற்றிக் கொடுத்தாள்.

உங்கள் தலையில்பேன்கள் அட்டகாசம் புரிந்து கொட்டமடிக்கின்றதா? இரவு படுப்பதற்கு முன் வசம்புத் தூளைத் தலையில் தூவிவிட்டு நிம்மதியாக உறங்குங்கள். பேன்கள் முன்னறிவிப்பின்றி ஓடிவிடும்!

— ஆர். அரிகோபி

அவனுக்கு அதிர்ச்சியில் மூளை கலங்கி விட்டதோ என பெற்றோர் பயந்தனர். டாக்டருக்கும் ஒன்றும் புரியவில்லை. நிரஞ்சன் எப்போதும் போலக் குளித்தான். சாப்பிட்டான். ஆபீஸுக்கும் கிளம்பினான். அவன் கிளம்புவதற்கு முன்னமேயே பட்டாபி டெலிபோனில் மானேஜரை அழைத்து விஷயம் முழுவதையும் கூறிவிட்டு,

''மிஸ்டர் சங்கர்! நிரஞ்சன் நம்பவில்லை. நீங்கள் யாரும் இதுபற்றி அவனிடம் எதுவும் பேச வேண்டாம். ஆபீஸில் எல்லோரிடமும் சொல்லி விடுங்கள்'' என்றார். மானேஜரும் வருத்தம் கூறிவிட்டு, அவர் சொன்னபடி எல்லாச் சிப்பந்திகளையும் எச்சரித்து வைப்பதாகச் சொல்லி போனை வைத்தார்.

வீட்டில் பட்டாபியும் ஜானகியும்தான் குழம்பினார்கள். நிரஞ்சன் பாதிக்கப்பட்டவனாகவே தெரியவில்லை. துக்கம் விசாரிக்க வந்தவர்களை வாசலோடு பேசித் திருப்பி அனுப்பிக் கொண்டிருந்தார் பட்டாபி. நாலைந்து நாட்கள் ஆமையாக ஊர்ந்தன.

**டா**க்டர் அமைதியாக அவனைப் பார்த்தார்.

''அம்மா! உங்க மனம் எனக்குப் புரிகிறது. நானும் இந்த விஷயத்தில் குழப்பமாகத்தான் இருக்கிறேன். டாக்டர்கள் முயற்சிதான் செய்ய முடியும். வெற்றியோ தோல்வியோ கடவுளின் கையில்தான் இருக்கிறது. கடவுளைப் பிரார்த்தனை செய்யுங்கள். நிரஞ்சன் கொஞ்சம் கொஞ்சமாக உண்மையை உணர்ந்து கொள்வான் என்று நம்புகிறேன். அவன் மனத்தில் திவ்யா எவ்வளவு ஆணித்தரமாக பதிந்திருக்கிறாள் என்று நமக்குப் புரிந்துவிட்டது. மூளை நரம்புகளுக்குப் பல வித வேலைகள் உண்டு. இது எந்த நரம்பின் அதிர்ச்சியில் ஏற்பட்ட சிக்கலோ.... புரியவில்லை. சில மாதங்கள் பொறுத்துப் பார்க்கலாமே.... என்ன பட்டாபி, புரிகிறதா நம்பிக்கையோடு இருங்கள்.'' என்றார்.

அலைபாயும் மனத்துடன் தம்பதிகள் வீட்டுக்குத் திரும்பினார்கள். ஜானகி குல தெய்வத்துக்கு வேண்டிக் கொண்டு முடிந்து வைத்தாள். வாழ வேண்டிய வயதில் அற்ப ஆயுளில் போய்விட்ட சுமங்கலியான மருமகளையும் மனத்தில் பிரார்த்தனை செய்து கொண்டாள். மகனின் நல்வாழ்வுக்காக ஏங்கித் தவித்த அவர்களுக்கு அந்த மல்லிகை இதழ் ஏதோ ஒரு வரப்பிரசாதமாகத் தோன்றியது.

''ஏங்க.... டாக்டர் இப்ப ஓய்வாகத்தானே இருப்பார். அவரிடம் இதைக் கொடுத்து ஏதாவது வழி பண்ணலாமா?'' ஜானகி ஆவலுடன் கணவரை நோக்கினாள்.

பட்டாபியும் சம்மதிக்க இருவரும் டாக்டரின் வீட்டுக்கு ஓடினார்கள்.

''டாக்டர்! இந்தப் பெண்ணையே திவ்யாவாக ஏற்றுக்கொண்டு நிரஞ்சன் மனத்தையும்

வாழ்க்கையையும் நல்ல விதமாக ஆக்கிவிட லாமே....'' ஜானகி படபடவெனப் பேசினாள். காசி சிரித்தார்.

''அவசரப்படாதீர்கள் அம்மா! எதையும் நன்ருக ஆலோசித்து நிதானமாகச் செயல்படணும். இந்தப் பெண் கருணை இல்லத்தில் இருக்கிறவள். அனாதையாக இருக்கலாம். கன்னிப் பெண்ணோ, கல்யாணம் ஆனவளோ, வாழ்விழந்தவளோ, கெடுக்கப்பட்ட பெண்ணோ, விதவையோ.... யாருக்குத் தெரியும். உங்கள் பிள்ளையின் எதிர்கால வாழ்வுக்காக நீங்கள் பெருந்தன்மையுடன் இந்தப் பெண்ணை மருமகளாக ஏற்க வரலாம் ஆனல் உற்ருர் உறவினர் — மற்ற சமூகத்தில் இதனல் ஏச்சு பேச்சுக்கு இடம் ஏற்பட்டால் அதுவும் நிரஞ்சனின் வாழ்க்கையைப் பாதித்துவிடாதா? உணர்ச்சிவசப்பட்டு எதையும் செய்யக் கூடாதம்மா, வாழ்க்கையின் நடைமுறைகளையும் சிந்திக்கணும். அதனல் நீங்கள் கொஞ்சம் பொறுமையாக இருங்கள். நான் நன்ருகச் சிந்தித்து நாளைக்கு வீட்டிற்கு வந்து பேசுகிறேன்...'' என்ருள்.

''ஆமாம் ஜானகி! அவசரப்படாதே'' என்ற பட்டாபி ''காசி நீதான் இதற்கு நன்கு யோசித்து வழி பண்ணணும்...'' என்று கூறி மனைவியை அழைத்துக் கொண்டு வீட்டிற்குக் கிளம்பினர்.

மறுநாள் பிற்பகல் இரண்டு மணிக்கு பட்டாபியின் வீட்டுக்கு வந்த டாக்டரை, எதிர்பார்த்துக் காத்திருந்த ஜானகி, ''வாங்க டாக்டர்.... வாங்க....'' என்று வரவேற்ருள். சோபாவில் சாய்ந்து கொண்ட டாக்டர் ஆவலோடு காத்திருக்கும் அந்தத் தம்பதிகளைப் பார்த்து புன்னகை செய்தார்.

''என்னம்மா... ராத்திரி தூங்கினீங்களா, இல்லையா....?''

''தூக்கமா, இரண்டு மாதமாச்சு, தூங்கி...'' என்ருள் ஜானகி கனத்த இதயத்துடன்.

''பட்டாபி! நாம்ப நாளைக்கு அந்தக் கருணை இல்லத்துக்குப் போகிருேம். அதன் தலைவி தமயந்தி அம்மாளிடம் போனில் பேசியிருக்கிறேன். அங்கு போய் அந்தப் பெண் வித்யாவைப் பற்றி விசாரிக்கணும். அவர்களும் நமக்கு உதவ ஒப்புக் கொண்டால் ஒரு நாடகம் போல நடிக்கணும். திவ்யா வியாதி வந்து படுக்கையில் கிடந்து கண் எதிரில் இறந்து போயிருந்தால் நிரஞ்சனுக்கு மன அதிர்ச்சி ஏற்பட்டு இருக்காது. வரப் போகிருள் என்று ஆசையும் பாசமுமாக காத்திருக்கும்போது விபத்தில் இறந்துவிட்டாள் என்ற செய்தி அவனைப் பலமாகத் தாக்கியிருக்கிறது. அவன் மனம் நம்ப மறுக்கிறது. அதனல் அவன் எதிர்பார்க்கிற வழியாகவே நாமும் போய் அவன் மனத்தை பக்குவப்படுத்தணும். அந்த வித்யாவைத் திவ்யாவாக மாற்றி ஏற்றுக் கொள்ளணும். ரயில் விபத்தில் அவளுக்கு உடலில் எந்தக் காயமும் ஏற்படவில்லை. அதிர்ச்சியில் இதயம் ரொம்ப பாதிக்கப்பட்டிருக்கிறது. முதுகு எலும்பு வலு குறைந்து நடமாடும் சக்தியை இழந்துவிட்டது. நாக்கு பேசும் சக்தியை இழந்துவிட்டது. ஏதோ சில நாள் உயிர் ஒட்டிக் கொண்டிருக்கிற நிலையில் படுத்த படுக்கையாக இருக்கிறதாகச் சொல்லி படுக்கை நோயாளியாக ஆக்கி ட்ரீட்மெண்ட் கொடுப்பதாகப் பாவனை செய்து நிரஞ்சன் கண் எதிரில் அவள் கொஞ்சம் கொஞ்சமாக உயிரிழப்பதாக நடிக்கணும். அவன் மனம் அப்பப் பக்குவப்பட்டு விடும். திவ்யா இறந்துவிடுவாள் என்று அவன் மனம் நம்பிவிடும். அவனுகவே அந்த இழப்புக்குத் தயாராகிவிடுவான். பிறகு அவள் இறந்துவிட்டதாக நாடகத்தை முடித்து விடலாம்...'' டாக்டர் விவரித்தார்.

''காசி! அப்பக் கூட அவன் பார்வையில் அவள் இறந்து விடுவதாக இருக்க வேண்டாம். அவன் தன் மனைவிக்கு கொள்ளி வைக்கக் கிளம்பிவிட்டால் என்ன செய்வது? பயமாக இருக்கிறது....''

''இரு.... இரு.... பட்டாபி! அதற்கும் ஒரு வழி செய்யலாம். அவனை ஆபீஸ் வேலையாக முக்கியமான மீட்டிங்குக்காக டில்லிக்கு அனுப்பணும். அந்தச் சமயத்தில் இறந்துவிட்டதாகக் கூறி அந்தப் பெண்ணை தமயந்தி அம்மாளிடம் ஒப்படைத்துவிடலாம். அது ஒன்றும் கஷ்டமில்லை.''

''இந்த ஏற்பாடும் நன்ருகத்தான் இருக்கிறது.... நல்லபடியாக நடக்கணுமே. அதுதான் கவலை....'' ஜானகி பெருமூச்சுவிட்டாள்.

''அம்மா! சித்தப்பிரமையை தெளிவிக்க எத்தனையோ விதமான சிகிச்சைகள் நடக்கின்றன. இது பற்றி கவலையே பட வேண்டாம். அவர்களை ஒப்புக் கொள்ள வைக்கணும். நாமும் நிரஞ்சன் நம்பும்படி அந்தப் பெண்ணை திவ்யா உருவில் மாற்றி பாசமும் பரிவுமாக பழக்கி நடிக்கணும். நாளைக்குப் பகல் இதே நேரத்துக்கு நீங்கள் இருவரும் என் வீட்டிற்கு வந்துவிடுங்கள். நாம் மூவரும் அடையாறு போய் அவர்களைச் சந்தித்துப் பேசலாம். பட்டாபி! அந்த இல்லத்துக்கு டொனேஷனுக இரண்டாயிரம் ரூபாய் எடுத்துக் கொண்டு வா....'' என்ருர்.

சில நிமிஷங்கள் அந்த ஏற்பாட்டில் ஏதாவது சிக்கல் ஏற்படுமோ என பலவிதமாக அலசி ஆராய்ந்து தெளிவு படுத்திக் கொண்

இரவு படுக்கும்போது கை கால்களில் நல்லெண்ணெயை தேய்த்துக் கொண்டு படுங்கள். மூட்டைப் பூச்சி, கொசு போன்ற நமது இராக்கால நண்பர்கள் நம் மீது படையெடுக்க மாட்டார்கள்!

— ஆர். அரிகோபி

டனர்.

அடுத்த நாள் ஒரு மணிக்கே பட்டாபியும் ஜானகியும் தயாராகிவிட்டனர். டாக்டருக்குப் போன் செய்துவிட்டுக் கிளம்பினார்கள். டாக்டரும் தயாராக இருக்க மூவரும் காரில் கிளம்பினார்கள்.

அடையாறு கருணை இல்லத்துக்குள் கார் சென்றதும் தமயந்தி அம்மாள் வாசலுக்கு வந்து அவர்களை வரவேற்றாள். அந்த இடம் வெகு அமைதியாகச் சுத்தமாக இருந்தது. வாசற்பக்கம் இருந்த புஷ்பச் செடிகளிலிருந்து மணம் பரவியது.

இல்லத்துத் தலைவி தமயந்தி அம்மாள் ஒடிசலான தேகமும், அமைதியான முகமுமாகக் காணப்பட்டாள். "வாங்க..... வாங்கம்மா....." என்று வரவேற்று முன் ஹாலில் இருந்த நாற்காலிகளில் அமரச் செய்தாள். காரிலிருந்து டிரைவர் எடுத்து வைத்தக் கூடையையும், பாக்கெட்களையும் "என்ன இதெல்லாம்....?" என்பது போலப் பார்த்தாள்.

"இங்கே இருக்கிற குழந்தைகளுக்காக ஏதோ கொஞ்சம் கொண்டு வந்தோம்..." ஜானகி புன்சிரிப்புடன் கூறினாள்.

ஜானகியின் தோற்றத்திலிருந்தே பணக்காரச் செழுமையை தமயந்தி புரிந்து கொண்டாள். அனாதைக் குழந்தையை தத்து எடுத்துக் கொள்ள வந்திருப்பதாக அவள் நினைத்தாள். டாக்டர் தன்னையும் பட்டாபி, ஜானகியையும் அறிமுகப்படுத்திக் கொண்டார். பிறகு இல்லத்து விஷயமாகக் கொஞ்சம் பேசினார். பிறகு நிதானமாக, கூறினார்: "அம்மா! உங்களிடம் ஒரு உதவி கேட்க வந்திருக்கிறோம்" என்று ஆதியோடந்தமாக எல்லாவற்றையும் விவரித்தார்.

"உங்களிடம் எல்லாவற்றையும் சொல்லி விட்டேன். நீங்கள் வித்யாவைப் பற்றிச் சொல்லணும்," என்றார்.

தமயந்தி முதலில் தயங்கினாலும் வந்திருப்பவர்கள் கௌரவப்பட்ட மனிதர்கள் என்று தெரிந்ததால் சொன்னாள்.

"ஒரு நல்ல குடும்பத்துப் பெண்தான். தஞ்சைக்கு அருகில் கிராமத்தில் பிறந்து வளர்ந்தவள். சின்ன வயதில் பெற்றோரை இழந்த அனாதை. அத்தையிடம் வளர்ந்தாள். அத்தையும் ரொம்ப ஏழை. சம்சாரி வேறு. கல்யாணம் என்ற பெயரில் ஒரு கயவனிடம் வித்யாவை சேர்த்துவிட்டாள். குடிகாரன், முரடன் அவனிடம் அடியும் உதையும் பட்டுத் தற்கொலை செய்து கொள்ளும் நிலைக்கு வந்துவிட்டாள். அப்போதுதான் நான் தற்செயலாக அவளைக் காப்பாற்றி இந்த இல்லத்துக்கு அழைத்து வந்தேன். அந்தக் கயவன் வேறு ஒரு பெண்ணோடு எங்கோ ஓடிவிட்டான். வித்யா இங்கு வந்து மூன்று வருஷமாகிறது. நல்ல பெண். சுறுசுறுப்பாக எல்லாம் செய்வாள். எதையும் வெகு சீக்கிரம் கற்றுக் கொள்வாள். இந்த இல்லத்தில் எல்லாருக்குமே அவளை நிரம்பப் பிடிக்கும். ஆண்டு விழாவில் பல சிறப்பு நிகழ்ச்சிகளை நடத்தினாள். நாடகத்தில் நடித்துப் புகழும் பரிசும் பெற்றாள்."

"அம்மா! முதலில் வித்யாவின் போட்டோவைப் பார்த்ததுமே இந்த அம்மாள் அவளைத் தன் மருமகள் ஸ்தானத்தில் ஏற்கவே ஆசைப்பட்டாள். ஆனால் இது நடைமுறையில் சாத்யமில்லை என்று நான் உணர்த்தினேன். உறவினர், நண்பர்கள் போன்ற சமூகத்தில் ஏற்றுக் கொள்ளத் தயக்கம் ஏற்படும். இதனால் நிரஞ்சன் வித்யாவின் எதிர்காலத்தில் சிக்கல்களும் ஏற்படலாம் என்று நான் சொன்னேன். நிரஞ்சனின் சித்தப் பிரமையைப் போக்க சிகிச்சை அளிப்பதுதான் நல்லது என்று எனக்குத் தோன்றியது. நன்றாக யோசித்து வித்யாவைத் திவ்யாவாக நடிக்க வைத்து அவன் மனத்தை குணப்படுத்தலாம் என்று நினைக்கிறேன்....." என்ற டாக்டர் தன் திட்டத்தை நிதானமாகப் புரியும் வகையில் மீண்டும் விவரித்தார்.

"நல்ல திட்டம்தான். ஆனால் தவறாக நினைக்காதீர்கள். வித்யாவும் இளம் பெண். உங்கள் மகனும் இளைஞர்...." என்று சொல்லும்போதே ஜானகி, குறுக்கிட்டாள்.

"அம்மா! நீங்கள் சொல்ல வருவது புரிகிறது. எங்கள் மகன் என்பதற்காக உயர்வாகச் சொல்லுவதாக நீங்கள் எண்ணாதீர்கள். நிரஞ்சன் பண்பும் நற்குணமும் உள்ளவன். மனைவியிடம் உயிரையே வைத்திருப்பவன். நோயாளியாக படுத்த படுக்கையாக உயிருக்குப் போராடும் நிலையில்தான் வித்யாவை சந்திக்கப் போகிறான். அவனுக்காக அவன் உருகித் தவிப்பானே தவிர எல்லை மீறி நடக்க மாட்டான். வித்யாவுக்கு நான் பாதுகாப்பாக இருப்பேன். நீங்கள் கவலைப்பட வேண்டாம். எங்கள் மகனுக்கு வாழ்வு கொடுப்பது உங்கள் கையில்தான் இருக்கிறதம்மா...." கலங்கிய குரலில் சொன்னாள்.

"சரியம்மா.... எதற்கும் நாம் எச்சரிக்கையாக இருப்பது நல்லதில்லையா.... அதற்குத்தான் அப்படிக் கேட்டேன். இருங்கள். வித்யாவிடம் நானே போய்ப் பேசி அவள் அபிப்ராயத்தையும் கேட்டு உங்களிடம் அழைத்து வருகிறேன்..." என்று கூறி எழுந்தாள்.

பக்கோடா மாவுடன் சிறிதளவு நெய்யும் உப்பு போடப்பட்ட தயிரும் கலந்து நன்றாகப் பிசைந்து கொண்டு பக்கோடா செய்தால், பக்கோடா மொற மொறப்பாக இருப்பதுடன் ருசியாகவும் இருக்கும்.

— ராமலட்சுமி

மின்னும் மேனி
மெருகுக்கு ரெக்ஸோனா











மின்னி மிளிரும் மேனி...எந்நாளும் உங்கள் பொன்னான கனவு...நிறைவேற வரமளிப்பது ரெக்ஸோனா.

சரளம், கருவா, கிராம்பு, ஹபுஷா (தேவதாரம்) ஆகிய நாலு வகை இயற்கைத் தைலங்களின் நற்கலவையால ரெக்ஸோனா...சருமப் பராமரிப்பிற்கு இயல்பான வழியாகும்.

**ரெக்ஸோனா**

**உங்கள் மேனியை மென்மையோடு மெருகு மிளிர வைக்கிற-**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரி

LINTAS RX 90 2416 TM

# பேனினால் தலைமுடி உதிரும்

நறுமணம் கமழும் கென்ஸ் தைலத்தை உபயோகித்து ஈறையும், பேனையும் அறவே ஒழியுங்கள். தலை முடியை பாதுகாத்துக் கொள்ளுங்கள்.

## கென்ஸ்

'சிறந்த பேன் நாசினி'

ஈறுகளையும் கொல்லும் பென்சோகெயின் கலந்தது.

தீங்கற்றது.




PHARM PRODUCTS

பார்ம் ப்ராடக்ட்ஸ்
பிரைவேட் லிமிடெட்
தஞ்சாவூர் - 613 007
தமிழ்நாடு

விற்பனை விவரங்களுக்கு எழுதவும்.

PP 274/86/TAM

---

மதுராலயம் மதுராலயம் மதுராலயம் மதுராலயம் மதுராலயம் மதுராலயம் மதுராலயம் மதுராலயம்

## சித்த - ஆயுர்வேத - ஓமியோபதி - அக்குபங்சர் மருத்துவமனை



- நாட்பட்ட நோய் (Chrogic) களுக்கு மட்டுமே ஆலோசனை/சிகிச்சை தரப்படுகிறது
- பலரது வேண்டுகோளுக்கிணங்கி முன் தேதி-நேரம் (Pre-appointment) பெற்றுள்ளவர்களுக்கே முன்னுரிமை வழங்கப்படுகிறது
- முன் பதிவிற்கான விண்ணப்ப படிவம் வேண்டுவோர்க்கு அனுப்பப்படும்
- முன் தேதி-நேரம் (appointment) பெறுவதற்கான விண்ணப்ப படிவங்கள் காலை 8 மணி முதல் 10.30 மணி வரையிலும் கிட்டும். ஞாயிறு விசாரணைகள் தவிர்க்கப்படும். தபால் மூலம் விண்ணப்பப் படிவங்களை பெறலாம்.

★ தேகத்தின் எந்தவொரு பாகத்திலும் ஏற்படும் வலிகள், இளம்பிள்ளை வாதம், பக்கவாதம், கீல்வாதம் போன்ற எல்லாவகை வாதம், இதய நோய்கள், அடி படுதல் போன்ற விபத்துக்களால் ஏற்படும் நரம்புக் கோளாறுகள் (வலிகள், உறுப்புகள் இயக்கமின்மை) சைனஸ், ஈஸ்னோபில் நோய்கள், தலைவலி, குடற்புண், மூல நோய்கள், பிறவிக் காது கேளாமை, வாய் பேசாமை, திக்கிப் பேசுதல், இழைப்பு — இருமல், வயிற்று வலி, கை-கால் நடுக்கம், குரல் கோளாறுகள், செதில் உதிர்தல், இடைவிடா அரிப்பு, வெண் புள்ளிகள் முதலிய சர்ம நோய்கள், செக்ஸ் தொடர்பான நோய்கள், மற்றும் இதில் குறிப்பிடாத நோயுள்ளோரும் கூட முன் தேதி-நேரம் பெற்று குறிப்பிட்ட நேரத்தில் வருதல் நன்று.

கிளினிக் மதுராலயம்
36, டாக்டர் முனியப்பா ரோடு,
கீழ்ப்பாக்கம்,
சென்னை-10.

clinic
Mathuralayam

தொலைபேசி : 662878

மதுராலயம் மதுராலயம் மதுராலயம் மதுராலயம் மதுராலயம் மதுராலயம்

மதுராலயம் மதுராலயம் மதுராலயம் மதுராலயம் மதுராலயம்

''ஆமாம். அது ரொம்ப அவசியம்...'' பட்டாபி கூறினர். தமயந்தி ஒரு வேலைக்காரனை அழைத்து இல்லத்தை முழுதும் சுற்றிக் காட்டும்படிச் சொல்லிவிட்டு உள்ளே சென்ருள். டாக்டரும் பட்டாபியும் ஜானகியோடு வேலைக்காரனைத் தொடர்ந்து தோட்டங்களையும் வகுப்பு அறைகளையும், சமையல் சாப்பாட்டு கூடங்களையும், நூலக அறைகளையும் பார்த்து வியந்தபடி மறுபடி வரவேற்பு அறையில் வந்து அமர்ந்தனர்.

வெளிப்புற வராந்தாவில் தமயந்தியோடு ஒரு இளம் பெண் வருவது ஜன்னல் வழியாகத் தெரிந்தது. அவள்தான் வித்யா என்று புரிந்தது. ஒரே அச்சில் வார்க்கப்பட்ட உருவ அமைப்பைக் கண்டு மூவரும் வியந்தனர். ஆனல் திவ்யா கவலையற்ற செழிப்பான வாழ்க்கையினல் உடல் தள தளவென இருந்தாள். பணத்தின் வளத்தினல் நிறம் கூடச் சிறிது தூக்கலாக இருந்தாள். வித்யா வறுமையில் உழன்றவள். வாழ்க்கையில் அடிபட்ட துயர ரேகையின் நிழல் அந்த இளமையான அழகு முகத்தில் லேசாக பரவியிருப்பதை அவளால் மறைக்க முயலவில்லை. இந்த வித்யாசம்தான் கூர்ந்து பார்ப்பவர்களுக்குப் புரியும். அசப்பில்திவ்யாவின் உருவ ஒற்றுமை இருந்தது.

ஹாலுக்குள் நுழைந்ததும் மூவரையும் பார்த்து கை குவித்தாள். லேசாக புன்னகை புரிந்தாள்.

''வாம்மா.... வித்யா....!'' ஜானகி அழைத்தாள்.

''நான் வித்யா இல்லே அத்தை! நான் திவ்யா!''

சடாரென்று மூவரும் விழிகளை மலர்த்தினார்கள். இந்த ஒரு வார்த்தையின் மூலமாகவே தன் சம்மதத்தை உணர்த்திவிட்ட கெட்டிக்காரத்தனத்தை மனம் வியக்கச் சிலையாக உட்கார்ந்துவிட்டனர், பட்டாபியும் டாக்டரும். ஜானகியும் அவசரமாக எழுந்து அவளை அணைத்துக் கொண்டு உணர்ச்சி மிகுதியால் கதறிவிட்டாள். தமயந்தியும் கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

''ரொம்ப நன்றிம்மா....'' பட்டாபி நெகிழ்ந்த குரலில் தன் மகிழ்ச்சியை வெளிப்படுத்தினர்.

''உட்காருங்க அத்தை....'' ஜானகியை அமர வைத்தாள் வித்யா.

''அம்மா எனக்கு எல்லா விவரமும் கூறினார்கள். பயனற்ற ஜன்மம் எடுத்தவள் என்றிருந்தேன். என்னுலும் ஒரு குடும்பத்துக்கு நன்மை ஏற்படும் என்ருல், அதற்கு நான் பெருமைப்படுகிறேன். வெயிலில் நின்றவர்களுக்குத்தான் நிழலின் அருமை தெரியும். நான் இப்ப மூன்று வருஷமாகத்தான் இந்த இல்லத்தில் அம்மாவின் அன்பு நிழலில் இருக்கிறேன். வாழ்க்கையில் இரண்டு மாமாங்கங்களை அனல் கொளுத்தும் வெயிலிலேயே கழித்தவள்.

''டாக்டர் நான் எந்த விதமாக நடக்க வேண்டும் என்பதை நன்ருக விளக்கிச் சொல்லிவிடுங்கள். உங்கள் முயற்சியில் என்னால் எந்தச் சிக்கலும் ஏற்படாமல் இருக்க வேண்டும்...'' என்று அடக்கமாகக் கூறினாள்.

தமயந்தி அவளையும் ஒரு நாற்காலியில் அமரச் சொன்னாள். டாக்டர் காசி பட்டாபியின் குடும்பம், நிரஞ்சனின் உத்யோகம், கல்யாணம் இல்லற வாழ்க்கை, பிறகு நடந்த துயரச் சம்பவம், அதனல் ஏற்பட்ட நிரஞ்சனின் மனநிலை எல்லாவற்றையும் கூறிவிட்டுப் பிறகு அதற்காக அவர் நடத்த இருக்கும் நாடகத்தையும் விவரித்தார். எப்படி முடிக்க வேண்டும் என்பதையும் கூறினர்.

''அம்மா! திவ்யாவுக்கும் உனக்கும் உருவ ஒற்றுமையிருந்தாலும் வித்யாசமும் இருக்கிறது. ஆனாலும் அதுவும் நல்லதுதான். திவ்யா இப்போது நோயாளியாக, அதிர்ச்சியில் பேசும் சக்தியை இழந்தவளாக விபத்தின் அதிர்ச்சியினல் உடல் மெலிந்தவளாகக் காட்ட இந்த வித்தியாசமான தேக அமைப்பும் நல்லதுதான்....'' என்ருர்.

''ஊமையாக நடிக்க வேண்டியதும் மிகவும் அவசியம்தான். என்னதான் உருவ ஒற்றுமையை வைத்து மிஸ்டர் நிரஞ்சனை நம்ப வைத்தாலும் குரலில் வித்தியாசம் தெரியலாம்... மேலும் அவர்களுக்குள் அந்தரங்கமான சம்பாஷணைகள் நடந்திருக்கும். அது தெரியாமல் நான் ஏதாவது உளறி வைத்தாலோ, தெரியாமல் விழித்தாலோ நம்ப முயற்சி வீணுகிவிடுமே...''

''கரெக்ட்.... அதனல்தான் விபத்தின் அதிர்ச்சியில் பேசும் சக்தியை இழந்துவிட்டதாகக் கூறுவேன். இந்த நாடகத்தை அதிக நாட்களுக்கு ஓட்ட முடியாது. இரண்டே வாரத்தில் திவ்யா இறந்து விடுவதாக முடித்துவிடணும். எத்தனைச் சீக்கிரம் முடிக்கிருேமோ அத்தனை நல்லது. சிக்கல் ஏற்படாது. சரி.... இப்ப முக்கியமான விஷயம் தீர்மானித்துவிட்டாச்சு. இன்னும் சில பாக்ரௌண்ட் இருக்கு. அதையும் விவரமாகக் கூறி விடுகிறேன்....'' என்ற டாக்டர் மற்றும் சில ஏற்பாடுகளைப் பட்டாபி ஜானகி தமயந்தி, திவ்யா எல்லாருக்கும் விளக்கிக்

பெங்களூருக்கு ஒரு கல்யாணத்திற்குச் சென்றிருந்தபோது சாப்பிட்ட லட்டு மிகவும் சுவையாயிருந்தது. சமையல்காரரைக் கேட்டதில் முந்திரிப் பருப்பு, திராட்சை, கிராம்பு, ஏலக்காய், இவற்ருேடு கொப்பரையையும் துருவிப் போட்டால் சுவையாக இருக்கும் என்ருர். நீங்களும் இப்படிச் செய்யலாமே.

— இந்திரா

கூறினார்.

விடை பெறுவதற்குமுன் பட்டாபி தான் கொண்டு வந்திருந்த தொகையை தமயந்தி அம்மாளிடம் நீட்டினார்.

''தவறாக எதுவும் எண்ணாதீர்கள். இந்த இல்லத்துக்கு என்னால் இயன்ற அளவு உதவி....'' என்றார்.

தமயந்தி தயங்கினாள்.

''அம்மா! நாங்கள் எங்கள் ஒரு மகனுக்காக எத்தனை வேதனைப்படுகிறோம். நீங்களோ எத்தனை ஆயிரம் குழந்தைகளின் நல்வாழ்வுக்காக பாடுபடுகிறீர்கள். ராமாயணத்தில், சமுத்திரத்துக்கு அணை கட்ட வானர சேனைகள் மலைகளையெல்லாம் பெயர்த்துக்



கொண்டு வந்தபோது ஒரு சின்ன அணில் தன்னால் முடிந்த ஒரு கல்லைக் கொண்டு போட்டதாம். அது மாதிரிதான். உங்களுடைய புண்ணிய புனிதமான சேவையில் எங்களுக்கும் கொஞ்சம் பங்கு கிடைக்கட்டுமே.." பட்டாபி லேசாகச் சிரித்தபடி, தமயந்தியின் கையில் திணித்துவிட்டார்.

உள்ளத்தில்தவிப்பும்பரபரப்பும் இருந்தாலும் ஜானகியும் பட்டாபியும் வெளிக் காட்டாமல் சாதாரணமாக இருந்தனர். பட்டாபி மனக்குழப்பத்தினால் ஒரு மாதம் லீவில் இருந்தவர் மீண்டும் ஆபீஸுக்குப் போக ஆரம்பித்தார். சில நாட்கள் சென்றன.

அன்று பகல் ஜானகி சோபாவில் படுத்து எதையோ படித்துக் கொண்டிருந்தாள். வாசலில் கார் நிற்கும் சப்தம் கேட்டு எழுந்து சென்று கதவைத் திறந்தாள். பட்டாபியும் நிரஞ்சனும் அவசரமாக உள்ளே



நுழைந்தனர். நிரஞ்சன் தாயிடம் வந்து,

"அம்மா... அம்மா... இவ்யா செத்துப் போகலேம்மா. உயிரோடு இருக்காளாம். இன்னிக்கு மாமா பெங்களூரிலிருந்து டிரங் காலில் பேசினார், அம்மா."

உற்சாகமும் ஆவலுமாகச் சொன்ன போது திகைத்தவளாக நடித்த ஜானகி,

"என்னங்க... என்னங்க.... நிஜம்மாவா? என்ன சொல்றான் நிரஞ்சன்? சம்பந்தி போன் பண்ணினாரா? என்ன சொன்னார்...?"

> சில உணவுத் தயாரிப்பு முறைகளில் டேபிள்ஸ்பூன் அளவு கொடுத்திருக்கும். மூன்று டீஸ்பூன் ஒரு டேபிள்ஸ்பூன்.
>
> — ஜெயா

பட்டாபி ஆமாம் என்பது போலத் தலை ஆட்டினார்.

''அம்மா! அப்பாவைத் தொந்தரவு பண்ணாதே. நானே சொல்றேன்...'' என்றான் நிரஞ்சன். பட்டாபி களைப்படைந்தவர் போல சோபாவில் சாய்ந்து கண்களை மூடிக் கொண்டார். நிரஞ்சன் தாயின் அருகில் உட்கார்ந்து சிறு குழந்தை போலப் பேசினான்.

''அம்மா... ரயில் விபத்திலே அடையாளம் தெரியாம... யாரையோ பார்த்து திவ்யான்னு நினைச்சுச் செத்துப்போயிட்டான்னு நினைச்சிருக்காங்க. திவ்யா மேலே யார் யாரோ விழுந்ததினாலே உடம்பு மேலே எந்தக் காயமும் படவில்லை. ஆனால் நினைவு இல்லாமல் கிடந்தவளை கும்பலோடு கும்பலா ஆஸ்பத்திரிக்கு எடுத்துக் கொண்டு போட்டிருக்கிறார்கள். இவ்வளவு நாள் நினைவே திரும்பலே. இப்பத்தான் இரண்டு நாளுக்கு முன்னாலே கண் விழிச்சாளாம். ஆனாப் பேச முடியலே. முதுகெலும்பிலே பலமான அடி. அதனாலே எழுந்து நடமாட முடியலே. ஆனா மூளையிலே பாதிப்பு இல்லே. நல்ல நினைவு வந்திருக்கு. யாரு என்று டாக்டர்கள் விசாரித்ததும் எழுதிக் காட்டியிருக்கிறாள். அவ அப்பா அட்ரஸ் எழுதிக் காட்டியிருக்காள்.

டாக்டர் உடனே மாமாக்குத் தகவல் அனுப்பியிருக்கிறார். மாமா மாமி போய்ப் பார்த்து அவாளுக்கு நம்பக் கூட முடியலையாம். மாமா உடனே அப்பாக்கும் எனக்கும் போன் பண்ணி விட்டார். ஆனா.. ஆனா... அம்மா... திவ்யா அதிக நாள் இருக்க மாட்டாளாம். இருதயம் ரொம்ப பலஹீனமாகி விட்டதாம். எந்த நிமிஷமும் என்ன வேண்டுமானாலும் ஆகும் என்று டாக்டர் சொல்லியிருக்கார்ன்னு மாமா அழுதுவிட்டார். நாளைக்குக் காலை ப்ளேனில் திவ்யாவை அழைச்சுண்டு மாமா, மாமி வர்றாளாம்.''

பதற்றமாக மனைவி உயிரோடு இருக்கிறாள் என்ற வேகத்தில் பேச ஆரம்பித்துக் கடைசியில் அவள் உயிர் ஊசலாடிக் கொண்டிருக்கிற நிலையில் கேவலுடன் முடித்தான். கண்கள் கலங்கின. இதழ்கள் துடித்தன. வெறித்த பார்வையோடு உட்கார்ந்து விட்டான்.

''ஐயோ... நிரஞ்சன்... திவ்யா... திவ்யா... தெய்வமே...'' ஜானகி புலம்பலுடன் அழத் தொடங்கினாள்.

**ம**றுநாள் காலை அந்த வீட்டில் ஒரே பரபரப்பு. முன்கூட்டியே வீட்டு வேலைக்காரிக்கும் உள்ளூரில் இருக்கும் நெருங்கிய உறவினர்களுக்கும் அக்கம்பக்கத்து நண்பர்களுக்கும் நிரஞ்சனின் மனப்பிரமையைப் போக்க டாக்டர் நடத்தும் ஒரு சிகிச்சை நாடகம் என்று கூறியிருந்தார்கள். அவர்களும் ஒத்துழைத்தார்கள். யாரும் அனாவசியமாக எந்த வம்பும் பேசாதபடி கவனித்துக் கொண்டனர். நிஜமாகவே திவ்யா பிழைத்து வருவதைப் போல வியப்பைக் காட்டி மகிழ்ந்தனர். ஏர்போர்ட்டில் ஒரு சின்னக் குழந்தையைத் தூக்குவது போல திவ்யாவை அவள் தந்தையே தூக்கிக் கொண்டு வந்து காரில் ஏற்றி விட்டார். படுத்த நிலையில் இருந்தவளைப் பார்த்தான் நிரஞ்சன். அவளும் அவனைப் பார்த்தாள். அவள் இதழ்களில் துடிப்பு. கண்களில் கண்ணீர் பொங்கி வந்து கன்னங்களில் ஓடியது. நிரஞ்சனின் இதயம் படபடத்தது. பாசமும் பரிவுமாக அவளைப் பார்த்தான். வாடிய மலர் போலக் கிடப்பவளைக் கண்டு விம்மினான். டாக்டர் அவன் தோளைப் பரிவுடன் தட்டினார். பிறகு அனைவரும் காரில் ஏறிக் கொண்டு வீட்டுக்கு வந்தனர். அவளுக்காக ஹாலை ஒட்டி வாசற்புறத்தில் இருந்த பெரிய அறையை நன்றாகச் சுத்தம் செய்து கட்டில் போட்டுப் படுக்கை விரித்து வைத்திருந்தனர். அவளை அதில் படுக்க வைத்ததும் ஜானகி வந்து கண்ணீர் வழிய அவள் முகத்தை வருடிக் கொடுத்தாள்.

''டாக்டர்! திவ்யாவுக்கு என்ன ஆகாரம் கொடுக்கணும்? எல்லாம் சொல்லுங்க..'' என்றான்.

''நீங்க எல்லாரும் கொஞ்சம் வெளியே இருங்க. நான் அவளை டெஸ்ட் பண்ணிவிட்டு, பிறகு சொல்கிறேன்'' என்றார் டாக்டர்.

எல்லாரும் மௌனமாக ஹாலில் வந்து அமர்ந்தனர். ஜானகி சம்பந்திகளுக்குச் சூடாகக் காப்பி கலந்து கொண்டு வந்து கொடுத்தாள். ஒரு சில நிமிஷங்கள் கழித்து டாக்டர் வெளியே வந்தார். அவர் முகத்தில் ஓர் இறுக்கம். எல்லாருடைய பார்வையும் அவரையே மொய்த்தன.

''பட்டாபி! நீங்க எல்லாரும் தைரியமாக இருக்கணும். திவ்யா சில நாட்கள் உங்களோடு இருக்கக் கடவுள் விட்டு வைத்திருக்கிறார். அவ்வளவுதான் சொல்ல முடியும். கனமான ஆகாரம் கூடாது. கஞ்சி, பால், ஜூஸ்... கொடுக்கலாம். சக்திக்கு டானிக் எழுதித் தர்றேன். அதைத் தினமும் நான்கு வேளை கொடுக்கணும். ஏம்மா ஜானகி, ஒரு நர்ஸை அனுப்பி வைக்கட்டுமா... திவ்யாவுக்கு உதவியாக...'' டாக்டர் வினவினார்.

''வேண்டாம் டாக்டர். திவ்யா எங்கள் குழந்தை... அவளுக்கு நாங்களே எல்லாம் செய்கிறோம். நர்ஸ் வேண்டாம்.''

''சரி... உங்க இஷ்டம். நான் தினமும் இரண்டு வேளையும் வந்து செக் பண்றேன்.

கோத்ரெஜ்

# புதிய
# மேகா

## ஏ ஓ எஸ்* கொண்ட
## நீல டிடர்ஜெண்ட் கட்டி




நியாயத்திற்குப் போராடும் இந்தியாவின் நட்சத்திரம் ரஜனி
இப்போது மேகா மட்டுமே உபயோகிக்கிறார்.

*ஏஓஎஸ், அதிக நுரையையும் அதிக சலவைத்
திறனையும் தரும் அற்புதமான மூலப்பொருள்.

# நெஸ்டம் பேபி ஸிரியல்.
# ஆரம்பத்திற்கு பொருத்தமானது.
# வளர்ச்சிக்கு உன்னதமானது.

**நெஸ்டமும் பாலும்—முழுமையான போஷாக்கு உணவு.**

உங்கள் குழந்தைக்கு நான்கு மாதங்களாகும்பொழுது அவனுக்கு பாலுடன் திட உணவும் தேவை. அவனுடைய ஜீரணத்திற்கு உகந்த நெஸ்டம் கொடுங்கள்.

நெஸ்டத்தை கொதிக்க வைத்த வெதுவெதுப்பான பாலில் கலக்குங்கள். முழுமையான போஷாக்கு உணவு தயார். இது குழந்தை ஆரோக்கியமாக துறுதுறுவென்று வளர உதவுகிறது.

**நெஸ்டம் குழந்தை உணவு பலவித சுவைகளில்**

உங்கள் குழந்தை வளர வளர அவனுக்கு புதிய சுவைகளை அறிமுகப் படுத்துங்கள். உதாரணமாக, மசிய வைத்த காய்கறிகள், வேக வைத்த பழங்கள் மற்றும் பருப்பு வகைகள் முதலியன. இது அவன் விரைவில் பெரியவர்களுடன் உணவை பகிர்ந்துகொள்ள உதவும்.

## நெஸ்டம்®
### ரைஸ்

இரும்புச்சத்து மற்றும் வைட்டமின்கள் அடங்கியது. பாலுடன் கலக்கவும்






அவள் இருக்கும் சில தினங்கள் சந்தோஷமாக இருக்கட்டும்... அவள் எதிரில் வேதனையைக் காட்டிக் கொள்ளாதீர்கள்'' என்ற டாக்டர், நிரஞ்சனை ஜாடையாக அழைத்தார். டாக்டர் எழுந்து செல்லக் குறிப்பறிந்து நிரஞ்சன் பின் தொடர்ந்தான். டாக்டர் அவனை அணைத்துக் கொண்டார். பிறகு அன்புடன் தட்டிக் கொடுத்தார்.

''நிரஞ்சன்! டேக் இட் ஈஸி. இந்தச் சமயத்தில் உபதேசம் செய்வது சுலபம்தான்... ஆனால்... இதுதான் உனக்கும் டானிக் மாதிரி. மனத்தைத் தளர விடாதே... எல்லாமே விதியின் செயல். கடவுளின் செயல். மனத்தைக் கல்லாக்கிக் கொள்ளணும். உன் மனைவியிடம் உனக்குள்ள அன்பு எனக்குத் தெரிந்ததுதான். நீயே மனம் உடைந்து போனால் வயதான உன் பெற்றோர்... மாமா மாமி... என்ன செய்வார்கள்? நீ திடமாக இருக்கணும். அவ்வளவுதான் நான் சொல்ல முடியும். திவ்யா இப்ப உனக்கு மனைவியாக இல்லே. தோழி போல, குழந்தை போல எண்ணிக் கொள்ளணும்... நான் வரட்டுமா?'' என்று கிளம்பினார். நிரஞ்சன் சிலையாக நின்றான்.

பிறகு மெதுவாக திவ்யாவின் அறைக்குள் நுழைந்தான். கண்மூடிப் படுத்திருந்த திவ்யா அவன் வருவதை உணர்ந்து மெல்ல விழித்து அவனைப் பார்த்தாள். முகத்தில் துயரம் படர்ந்தது. கட்டிலின் அருகில் நாற்காலியில் அமர்ந்த நிரஞ்சன் மெதுவாக அவள் முகத்தைத் தன் கையால் வருடினான். அவள் உடம்பு லேசாகச் சிலிர்ப்பது அவனுக்குப் புரிந்தது. அவள் கையை வருடியவன் சில நிமிஷங்கள் அவள் விரல்களைத் தன் கைக்குள் பிடித்துக் கொண்டான். அவன் முகத்தில் இனம்புரியாத சலனம் பரவியது. நிதானமாக விரல்களை விட்டுவிட்டு,

''திவ்யா... நமக்கு ஏன் இப்படி ஆகணும்? நாம் யாருக்கும் ஒரு கெடுதலும் பண்ணலேயே... கடவுளுக்கு நம்மிடம் ஏன் இரக்கமில்லே... திவ்யா...'' முணுமுணுத்த குரலில் சொன்ன போது திவ்யா விம்மினாள். கண்ணீர் விட்டாள். அவன் கையைப் பிடித்துத் தன் முகத்தில் பதித்துக் கொண்டாள். இருவரும் மௌனமாகச் சில நிமிஷங்கள் இருந்தனர்.

''திவ்யா... கடவுளை நம்புவோம்... சரி... எனக்கு ஆபீஸுக்குப் போக டயமாச்சு... தைரியமாயிரு... சாயந்திரம் வந்ததும் பார்க்கிறேன்,'' என்று எழுந்து வெளியே வந்தான்.

ஹாலில் இருந்தவர்கள் அவன் முகத்தைப் பார்த்தனர். ''அம்மா! சாப்பாடு ரெடியா...ம்மா... நான் ஆபீஸுக்குப் போகணுமே...'' என்று டைனிங் ஹாலுக்குச் சென்றான்.

''எல்லாம் ஆச்சு. நிரஞ்சன்... வா... சாப்பிட...'' என்று டேபிள் மீது அவன் தட்டை வைத்துவிட்டுச் சாப்பாடு வகைகளை

---

**ஊறுகாயும், பூஞ்சைக் காளானும் நெருக்கமான நண்பர்கள். கவனிக்காமல் விட்டால் இருவரும் ஆரத் தழுவிக் கொண்டு விடுவார்கள்! ஜாடியின் உட்புறத்தைச் சூடான எண்ணெயைத் துணியைக் கொண்டு நனைத்துப் பூசிவிட்டு பிறகு ஊறுகாய் போடலாம். இப்படிச் செய்தால் இருவரும் எதிரிகளாகி விடுவார்கள்!**

**— ஆர். அரிகோபி**

---

உள்ளிருந்து கொண்டு வந்து பரிமாறினாள். ''நிரஞ்சன்! இன்னிக்கு ஆபீஸுக்குப் போய்த்தான் ஆகணுமா?'' மெதுவாக வினவினாள்.

''ஆமாம்மா. முக்கியமான வேலையிருக்கு. அப்பா என்ன சொன்னார்? அவர் இப்ப வரலையா?''

''இல்லே... அவர் மத்தியானம் ஆபீஸுக்குப் போவதாகச் சொன்னார். சரி.. நீ சாப்பிடு... நாங்க இங்கே கவனித்துக் கொள்கிறோம்...'' என்றாள். பிறகு அதிகம் பேச்சுக் கொடுக்க பயந்து சமையல் உள்ளே சென்றாள்.

நிரஞ்சன் கிளம்பிச் சென்றதும் வீட்டில் ஒரு சகஜ நிலை ஏற்பட்டது. ஆனாலும் மெதுவாகப் பேசிக் கொண்டனர். நிரஞ்சன் திடீரென்று வந்து விடுவானோ என்று பயந்தனர்.

''அவன் ஆபீஸுக்குப் போவதே நல்லது,'' என்றார் பட்டாபி. திவ்யா எழுந்து குளித்தாள். அவர்களுடன் சாப்பிட்டாள். பிறகு தன் அறையில் சென்று படுத்துக் கொண்டாள். அவள் மனம் எதை எதையோ நினைத்துத் தவித்தது. பகலில் சிறிது நேரம் வீட்டினுள் வளைய வந்தாள். புத்தகங்கள் படித்தாள். மாலை நான்கு மணி ஆனதுமே ஜானகி எச்சரித்துவிட திவ்யா படுக்கையில் படுத்துக் கொண்டாள்.

மாலை நிரஞ்சன் வந்ததும் டிபன் காப்பி சாப்பிட்டதும் திவ்யாவின் அறைக்குள் சென்று அமர்ந்து கொண்டான். வானொலியில் லால்குடியின் வயலின் கச்சேரியை கண்மூடிக் கேட்டுக் கொண்டிருந்தாள் திவ்யா. நிரஞ்சன் மௌனமாக அவளையே பார்த்தான். அதே சமயம் டாக்டர் காசி வந்தார். திவ்யாவை செக் பண்ணினார்., சில நிமிஷங்கள் பேசினார். அவர் சென்ற பின் திவ்யா பார்க்கும்படி ஹாலில் எதிரில் டெலிவிஷனை வைத்தான் நிரஞ்சன். அவளும் படுத்தபடி நிகழ்ச்சிகளைப் பார்த்துக் கொண்

டிருந்தாள். இரவு சாப்பாட்டுக்குப் பிறகு நிரஞ்சன் மாடியிலுள்ள தன் அறைக்குப் படுக்கச் சென்றான். ஜானகியும் திவ்யாவின் அம்மா மங்களமும் திவ்யாவின் அறையில் படுத்துக் கொள்வதாகச் சொல்ல பட்டாபியும் திவ்யாவின் தந்தையும் மாடிக்குச் சென்றார்கள். நிரஞ்சனின் அறையில் விளக்கு அணைந்த பிறகு ஜானகி திவ்யாவுக்கு அவள் அறைக்குள்ளேயே சாப்பாடு கொண்டு வந்து கொடுத்தாள்.

இரண்டு நாட்கள் காலையிலும் மாலையிலும் திவ்யாவின் அருகில் அமர்ந்து நிரஞ்சன் பேசினான். அவள் நெற்றியை வருடினான். அவள் கைகளைத் தன் கைக்குள் வைத்துக் கொண்டு, கவலையும் கண்ணீருமாகப் பார்த்தான். தாயிடம்,

''திவ்யாவுக்கு மருந்து கொடுத்தீர்களா... அவள் பால், ஜூஸ் குடித்தாளா?''

என்றெல்லாம் விசாரித்தான். பிறகு அவன் நடத்தையில் மாற்றம் ஏற்பட்டது. அருகில் அமர்ந்து சில நிமிஷங்கள் பார்த்து விட்டுப் போய்விடுவான். அவளுக்காக வீடியோ கேசட்டுகள் வாங்கி வந்து பார்க்கச் சொல்லுவான். நல்ல இசைக் கச்சேரிகளின் கேசட்டுகளை டூ இன் ஒன்னில் வைத்துக் கேட்கச் சொல்லுவான். வீட்டில் யாரிடமும் எதுவும் பேசுவதில்லை. அவன் பேசாதது நல்லது என நினைத்தாலும் அவர்கள் உள்ளத்தில் ஓர் உறுத்தலும் ஏற்பட்டது. அவனுடைய முக பாவத்திலிருந்து மன எண்ணங்களை கணிக்க முடியவில்லை., முகத்தில் எந்த பாவமும் இல்லாமல் மௌனமாக அவன் இருப்பதால் அவர்களுக்குப் பயமும் உண்டாயிற்று. வெகு சீக்கிரமே இந்த நாடகத்தை முடித்துவிட வேண்டுமென்று விரும்பினார்கள். ஒரு வாரம் சென்றது.

**அ**ன்று காலை டாக்டர் வந்தபோது ஜானகி கவலையோடு, ''டாக்டர்! நேற்று இரவிலிருந்து திவ்யா பாலோ கஞ்சியோ குடிக்கக் கஷ்டப்படுகிறாள். இரண்டு வாய் கூடக் குடிப்பதில்லை. எதனால் டாக்டர்? பாருங்களேன்...'' என்றாள். நிரஞ்சனும் சட்டென்று நிமிர்ந்து டாக்டரைப் பார்த்தான். டாக்டர் திவ்யாவின் அறைக்குள் சென்று பரிசோதனை செய்தார். திவ்யா லேசாக மயங்கிய நிலையில் இருந்தாள்.

டாக்டர் மௌனமாக ஹாலுக்கு வந்து அமர்ந்தார். எல்லோரையும் பார்த்தார்.

''அம்மா! மருந்துகளையோ, ஆகாரத்தையோ ஏற்கும் சக்தி குறைந்து கொண்டு வருகிறதம்மா. இரண்டு மூன்று அல்லது நாலைந்து நாட்கள்... தாக்குப் பிடிக்கலாம்... பிறகு... ஒன்றும் சொல்வதற்கில்லை... நீங்கள் எல்லாரும் மனம் தளரக் கூடாது. எந்த நிமிஷமும் எதையும் ஏற்கத் தயாராக இருக்கணும்... நான் அன்றைக்கே சொல்லி விட்டேனே... பட்டாபி! அவள் எங்கேயோ அனாதையாகப் போகாமல் தன் வீட்டில் தன் மனுஷாள் கண் பார்வையில் மெதுவாக அடங்கிக் கொண்டிருக்கிறாள்...'' என்று கூறிவிட்டு எழுந்தார். அத்தனை பேரும் வாய்விட்டு அழ முடியாமல் தவித்தனர். நிரஞ்சன் அப்பாவைப் பார்த்தான்.

''அப்பா! நாளை மறுநாள் போர்ட் மீட்டிங்குக்காக டில்லிக்கு நான் போகணுமே?''

''நிரஞ்சன்! நீ கட்டாயம் போகணுமா? வேறு யாராவது போக மாட்டாங்களா..?'' டாக்டர் வினவினார்.

''ஏன் நிரஞ்சன்! மிஸ்டர் கோசல்ராம் போகலாமே...!'' என்றார் பட்டாபி.

''இல்லேப்பா... அவர் இன்றிலிருந்து லீவு போட்டிருக்கார். அவர் பெண்ணுக்குக் கல்யாணம் நிச்சயம் செய்யப் பம்பாய் போகிறார்...''

''அடாடா... ஒன்று செய்யலாமே, ராமகிருஷ்ணனை அனுப்பலாமே!''

''முடியாதப்பா... டைரக்டர் குப்தா நேற்றே என்னிடம் கண்டிப்பாக நான்தான் போகணும் என்று சொல்லிவிட்டார். பரவாயில்லை. நானே போகிறேன்... நான் இருந்தால் மட்டும் என்ன சாதித்து விடப் போகிறேன்...?'' தலைகவிழ்ந்தான்.

''நிரஞ்சன்! யாருமே இந்த விஷயத்தில் எதையும் சாதிக்க முடியாது. நீ அருகில் இருந்தால் அவளுக்கும் உனக்கும்... எங்கள் எல்லோருக்குமே திருப்தியாக இருக்குமே... அதனால்தான்'' என்று டாக்டர் காசி கூறினார்.

''இல்லே டாக்டர்! என் மனசு கல்லாகி விட்டது. எதையும் தாங்கிக் கொள்ள முடியும்... நீங்கள் கவலைப்படாதீர்கள். நாளை மறுநாள் பகல் ப்ளேனில் போவேன். ஒரே ஒரு நாள்தான். மறுநாள் ப்ளேனில் திரும்பி விடுவேன்.''

''அதற்குள் ஏதாவது...'' ஜானகி மெதுவாக இழுத்தாள்.

''ஏதாவது ஆகிவிட்டால் நீங்களே நடத்தி விடுங்கள். எனக்காகக் காத்திருக்க வேண்டாம்... என்னால்... என்னால் அவள் உடலில் நெருப்பு வைக்க... முடியாதம்மா...''

வேகமாகக் குளியல் அறைக்குள் சென்று

புதுமொழி

ஸ்டவ் மூட்டத் தெரியாதவள் சமையல் புத்தகம் எழுதினாளாம்.

— வேதா



கதவை மூடிக் கொண்டான். ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர். பிறகு வருவதாகக் கூறிவிட்டு டாக்டர் புறப்பட்டார்.

அனைவரும் முகத்தில் பொங்கும் மகிழ்ச்சியை மறைக்கப் பாடுபட்டனர். அவர்கள் எதிர்பார்த்துத் தவித்த விஷயம் அது. அதை அவனாகவே சொல்லி விட்டதில் பரிபூரண நிம்மதி. இனி கவலையில்லை. நிரஞ்சன் ஆபீஸுக்குக் கிளம்பும் வரை அங்கு துயர நிழல் படர்ந்தது.

''நிரஞ்சன்! எனக்கு மனம் சரியாக இல்லை. எனக்கு இரண்டு நாட்கள் லீவு சொல்லி விடப்பா...'' என்றார் பட்டாபி. நிரஞ்சனும் தலையை ஆட்டிச் சம்மதம் தெரிவித்துவிட்டு, திவ்யாவின் அறைக்குள் நுழைந்து கனிந்த குரலில் அழைத்தான் — ''திவ்யா, திவ்யா...''

திவ்யா இமைகளைக் கஷ்டப்பட்டுத் திறந்து அவனைப் பார்த்தாள். முகத்தில் சோகம் மண்டியது. வெளிறிய இதழ்கள் துடித்தன. நெஞ்சுக் குழி ஏறி இறங்குவதிலிருந்து கண்ணீரை அடக்குவதும் புரிந்தது. அவள் கையை மிருதுவாகப் பற்றித் தன் இதழ்களில் பதித்துக் கொண்டான். பிறகு மெதுவாக விடுபட்டுக் கிளம்பினான்.

உணவு அருந்தும் போது ஜானகி அன்புடன், ''ஏம்மா,.... திவ்யா.. இரண்டு நாட்களாகச் சரியாகச் சாப்பிடவில்லையே. கோஸ் கறி பிடிக்காவிட்டால் சௌசௌ கூட்டு போட்டுக் கொள்ளேன்...'' என்று ஒரு கரண்டி போட வந்தாள்.

''வேண்டாம் அத்தை... என்னவோ ஒன்றும் பிடிக்கலை...'' என்றாள்.

''ஜானகி! பாவம் அவளை வற்புறுத்தாதே. பத்து நாட்களாக நம்மோடு பழகி விட்டாள். ஆச்சு நாடகம் முடியப் போகிறது. நாளை மறுநாள் காலை இவள் திரும்ப தமயந்தி அம்மாளிடம் போக வேண்டும். என்னதான் அவர்கள் நல்லவர்கள் என்றாலும் இல்லத்தில் எல்லா வசதியும் இருக்கிறதென்றாலும், ஒரு குடும்பச் சூழ்நிலைக்குச் சமமாகுமா?'' என்றார் பரிவுடன். திவ்யா தலையைக் கவிழ்த்துக் கொண்டு அழுதாள்.

அழாதேம்மா, திவ்யா... நீ இங்கு வர முடியாவிட்டாலும் நாங்கள் அடிக்கடி அங்கு வந்து பார்க்கிறோம். நீ எங்களுக்குச் செய்த இந்தப் பெரிய உதவிக்கு நாங்கள் எத்தனை செய்தாலும் போதாதுதான். ஆனாலும் நீ என்ன கேட்டாலும் செய்வோம், அம்மா...'' என்றாள் ஜானகி.

பகலில் வந்த டாக்டர் காசி.

''பட்டாபி! நாடகத்தின் முடிவு நெருங்கி விட்டது. நாளை பகல் நிரஞ்சன் டில்லிக்குக் கிளம்பிப் போகிறான். நாளைக்கு புதன் கிழமை... வியாழன் காலை தமயந்தி அம்மாளை இங்கே வரச் சொல்லலாமா?'' என்று வினவினார்.

''அவர்களை வரச் சொல்ல வேண்டாம் டாக்டர்! நாமே திவ்யாவை வியாழன் காலை கொண்டு விட்டுவிட்டு வந்துவிடலாம். நீங்கள் அன்று காலை காப்பி டிபனுக்கே இங்கே வந்து விடுங்கள். திவ்யாவைப் புறப்படத் தயார்ப்படுத்தி நாங்களும் தயாராக இருக்கிறோம். பிறகு வந்து டில்லியிலிருந்து திரும்பி வரும் நிரஞ்சனிடம் என்ன சொல்லணும் என்பதை முடிவு செய்யலாம்...'' என்றார் பட்டாபி. டாக்டரும் ஒப்புக் கொண்டு கிளம்பிச் சென்றார்.

மறுநாள் புதன் காலை நிரஞ்சன் கிளம்பும் போது திவ்யாவிடம் விடைபெற்றுக் கொண்டான். வியாழன் காலைதான் டில்லி ஆபீஸில் போர்டு மீட்டிங். அன்று மாலை அல்லது வெள்ளிக்கிழமை காலையில் வருவதாகப் பெற்றோரிடம் கூறிவிட்டுக் கிளம்பினான். டாக்டர் அப்போதே தமயந்தி அம்மாளிடம் போனில் பேசினார். ''எல்லாம் நல்லவிதமாக நடக்கிறதம்மா. நிரஞ்சன் டில்லிக்குக் கிளம்பி விட்டான். நாளைக்குக் காலை ஏழு மணிக்கு நாங்களே திவ்யாவை அங்கு கொண்டு விட்டு விடுகிறோம் அம்மா...'' என்றார்.

அன்று மாலை ஜானகி திவ்யாவுக்காக ஒரு பெட்டியில் பல தினுசில் புடைவைகள் அதற்கேற்ற பிளவுசுகள், பெட்டிகோட் இன்னும் பௌடர், சோப்பு வகை, பேனா, ஒரு வாட்ச், வளையல்கள் எல்லாம் வைத்தாள். திவ்யா எத்தனையோ மறுத்தும் அவள் ''இது பாரம்மா. எங்க ஆசைக்குக் கொடுக்கிறோம். நீ அங்கே போய் என்ன வேண்டுமானாலும் செய்து கொள்,'' என்றாள். பிறகு தங்க நகைகள் ஒரு செட் எடுத்து வந்தாள். அதை மட்டும் தீர்மானமாக மறுத்துவிட்டாள். ''இல்லத்தில் மற்ற எல்லாப் பெண்களும் ஏழ்மையாக இருக்கும் போது நான் மட்டும் அந்த இடத்துக்கே பொருந்தாமல் நகைகளை எப்படி அம்மா அணிவது'' என்றாள்.

''எங்கள் ஞாபகமாக ஒரே ஒரு பொருளாவது எடுத்துக் கொள்ளணும்'' என்று ஜானகி கெஞ்சினாள். திவ்யா சிரித்தாள். கடைசியில் வைரக்கல் பதித்த ஒரு மோதிரத்தை மட்டும் எடுத்துக் கொண்டாள். விரலில் போட்டுப் பார்த்தாள். அளவு சரியாக இருந்தது.

''இது போதும் அம்மா....'' என்றாள். ஜானகியும் வேறு வழியின்றி மற்ற நகை



வெளுத்ததெல்லாம் பவுடர் அல்ல
கறுத்ததெல்லாம் கண்மை அல்ல
— வேதா

புதுமொழி

களை உள்ளே கொண்டு வைத்தாள். இரவு கலகலப்பாகப் பேசியபடி உணவு அருந்தினார்கள். "காலை 6.30 மணிக்கே டாக்டர் வந்துவிடுவார்! ஜானகி, பழக்கூடை, பிஸ்கெட், சாக்லேட் பாக்கெட்டுகள் வாங்கி வைத்து விட்டாயா?" என்று பட்டாபி கேட்டார்.

"எல்லாம் ரெடி..." ஜானகியும் பதில் கூறிவிட்டுப் படுத்துக்கொள்ளச் சென்றாள்.

காலையில் பால் வந்ததுமே ஜானகியும் மங்களமும் எழுந்து காப்பி டிபன் தயாரிப்பதில் ஈடுபட்டனர். பட்டாபியும் எழுந்து வந்து செய்தித் தாளைப் புரட்டினார்.

"என்ன இது? மணி ஆறுக்கு மேலாச்சு... திவ்யா இன்னமும் எழுந்து ரெடியாகவில்லையே..." என்று மங்களம் கேட்க, "நான் போய் எழுப்பி விடுகிறேன்..." என்ற ஜானகி ஸ்னானம் செய்த தலையைக் கட்டி முடிந்து கொண்டு திவ்யாவின் அறைக்குச் சென்றாள்.

"திவ்யா... திவ்யா..." குரல் கொடுத்தாள்.

"என்னம்மா இப்படி ஒரு தூக்கம்? எழுந்திரம்மா. டாக்டர் வந்து விடுவாரே..." சொல்லிக் கொண்டே அருகில் சென்று கையைத் தொட்டவுடன் ஷாக் அடித்தாற் போல ஒரு விநாடி நின்றாள். திவ்யாவின் கை சில்லிட்டிருந்தது....

"ஐயோ.... திவ்யா.... திவ்யா.... ஏமாத்திவிட்டியே.... ஐயோ, இங்கே வாங்களேன். திவ்யாவைப் பாருங்களேன்..."

ஜானகியின் அலறல் பட்டாபியை மங்களத்தை அவள் கணவரை அங்கே பதறி உள்ளே ஓட வைத்தது. அதே சமயம் காரிலிருந்து இறங்கிய டாக்டர் காசியும் ஓ வென்ற அழுகுரல் கேட்டு வேகமாக உள்ளே நுழைந்தார். எல்லாரும் திவ்யாவை சூழ்ந்து கொண்டு நிற்பதைக் கண்டு,

"என்ன.... என்ன ஆச்சு? நகருங்க..." என்ற டாக்டர் அவர்களை விலக்கிக் கொண்டு படுக்கையில் கண் மூடிக் கிடந்த திவ்யாவை உற்றுப் பார்த்தார். கன்னத்தைத் தொட்டவர் திகைத்தார். நாடி பிடித்துப் பார்க்க வேண்டிய அவசியம் இல்லை என்று உணர்ந்தவராக,



வேர்க்கடலை உருண்டை செய்யும்போது வெல்லப்பாகுடன் சிறிது அஸ்கா சர்க்கரையும் சேர்த்துச் செய்தால், கடலை கரகரப்புடன் இருக்கும்.

— விஜயலட்சுமி.

"என்னம்மா ஜானகி, என்ன ஆச்சு... ஏன் இப்படி?"

"புரியலையே டாக்டர்... ராத்திரி நல்லா பேசினாளே. சாப்பிட்டாளே, இப்படி எதனால் ஆச்சு புரியலையே....!" என்றாள் ஜானகி பதறும் குரலில். எல்லாருமே பீதி தவழும் முகத்துடன் நடுங்கிக் கொண்டிருந்தனர். டாக்டரின் பார்வையில் தலை மாட்டிலிருந்த மேஜையில் மடித்து வைக்கப் பட்டிருந்த காகிதம் பட்டது. சட்டென்று அதை எடுத்துப் பிரித்தார். நீண்ட கடிதம். நின்றவாறே கடிதத்தைப் படித்தார்.

"அன்பு உள்ளம் கொண்ட பெரியோர்களே... திவ்யாவின் கடைசி வணக்கம். காலையில் எத்தனை ஆவலுடன் என்னை எழுப்ப வருவீர்கள் என்று தெரியும். என்னை என் உடம்பைப் பார்த்து அதிர்ச்சி அடைவீர்கள். அழுவீர்கள். பீதி அடைவீர்கள். தமயந்தி அம்மாளுக்கு என்ன பதில் சொல்வது என்று பயமடைவீர்கள். பயப்படாதீர்கள். நான் எழுதியுள்ள இந்தக் கடிதத்தைக் காட்டுங்கள். உங்களிடம் ஒரு குற்றமும் இல்லை. நான் தற்கொலை செய்து கொள்ள நானேதான் காரணம்.

நான் இருபத்தைந்து வருஷங்கள் எந்த சுகத்தையும் அனுபவிக்காதவள். இரண்டு வருஷமாகத்தான் தமயந்தி அம்மாளின் அன்பு அணைப்பில் சிறிது சந்தோஷம் கண்டவள். அதிலும் இந்த பன்னிரண்டு தினங்கள் நான் பட்ட சுகம். இன்பம் சந்தோஷம் என்றுமே மறக்க முடியாதவை. மீண்டும் இல்லத்துக்குத் திரும்பி இந்த நாட்களைக் கனவாக மட்டுமே நினைத்து நினைத்து மறுபடி வறண்ட வாழ்க்கை வாழ நான் இஷ்டப்படவில்லை. நான் கல்யாணம் ஆனவள் தான். அடி உதை கொடுமை தவிர வேறு ஒன்றும் அனுபவிக்காதவள். தாம்பத்யம் என்றால் செக்ஸ் என்று சொன்னால் அதில் வெறுப்பை மட்டுமே அடைந்தவள் நான்.

மனைவியிடம் அன்பு ஆழமாகப் பதிந்து விட்டதால்தானே நிரஞ்சனுக்கு சித்தப் பிரமை ஏற்பட்டிருந்தது. ஒரு ஆணினால் மனைவிக்காக இத்தனை உருக முடியும் என்பதை நேரில் பார்த்து வியந்தேன். நிரஞ்சனின் கண்களில் காதல் மட்டுமில்லை. கனிவு பாசம் இரக்கம்.... அடாடா.... எத்தனை புரிவு.... அவர் முகம் காட்டிய அத்தனை உணர்ச்சிகளும் திகைப்பை மட்டுமல்ல, என் மனத்தில் இனம் புரியாத மகிழ்ச்சியையும் சிறிது சிறிதாக ஏற்படுத்திவிட்டது. எப்பேற்பட்ட உத்தமன் இந்த ஆண்மகன். இவருக்கு உதவ வந்த நான் அதிர்ஷ்டசாலி.

அந்தத் திவ்யாவுக்கு அதிர்ஷ்டமில்லை. இப்படி ஒரு கணவனை அடைந்து வாழாமல் போய்விட்டாள். இப்படிப்பட்ட ஒரு உத்தமனுக்கு மனைவியாக நடித்த இந்த சில நாட்கள் என் வாழ்க்கையில் சிறந்த நாட்கள். இந்த நினைவோடு இறந்துவிட்டால் என்ன

என்று ஒரு நாள் எண்ணினேன். இனியும் இருந்து வாழாவெட்டியாக என்ன சாதித்து விடப் போகிறேன் என்று விரக்தி ஏற்பட்டது. அந்த திவ்யா ஒரு வருஷம் இவருடன் வாழ்ந்தாள். ஆனாலும் இவர் கையால் நெருப்பு வாங்கிக் கொள்ளவில்லை. நடிக்க வந்த எனக்கு அந்தப் பாக்கியம் கிடைக்கட்டுமே. நாடகம் முடிந்ததும் வேஷத்தைக் கலைத்து விடுவார்கள். நான் கலைக்க விரும்பாத வேஷம் இது. அவருடைய மனைவியாக இந்த வேஷத்திலேயே இறந்து விட முடிவு செய்துவிட்டேன்.

உங்கள் நாடகப்படியும் இதுதானே முடிவு. ஆனாலும் நீங்கள் எல்லோரும் எனக்காக கலங்குவீர்கள் என்று தெரியும். அம்மா! நான் விரும்பி எடுத்துக் கொண்ட வைர மோதிரம் என் சாவுக்கு வழி செய்தது. அதனால்தான் ஆசையுடன் அதை மட்டும் எடுத்துக்கொண்டேன். எனக்கு உதவி செய்ய நினைத்தீர்களேயானால் ஒன்று செய்யுங்கள். டில்லியிலிருந்து நிரஞ்சன் வந்து எனக்குக் கொள்ளி வைக்கணும். அது ஒன்றுதான் என் கடைசி விருப்பம். அவர் நன்றாக இருக்க வேண்டும் என்று பிரார்த்தித்துக் கொள்கிறேன்.

இப்படிக்கு,
உங்கள் திவ்யா (வித்யா)

விவரிக்க முடியாத உணர்ச்சி வெள்ளத்தில் திணறி பேசவோ அழவோ முடியாமல் பொம்மைகளாக நின்றனர். திவ்யாவின் உடலை போர்த்திவிட்டு வெளியே வந்த டாக்டர் சோபாவில் சாய்ந்து தன் பாக்கெட்டிலிருந்து இன்னொரு கடிதத்தை எடுத்து,

''பட்டாபி! உங்களுக்கு எல்லோருக்கும் இன்னொரு அதிர்ச்சி. பயப்படாதீர்கள். நம்ப நிரஞ்சனுக்கு இந்த நாடகம் தெரிந்துவிட்டது....'' என்றார்.

''என்ன.... என்ன... நிரஞ்சனுக்குத் தெரியுமா.... எப்படி, எப்படி டாக்டர்.... கோரஸாக குரல்கள்.

''இன்னிக்குக் காலையில் ஒரு சிறுவன் வந்து என்னிடம், 'டாக்டர், ஒரு மாமா உங்களிடம் இதைக் கொடுக்கச் சொன்னார்' என்று இந்த லெட்டரைக் கொடுத்தான். படிக்கிறேன். கேளுங்கள்....''

டியர் டாக்டர்!

நீங்கள் டாக்டராக இருப்பதால் நிதானமாகச் செயல்படுவீர்கள் என்று இதை எழுதுகிறேன். நீங்கள் எல்லோரும் சேர்ந்து நடத்தும் நாடகம் எனக்குத் தெரிந்துவிட்டது. எப்படி என்கிறீர்களா? ஒரு தாய்க்கு தன் குழந்தையை எப்படி அடையாளம் தெரியுமோ அந்த அளவுக்கு ஒரு கணவனுக்கு மனைவியை அடையாளம் தெரிந்து கொள்ள முடியாதா? இந்தப் பெண் வித்யா, திவ்யாவின் சாயல்தான். முதலில் நானும் நம்பிவிட்டேன். சிறிது வித்தியாசம் தெரிந்தாலும் அதெல்லாம் விபத்தினால் ஏற்பட்ட பாதிப்பு என்று நினைத்தேன். ஆனால் முதல் நாள், அவள் நெற்றியை, கையைத் தொட்டபோது அந்த ஸ்பரிசம் எனக்கு வித்தியாசமாகப் பட்டது. அவள் உடலில் ஓடிய சிலிர்ப்பு எனக்குப் புதுமையாக இருந்தது. ஒரு வருஷ தாம்பத்யம் நடத்தியவர்கள். திவ்யாவுக்கு ஏன் புது சிலிர்ப்பை ஏற்படுத்தணும்? என்னதான் விபத்தில் மாறுதல் இருந்தாலும் கைவிரல்களின் ஸ்பரிசத்தில் எனக்கு வித்தியாசம் தெரிந்தது. திவ்யாவின் உள்ளங்கை புஷ்பம் போல மிருதுவாக இருக்கும். விரல்கள் வழுவழுப்பாக இருக்கும். இவள் உள்ளங்கை உறுத்தியது.

டாக்டர்! அப்போதுதான் என் மூளையில் மின்னல் போல ஒரு எண்ணம் உண்டாயிற்று. திவ்யா இறந்துவிட்டாள். இவள் திவ்யா இல்லை. திவ்யா இறந்துவிட்டாள்... என்று மணி அடித்தாற் போல் ஒலி. அன்று சில மாதங்களுக்கு முன் அப்பா ஸ்டேஷனிலிருந்து வந்து, ''ரயில் விபத்து....'' என்று அழுதது. நான் மயங்கி விழுந்தது நினைவுக்கு வந்தது. மறுநாள் நீங்களும் அப்பா அம்மா எல்லோரும் திவ்யா இறந்துவிட்டாள் என்று சொன்னதும் கதறி அழுததும் நினைவுக்கு வந்தது. அன்று என் உணர்வுக்குள் எட்டவில்லை. நான் எதனால் நம்பாமல் இருந்தேன் என்று புரியவில்லை. ஆனால் இந்த வித்யாவின் ஸ்பரிசத்தில் உண்மையை உணர்ந்து கொண்டேன்.

திவ்யா இறந்துவிட்டாள். அப்படியானால் இவள் யார்? அப்பா, அம்மா, மாமா, மாமி நீங்கள் எல்லோரும் திவ்யா என்கிறீர்களே என்று மனத்தில் குழப்பம் ஏற்பட்டது., யாரிடமும் எதுவும் கேட்காமல் மௌனமாக சிந்தித்தேன். எல்லோரும் என்னிடம் நார்மலாக பேச முடியாமல் ஒதுங்குவதாகப் பட்டது. இந்தப் பெண் தான் எல்லாரையும் ஏமாற்றுகிறாளோ என்று கூடச் சந்தேகம் வந்தது. ஒருநாள் தற்செயலாக அப்பாவின் அலமாரியில் பத்திரமாக வைத்திருந்த

ஊடுபுள்ளி (சந்து புள்ளி) 15 to 8

— நாச்சியார் ஜவஹர்லால்



# சிறு தவறு

வாழ்க்கையை நன்முறையில் திட்டமிட்டு நடத்துவதில் நம்பிக்கை உடையவர் சிவராமன்.

தனக்கு எதிர்பாராது ஏதாவது நேர்ந்துவிட்டால் தனது குடும்பம் பொருளாதார பாதுகாப்பு இன்றி துன்பச் சுழலில் சிக்கிவிடக் கூடாது என்று எண்ணி முன் யோசனையோடு எல்.ஐ.ஸி.யில் ஆயுள் காப்புறுதியும் பெற்றிருந்தார்.

ஒரு நாள் எதிர்பாராமல் சிவராமன் காலமானபோது தான் தெரியவந்தது அவர் செய்துவிட்டிருந்த சிறு தவறு. அவர் தமது மனைவியை ஆயுள் காப்புறுதி தொகைக்கான வாரிசாக நியமனம் செய்ய மறந்துவிட்டிருந்தார்.

இந்த சிறு தவறினால் திருமதி சிவராமனுக்கு சில நிர்வாக சிக்கல்களையும், நடைமுறை தாமதங்களையும் சந்திக்க நேர்ந்ததோடு இறப்பு கேட்பு உரிமை தொகையை பெறுவதிலும் கால தாமதம் ஏற்பட்டது. இதுபோன்ற சிக்கல்களை தவிர்க்க உடனே **வாரிசு நியமனம்** செய்யுங்கள்.

ஆயுள் காப்பு என்பது ஒரு நீண்ட கால ஒப்பந்தம் என்பதை மறந்துவிடாதீர்கள்.

இந்த நீண்ட காலத்தில் ஒருவரது வாழ்வில் பல மாறுதல்கள் ஏற்படுவது இயற்கை. மண வாழ்வினால் பொறுப்புக்கள் அதிகமாகலாம். தனி குடும்பம் ஏற்படும் போது வாழ்க்கை துணைக்கும் குழந்தைகளுக்கும் பொருளாதார பாதுகாப்பு அளிக்க வேண்டியதால் ஏற்கனவே ஆயுள் காப்பு வாரிசுதாரராக நியமித்திருக்கும் தந்தை, தாய், சகோதரர் அல்லது சகோதரிகள் இடத்தில் உங்கள் இல்லத்துணையினை நியமனம் செய்ய நேரிடலாம்.

**மேலும் சொந்த வீடு கட்டிக்கொள்ள நேரிடும்போது ஆயுள் காப்பு பத்திர அடமான மூலம் நிதி நிறுவனங்களில் இருந்து கடன் பெறும் தேவை ஏற்படலாம். கடன் தொகையை முழுவதும் கட்டிய பின்பு நீங்கள் ஏற்கனவே செய்திருந்த வாரிசு நியமனம் தானாக புத்துயிர் பெற்றுவிடாது என்பதை நினைவில் கொண்டு புதிய வாரிசு நியமனம் செய்யுங்கள். சிக்கல்கள் ஏதுமின்றி கேட்புரிமை பணம் பெற இது இன்றியமையாதது.**

ஆயுள் காப்பிற்கான முன்மொழிவின் போது வயது சான்றும் சமர்ப்பிப்பது அவசியம். அப்படி செய்ய தவறி இருந்தால் உங்களுக்கு ஆயுள் காப்பு சேவைபுரியும் எல்.ஐ.ஸி. கிளை அலுவலகத்துடன் உடனே தொடர்பு கொண்டு உங்கள் வயதை பதிவுசெய்து விடுங்கள்.

**உங்கள் வாழ்வின் முக்கிய சேமிப்பை எல்.ஐ.ஸி. மூலம் திட்டமிட்டு சேமிக்கும்போது, வாரிசு நியமனம், தேவையான தருணத்தில் நியமனம் மாற்றுதல், வயது சான்று அளித்தல் போன்ற சிறுசிறு செயல்களில் சற்று கவனம் செலுத்துதல் பின்நாளில் உருவாகக் கூடிய சிக்கல்களை தவிர்ப்பதில் பெரிதும் உதவும்.**

**உங்களுக்கு சிறப்புற பணி ஆற்றுவதில் எங்களுக்கு உதவுங்கள். எங்கள் முகவர்கள் உங்களுக்கு உதவ எப்போதும் தயாராக இருக்கிறார்கள். தக்க தருணத்தில் உங்கள் ஆயுள் காப்பு பற்றிய அறிவுரைகள் பெறவும், சிறந்த பின் வணிக சேவைக்கும் எங்கள் முகவர்களுடன் தொடர்பு கொள்ளுங்கள்.**

பழைய வாரப் பத்திரிகையை கண்டேன். அந்த மல்லிகை இதழ் எனக்கு உண்மையைப் புரிய வைத்தது. உடனே யாரிடமும் சொல்லாமல் அந்த இல்லத்துக்குப் போனேன். என்னை அறிமுகப்படுத்திக் கொண்டேன். தமயந்தி அம்மாள் திகைத்தார்கள். பயந்தார்கள். நான் வற்புறுத்தியதும் எல்லாவற்றையும் கூறினார்கள்.

டாக்டர்! என் சித்தப் பிரமையை போக்க நீங்கள் எல்லோரும் சேர்ந்து நடத்தும் நாடகம் வெற்றி அடைந்துவிட்டது. என் பிரமை தெளிந்துவிட்டது. நான் ஒரு முடிவுக்கு வந்தேன். என் திவ்யா இனி வரமாட்டாள். வாழ்க்கையில் வேறு யாரோ ஒரு பெண்ணை மணம் செய்து வைக்க என் பெற்றோர் முயற்சி செய்வார்கள். என் பிரமையை தெளிவு செய்ய வந்த இந்தப் பெண்ணையே மணந்து கொள்வது என்று தீர்மானித்திருக்கிறேன். உலகம், சமூகம் எல்லாம் சில நாட்கள்தான் வாய்க்கு வந்தபடி பேசும். எத்தனை நாட்கள் பேச முடியும். வேறு புதிது புதிதாக விஷயங்கள் அகப்படும்போது இது மறந்து விடும். அதனால் யாருக்காகவும் நான் பயப்படப் போகிறதில்லை.

உங்கள் நாடகத்தின் முடிவுப்படி நான் டில்லிக்குப் போவது போல பாசாங்கு செய்தேன். நல்ல வேளையாக அப்பா ஆபிஸுக்கு லீவு போட்டுவிட்டார். நீங்கள் எங்கள் வீட்டிற்குப் போனதும் சில நிமிஷங்களில் நான் தமயந்தி அம்மாளுடன் வருவேன். அதற்குள் இந்தக் கடிதத்தைப் படிக்க வைத்து தயார் பண்ணி வைத்தால் நல்லது.

இப்படிக்கு நிரஞ்சன்.

டாக்டர் படித்து முடித்தார். எல்லார் மனத்திலும் பலவித குழப்பங்கள். ஒன்றும் செய்ய முடியாத தவிப்பு.

''சரி.... எப்படியோ நிரஞ்சன் குணமாகி விட்டான். அவனுக்கும் எல்லாம் தெரிந்ததும் நல்லதுதான். நம்ப மனத்தில் உறுத்தல் ஏற்படாது. ஆனா, இப்ப.... இப்ப.... இந்தப் பெண் இப்படிச் செய்துவிட்டாளே.... என்ன பண்றது....'' பட்டாபி தலையில் கையை வைத்துக் கொண்டார்.

''ஐயோ டாக்டர், இந்தப் பெண் இப்படித் தலையில் கல்லைப் போடுவாள் என்று நினைக்கவே இல்லையே....'' ஜானகி அழுது புலம்பினாள்.

வாசலில் டாக்சி நிற்கும் சப்தம். தமயந்தி அம்மாளும் நிரஞ்சனும் இறங்கி வருவது தெரிந்தது. ஜானகியால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. தமயந்தி ஹாலுக்குள் நுழைந்ததும் ஓடிச் சென்று அவள் தோளைப் பற்றி முகத்தைப் பதித்துக் கொண்டு ஓ வென கதறினாள். மங்களமும் அழுதாள். பட்டாபியும் திவ்யாவின் தந்தையும் துயரமே வடிவாக அமர்ந்திருந்தனர்.

''என்னம்மா.... ஏன் அழறீங்க?'' தமயந்தி புரியாமல் விழித்தாள்.

''ஐயோ, என்ன சொல்றதம்மா. வித்யா நம்மைத் தவிக்க விட்டுட்டு போயிட்டாம்மா. இதோ பாருங்க லெட்டர் எழுதி வைச்சுட்டுப் போயிட்டாம்மா.... வித்யா...'' ஜானகி கதறி அழுதாள்.

''என்ன.... என்ன.... ஐயோ, வித்யா.... வித்யா....'' தமயந்தி திவ்யாவின் அறைக் கதவைத் திறந்து கொண்டு ஓடினாள். டிரைவருக்குப் பணம் கொடுத்துவிட்டு வெகு உற்சாகமாக உள்ளே நுழைந்த நிரஞ்சன், கூக்குரலைக் கேட்டு பாய்ந்து வந்து எல்லோரையும் பார்த்தான்.

''அப்பா.... என்னப்பா ஆச்சு? ஏன் அம்மா அழறாங்க...''

டாக்டர்தான் முன்வந்தார்:

''நிரஞ்சன்! நீ காலையிலே ஒரு லெட்டர் கொடுத்தே. அதை எடுத்துண்டு வந்தேன். இங்கே ஒரே களேபரமா இருக்கு. இதப் பாரு.... வித்யா லெட்டர்....'' நீட்டினார்.

நின்றபடியே பரபரப்புடன் படித்தவன் நிலைகுலைந்து உள்ளே ஓடினான். அழுது கொண்டிருந்த தமயந்தி, "நிரஞ்சன்! உங்க பெருந்தன்மையை நினைச்சு ரொம்ப சந்தோஷப்பட்டேன். இந்தப் பொண்ணு, இப்படிச் செய்துட்டாளே" என்றாள். நிரஞ்சன் வித்யாவின் லெட்டரை தமயந்தியிடம் கொடுத்தான். அவளும் கண்ணீர் வழியப் படித்தாள்.

சில நிமிஷங்களில் அழுகை ஓய்ந்தது. நடந்த சம்பவங்களைப் பேசிப் பேசிக் கேவினார்கள். சில நிமிஷங்களில் மௌனமாக திகைப்பும் வியப்பும் தவிப்புமாக இருந்தனர்.

சின்னப் பெண்ணாக இருந்தாலும் அனுபவப்பட்டவள் போல நடைமுறையில் ஏற்க முடியாது என்ற நிச்சயத்துடன் வித்யா செயல்பட்டிருப்பதை எல்லோருமே உள்ளத்தில் உணர்ந்தார்கள். எல்லோரும் நிரஞ்சனையே பார்த்தார்கள்.

''அம்மா! மேற்கொண்டு ஏற்பாடு செய்யுங்கள். அவள் விருப்பப்படி நானே கொள்ளி வைக்கிறேன்....'' என்றான்.

பட்டாபியும் டாக்டரும் எழுந்தனர்.





அரசி



நஸ்ரீன் ஆலம்



இசைவாணி

# இம்மாத இல்லத்தரசி

## முதல் பரிசு: தூக்கு
## புல்புல் ஸாண்ட்விச் கேக்

கேக் செய்ய:

பச்சரிசி — 2 கப்
தேங்காய்த் துருவல் — ½ கப்
சாதம் — ½ கப்
சர்க்கரை — 1 மேசைக் கரண்டி
உப்பு — ½ தேக்கரண்டி
ஈஸ்ட் — 1 தேக்கரண்டி

பூரணம் செய்ய

சர்க்கரைவள்ளிக்கிழங்கு — 250 கிராம்
மில்க்மெய்ட் — ½ டின்
தேங்காய்த் துருவல் — 4 மேசைக் கரண்டி

அலங்கரிக்க

முந்திரிப்பருப்பு — 50 கிராம்
கலர்த் தேங்காய்த் துருவல் — 50 கிராம்

செய்முறை:

அரிசியைச் சுத்தம் செய்து ஒரு மணி நேரம் ஊற வைக்கவும். ஊறியதும் தேங்காய், சாதம், சர்க்கரை, உப்பு சேர்த்து அரைக்கவும். நன்கு அரைத்ததும் ஈஸ்டை மிதமான வெந்நீரில் ஊற வைத்து மாவுடன் சேர்த்துக் கரைக்கவும். நான்கு மணி நேரம் வைக்கவும்.

சர்க்கரைவள்ளிக்கிழங்கைத் தோல் சீவி காரட் துருவலில் துருவி இட்லித் தட்டில் வைத்து ஆவியில் வேக விடவும். வெந்ததும் அத்துடன் ¼ டின் மில்க் மெய்ட், தேங்காய்த் துருவல் இவற்றைச் சேர்த்து நன்கு கலந்து கொள்ளவும். முந்திரிப் பருப்பைப் பொடியாக நறுக்கி நெய்யில் வறுத்து தேங்காய்த் துருவலில் சேர்த்துக் கலக்கவும்.

மாவு புளித்ததும் 10'' அகலமும் 1'' ஆழமும் உள்ள 2 எவர்சில்வர் தட்டில் லேசாக எண்ணெய் தடவி மாவை அதில் ஊற்றி ஆவியில் இட்லி வேக வைப்பது போல் வேக வைக்கவும். வெந்ததும் எடுத்து ஒரு கேக்கின் மேல் சர்க்கரைவள்ளிக் கிழங்கு கலவையைப் பரவலாக நிரப்பவும். மேலே மற்றொரு கேக்கை வைத்து அழுத்தவும். தற்போது மீதமுள்ள ¼ டின் மில்க் மெய்டை கேக்கின் பக்கவாட்டில் தடவவும். இரு உள்ளங்கையிலும் கேக்கை அழுத்திக் கொண்டு முந்திரிப் பருப்பு தேங்காய்த்துருவலில் உருட்டவும். தற்போது கேக்கை ஒரு ட்ரேயில் வைத்து மேல்புறம் மீதியுள்ள மில்க் மெய்டைத் தடவி அதன் மீது மீதமுள்ள முந்திரிப் பருப்பு, கலர்த் தேங்காய்த் துருவலைத் தூவவும்.

பிறந்த நாட்களுக்கும் திருமண ஆண்டு நிறைவுக்கும் எளிதாய்த் தயாரிக்கக் கூடிய ருசி மிக்க கேக் இது.

— அரசி சந்திரன், சென்னை—95.

## இரண்டாம் பரிசு: இட்லி தட்டுக்கள்
## ஸாப்ட் டபேளா

தேவையான பொருட்கள்:

முட்டை ஓடுகள்: முட்டைகளை அவ்வப்போது உபயோகிக்கும்போது சிறு துளை செய்து உபயோகித்தபின் அந்த ஓடுகளின் உட்புறத்தில் நன்கு கழுவி (சுடுநீரில்) காய வைத்து சேமித்து வைத்துக் கொள்ளவும்.

கடல் பாசி — 15 கிராம் (மளிகைக் கடைகளிலேயே கிடைக்கும்)
பால் — 3/4 லி
நெய் — 200 g
சர்க்கரை — 400 கிராம்

செய்முறை:

கடல் பாசியை சிறு சிறு துண்டுகளாக நறுக்கிக் கொள்ளவும். பாலை நன்கு காய்ச்சி கொதி வந்ததும் கடல் பாசித் துண்டுகளை அதில் போட்டுக் கொதிக்கவிடவும். கொதித்து குழம்பாகிக் கொண்டு வரும் போது சர்க்கரையைப் போட்டு நெய் ஊற்றிக் கிளறிக் கொண்டேயிருக்க வேண்டும். கெட்டியாக வந்தவுடன் பதம் பார்த்து இறக்கி, பின்பு ரோஸ் எஸ்ஸென்ஸ் இருந்தால் இரு துளிகள் போடலாம். சூடு ஆறு


* ஹரிணி


* அனுராதா

முன் சுத்தமாக்கப்பட்ட முட்டை ஓடுகளில் நிரப்பி கீழே சாயாதவாறு நிற்கும்படி ஒரு தாம்பாளத்தில் அடுக்கி வைத்துக் கொள்ளுங்கள். நன்கு ஆறியபின் அந்த முட்டை ஓடுகளை உடைத்து உரித்து வைக்க பார்ப்பதற்கு கெட்டியான வேக வைத்த முட்டைகளைப் போல் காட்சியளிக்கும். இதையே வேறு அழகிய வேலைப்பாடமைந்த சிறு சிறு பாத்திரங்களிலும் நிரப்பி, சூடு ஆறிய பின் எடுத்துக் கொள்ளலாம்.

மற்றொரு வகையாக நெய் தடவிய தாம்பாளத்தில் பரவலாகக் கொட்டி கேக்குகளைப் போலவும் வெட்டிக் கொள்ளலாம். இதில் விருப்பப்பட்டால், சமைக்கும்போதே ஜிலேபி பவுடரையும் சேர்த்து நிறமாக்கிக் கொள்ளலாம்.

விருந்தினர்கள் எதில் செய்திருப்பார்கள் எனத் திணறியபடி சாப்பிட்டுப் புகழ்வார்கள்.

— நஸ்ரீன் ஆஸம், சேலம்—1.

**மூன்றும் பரிசு: பான்**

## நூடுல்ஸ்

தேவையான பொருட்கள்:

நூடுல்ஸ் — 1 பாக்கெட்
ஆட்டு இறைச்சி 150 கிராம்ஸ் கொத்தியது (கைமா)
காரட் — 1 மூன்று துண்டாக நறுக்கி அதை நீளமாக நறுக்க வேண்டும்.
பச்சையாக இருக்கும் கோஸ் — ½ கப் நீளமாக நறுக்க வேண்டும்.
பச்சைப் பட்டாணி — 100 கிராம்
பச்சை மிளகாய் — 4 நீளமாக நறுக்க வேண்டும்
வெங்காயம் பெரியது — 1 நீளமாக நறுக்க வேண்டும்.
மிளகு பொடி செய்தது — 1½ ஸ்பூன்
ரீபைண்டு ஆயில் — முக்கால் கப்
உப்பு 2 ஸ்பூன் (அ) தேவையான அளவு

செய்முறை:

முதலில் ஆட்டு இறைச்சியைக் கழுவி 1 கப் தண்ணீரில் 8 கல் உப்புப் போட்டு வேக வைக்க வேண்டும். நூடுல்சை உடைக்காமல் 4 டம்ளர் தண்ணீரில் 10 நிமிடம் வேக வைக்க வேண்டும். வேகும்பொழுது அது ஒன்றோடு ஒன்று ஒட்டாமல் இருக்கும்போதே தண்ணீரை வடித்துவிடவும். நறுக்கிய கோஸ், காரட், பட்டாணி இவைகளை 4 கல் உப்புப் போட்டு அதிகம் வேகாமல் இருக்கும்போது தண்ணீரை வடிகட்ட வேண்டும்.

வாணலியில் ரீபைண்டு ஆயிலை ஊற்றி நறுக்கிய வெங்காயத்தைப் போட்டு வதக்கவும். பிறகு உப்பு, பச்சை மிளகாய், மிளகு இவைகளைப் போட்டுக் கிளறி விடவும். பிறகு வெந்த இறைச்சி காய் இவைகளைப் போட்டு வதக்கவும். இறக்கும்பொழுது, நூடுல்சைப் போட்டு நன்றாகக் கிளறி விட்டு இறக்கவும்.

இதைச் சுடச் சுடத் தட்டில் போட்டு முன் கரண்டியில் தக்காளி சாஸ் போட்டு சாப்பிட மிகச் சுவையாக இருக்கும்.

— இசைவாணி, பெங்களூர்—5.

**ஆறுதல் பரிசு: அன்னத்தட்டு**

## அனுரசம்

தேவையான பொருட்கள்:

நல்ல பழைய அரிசி — 2 கப்
பொடியாக்கிய சர்க்கரை — 2 கப்
தயிர் (புளிப்பில்லாதது) — தேவையான அளவு
ஏலக்காய் — 6
பொரித்தெடுக்க ஏதாவது ஒரு எண்ணெய் அல்லது டால்டா

செய்முறை:

அரிசியை நன்றாகக் களைந்து, கல்லரித்து இரவு ஊற வைக்கவும். காலையில் எடுத்துத் தண்ணீரை ஒட்ட வடித்து, அரை மணி நிழலில் உலர்த்தவும். பிறகு கல்லுரலில் இடித்தோ, அல்லது மிக்ஸியிலோ நன்றாகப் பொடி செய்து 2, 3 தரம் சலித்து நைஸ் மாவாக செய்து கொள்ளவும். அத்துடன் சர்க்கரைப் பொடி, ஏலப் பொடி சேர்த்து சிறிதளவு தயிர் சேர்த்து நன்றாக தேய்த்து பிசையவும். பாதுஷாவுக்குப் பிசையும் மாவு போல் இருக்க வேண்டும். அடுப்பில் வாணலியில் தேவையான அளவு டால்டா ஊற்றி, காய்ந்ததும் பிசைந்த மாவை சிறு சிறு உருண்டைகளாக செய்து கொண்டு, ஒவ்வொரு உருண்டையையும் உள்ளங் கையில் வைத்து அழுத்தி அகலப்படுத்தி, டால்டாவில் பொரித்தெடுக்கவும். அடுப்பை நிதானமாக எரியவிட்டு, மிதமான சூட்டில் பொரித்தால், உள்ளும் புறமும் ஒன்று போல் 'மொறு மொறு'வென்று இருக்கும். சுடச் சுட சாப்பிட வெகு சுவையாக இருக்கும்.

— ஹரிணி ராகவன், பெங்களூர்—78.

**ஆறுதல் பரிசு: அன்னத்தட்டு**

## வெஜிடபிள் — பதாஸி

தேவையான பொருட்கள்:

கடலைப் பருப்பு — ¼ கிலோ



துவரம் பருப்பு — ¼ கிலோ
பச்சரிசி — ¼ கிலோ
வெங்காயம் — இரண்டு
கேரட் — இரண்டு
தக்காளிப்பழம் — இரண்டு
பீட்ரூட் — ஒன்று
பச்சைமிளகாய் — பத்து (அ) பதினைந்து
இஞ்சி — பெரிய துண்டு
பெருங்காயம் — தேவைக்கேற்ப
கொத்தமல்லி தழை — பெரிய கட்டு ஒன்று
உப்பு — ருசிக்கேற்ப
எண்ணெய் — பொரித்தெடுக்க
புளித்த தயிர் — ½ லிட்டர்
கடுகு — தாளிக்க

செய்முறை:

பச்சரிசி, கடலைப் பருப்பு, துவரம் பருப்பு மூன்றையும் ஊற வைத்து, பச்சை மிளகாய், இஞ்சித் துண்டு, கறிவேப்பிலை, பெருங்காயம் இவற்றுடன் கரகரப்பாக அரைத்துக் கொள்ளவும். கேரட், பீட்ரூட் இவைகளின் தோல் சீவி துருவிக் கொள்ளவும். வெங்காயம், பச்சை மிளகாயைப் பொடிப் பொடியாக நறுக்கவும். இந்த வெஜிடபிள் கலவையைப் பருப்புவிழுதுடன் போட்டு, தேவையான உப்பு சேர்த்து பிசைந்து கொள்ளவும்.

எண்ணெயோ டால்டாவோ காய விட்டு, எலுமிச்சைம்பழம் அளவில் சிறு சிறு உருண்டைகளாக உருட்டிக் கொண்டு, பொன்னிறமாக பொரித்தெடுக்கவும். வெஜிடபிள் பதராளிகள் தயார்.

தக்காளிப் பழத்தை கொதிக்கும் நீரில் போட்டு, வேக விட்டு, தோலை அகற்றவும். பழத்தை மசித்துக் கொள்ளவும். தயிரை நன்றாகக் கடைந்து தக்காளிப் பழத்துடன் சேர்க்கவும். பச்சை மிளகாய், கடுகு தாளித்துக் கொட்டவும். பச்சை கொத்தமல்லி தழையை நறுக்கிப் போடவும். ருசிக்கேற்ப உப்பு கலந்து வைக்கவும்.

வெஜிடபிள் பதராளிகளை இந்தத் தக்காளி சாற்றில் மிதக்க விடவும். சுவையான நூதன சிற்றுண்டி தயார்.

— அனுராதா சேகர், சென்னை — 88.

---

சாதாரணமாக உடம்பில் ஏற்படும் அரிப்பைப் போக்கச் சில வழிகள்:

1. குளிக்கும் தண்ணீரில் 4 ஸ்பூன் சமையல் சோடாவைப் போட்டுக் கரைத்தபின் குளித்தல்.

2. குளிக்கும் தண்ணீரில் வேப்பிலையைப் போட்டு வெயிலில் வைத்து அந்த நீரைக் குளிக்கப் பயன்படுத்துதல்.

— விஜயலட்சுமி.

---



வெயிலினால் ஏற்படும் நீர்குத்தல், நீர்ச் சுருக்கு போன்றவைகளுக்குத் தெளிந்த சுண்ணாம்பு நீரை கால் கட்டை விரல் சுற்றிக் காயக் காயத் தடவி வர 15 நிமிடத்தில் உடன் நிவாரணம் கிடைக்கும். வயிற்றில் தொப்புளை சுற்றியும் தடவலாம்.

— லக்ஷ்மி

# இந்த மாதம் எப்படி? ஜூன்–'87

அவரவர்கள் தத்தமக்குரிய பிறந்த தேதி, பெயர் எண் இவைகளுக்குரிய பலனை அறியலாம்.

ஆங்கிலத்தில் எழுதப்படும் பெயர்களுக்குரிய எழுத்துக்களுக்கு எண் கணிதப்படி பின்வருமாறு வகுக்கப்பட்டுள்ளது.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| A = 1 | B = 2 | C = 3 | D = 4 | E = 5 | F = 7 |
| G = 3 | H = 5 | I = 1 | J = 1 | K = 2 | L = 3 |
| M = 4 | N = 5 | O = 7 | P = 8 | Q = 1 | R = 2 |
| S = 3 | T = 4 | U = 6 | V = 6 | W = 6 | X = 5 |
| Y = 1 | Z = 7 | | | | |

உதாரணம்: A. Raman

| | | | | | |
|---|---|---|---|---|---|
| A. | R | A | M | A | N |
| 1 | 2 | 1 | 4 | 1 | 5 |

= 14 = 5 இது போலவே தங்கள் பெயருக்குரிய எண்ணைக் கண்டு கொள்க.

### பெயர் எண் 1—க்கும் பிறந்த தேதி 1, 10, 19, 28.

உங்கள் உழைப்பு இம்மாதத்தில் சிறப்பினைத் தரும். புதுத் தொழில் ஒன்று ஆரம்பிக்கலாம். மற்றவர்களை அதிகம் நம்பாதீர்கள். தனித்து முயற்சி செய்யுங்கள். கலைஞர்களாக இருந்தால் புதிய பாணியை மேற்கொள்ளுங்கள். வியாபாரம் பெருகி லாபத்தைக் கொடுக்கும். உங்கள் செயலைக் குறித்து மற்றவர்கள் செய்யும் கிண்டலுக்கோ, பழிச்சொல்லுக்கோ பயப்படாதீர்கள். ஏனெனில் அப்படிப்பட்ட ஒரு நிலைமைக்கு ஆளாகும் நிலை ஏற்படலாம். 4, 13, 22, 14, 23, 28 ஆகிய தேதிகள் அதிர்ஷ்டம் வாய்ந்தவை. அரசியலில் மிகச் செல்வாக்குள்ள ஒருவரின் உதவி கிடைக்கும். சனிக்கிழமை செவ்வாய்க்கிழமை ஆகிய நாட்களில் அமைதியாக இருங்கள். வீண் வம்பு வரலாம்.

### பெயர் எண் 2. (பிறந்த தேதி 2, 11, 20, 29)

இந்தத் தேதியில் பிறந்தவர்களுக்கு அமைதியும் மகிழ்ச்சியும் கூடிய காலகட்டம் ஆரம்பம். முதல் ஒரு வாரத்தில் எந்த நிகழ்ச்சியையும் ஒதுங்கி நின்றே கவனியுங்கள். ஆரம்பித்திருக்கும் தொழில் அமைதியாக நடக்கும். சலனங்கள் ஏற்பட்டாலும் சஞ்சலம் அடைய வேண்டாம். புதிய துணி வகைகள், ஆடை அணிகலன்கள், கட்டிய மனை ஆகியவற்றை இரண்டாவது வாரத்திலிருந்து வாங்குவதற்கு நல்ல தருணம் வாய்க்க இருக்கிறது. வாய்ப்பினை நழுவ விடாதீர்கள். உள்ளத்து உணர்ச்சிக்கோ, எழுச்சிக்கோ இடம் கொடுக்காதீர்கள். 7, 16, 25 தேதிகள் அதிர்ஷ்டம் வாய்ந்தவை. 3, 4, 12, 13, 21, 22 ஆகிய தேதிகள் எச்சரிக்கையுடன் இருக்க வேண்டிய நாட்கள் ஆகும்.

### பெயர் எண் 3 (பிறந்த தேதி 3, 12, 21, 30)

இந்தத் தேதியில் பிறந்தவர்களுக்கு உங்கள் எண்ணின் நாயகன் உங்களுக்கு மகோன்னத வெற்றியைத் தருவார். தேக்கத்தில் இருக்கும் செயல்கள் எல்லாம் ஊக்கம் பெற்று, வெற்றி நடை போடும். உங்கள் தோற்றத்தைக் கவர்ச்சிகரமாக ஆக்கிக் கொண்டு மற்றவர்கள் கவனத்தை ஈர்க்கச் செய்வீர்கள். அதனால் பயனுண்டு. உங்களுக்கு உதவுவதற்கு பொன்னிறமும், சென்னிறமும் கொண்ட பலர் வருவார்கள். அரசியலிலும் மற்ற தனியார்த் துறையிலும் உங்களது செல்வாக்கு அதிகமாகும். எதையும் உற்சாகத்துடன் செய்வீர்கள். ஆனால் உங்களில் சிலர் முகஸ்துதி செய்வதன் மூலமும், நிறைவேற்ற முடியாத வாக்குகளைக் கொடுப்பதன் மூலமும், பெயரைக் கெடுத்துக் கொள்ளும் வாய்ப்பு உண்டு. அதற்கு இடம் கொடுக்காதீர்கள். 3, 6, 9, 12, 18, 27 ஆகிய தேதிகள் நலன் பயக்கும். 2, 7, 5 உதவாது.

### எண் 4 (பிறந்த தேதி 4, 13, 22, 31)

மிகவும் தீவிரமாக உழைத்துப் பலன் பெற வேண்டிய காலகட்டம். இதுவரை உங்களுடன் இருந்தே உங்களை சோதனைக்கு ஆட்படுத்திய ஒருவரைப் பற்றி இனம் கண்டு கொள்வீர்கள். ஆழ்ந்த சிந்தனையும், தீர்க்க தரிசனமும் உங்களுக்கு ஓர்' உன்னதமான முன்னேற்றத்தைத் தேடித்தரும். புதன்கிழமை

உங்கள் நன்மையை நாடி, உங்கள் வீட்டைத் தேடி ஒருவர் வருவார். இம்மாதத்தில் நீங்கள் செய்யும் எந்த முதலீடும் எதிர்காலத்தில் நன்மையை அடையும். எதையும் நீங்களே நேரில் சென்று கவனித்துச் செயலாற்றுங்கள். சுயக்கட்டுப்பாடும் ஆர்ப்பாட்டமில்லாத நடத்தையும் உங்களிடம் இருக்குமாறு உங்களைப் பக்குவப்படுத்திக் கொள்ளுங்கள். 1, 4, 10, 19, 28 ஆகிய தேதிகள் நல்ல செய்தியைத் தரும். 8, 7, 17 ஆகிய தேதிகள் உகந்தவை அல்ல.

### எண் 5 (பிறந்த தேதி 5, 14, 23)

எடுத்த காரியத்தில் எல்லாம் வெற்றி கிடைக்கும். விஞ்ஞானம், கணிதம் ஆகிய துறைகளில் ஈடுபடுபவர்களுக்கு முன்னேற்றம் கிடைக்கும். மருந்துக் கடை முதலாளிகளும் உற்பத்தி (உர உற்பத்தி)யாளர்களுக்கும் அமிலம், காரம் போன்ற இரசாயன உற்பத்தியாளர்களும் அபரிமிதமாக லாபத்தைப் பெறக்கூடிய அரும்பெரும் வாய்ப்பினை பெற்றிருக்கிறீர்கள். பேராசையால் வாய்ப்புகளை இழந்து விடாதீர்கள். நீண்ட கால வியாதி உடையவர்கள் சற்றே குணம் காண்பார்கள். இருதய, சிறுநீரக அறுவை சிகிச்சைகள் ஒரு சிலர் எதிர்நோக்க வேண்டியிருக்கும். கவலைப்படாமல் தைரியமாக அதை எதிர்கொள்ளுங்கள். 5, 14, 23, 3, 2, 11 ஆகிய தேதிகளில் அதிர்ஷ்டம் உங்களை நாடி வரும், 9, 18, 27 தேதிகளை ஒதுக்குங்கள்.

### எண் 6 (பிறந்த தேதி 6, 15, 24)

மாலவிய யோகம் எனப்படும், மகத்தான யோகத்தைப் பெறக் கூடிய மாதம் இது. எனவே தூய்மையான இறைபக்தியுடன் உங்களது செயல்களைச் செய்ய இருக்கிறீர்கள். திருமணம் ஆகாத கன்னிப் பெண்களுக்குத் திருமணம்கைக்கூடி வரும். இதுவரை நிலுவையில் இருந்த கட்டடம் கட்டுவது சம்பந்தமான திட்டங்கள் நிறைவேறுவதற்குரிய தருணம் வந்துவிட்டது. வாய்ப்புக்களைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள். தாய்க்குலத்தைச் சார்ந்த ஒருவரின் அறிவுரையோ சொத்தோ, அணிகலன்களோ, பொருளோ உங்களை வந்தடையும். அதிர்ஷ்ட எண்கள் 6, 4, 8, 9 ஆகிய தேதிகளில் அதே கூட்டு எண் வரக்கூடிய தேதிகளும் ஏற்றமுடையவை. 7, 2 ஆகிய தேதிகளில் திங்கட்கிழமை வியாழக்கிழமை ஆகிய நாட்கள் அனுகூலமானவை அல்ல.

### எண் 7 (பிறந்த தேதி 7, 16, 25)

நடப்பு மாதத்தில் நல்லவை அதிகமாக நடக்கும். வாய்ப்பு உண்டு. அதுபோலவே வேதனை தரக் கூடிய நிகழ்ச்சிகளும் ஒரு சிலருக்கு ஏற்படலாம். அதற்குக் காரணம் இந்த எண்ணின் நாயகன் 1—வது 3—வது வாரங்களில் வலுத்தும், 2—வது, 4—வது வாரங்களில் பலவீனமடைந்தும் இருப்பது தான். ஜாதகப்படி தசாபுத்திகள் வலுத்துள்ளவர்களுக்கு அதிக நன்மைகள் ஏற்படும். நீண்ட காலமாக வியாதியுடன் போராடி வந்த உங்கள் குடும்பத்தின் மூத்த நபர் அமைதியைப் பெறுவார். வியாழன், சனி ஆகிய தினங்களில் இறையருளை நாடுங்கள். 2, 11, 20, 29 ஆகிய தேதிகள் நட்பையும் அன்பையும்வளர்க்கும். அருளையும்பொருளையும் கொடுக்கும்.

### எண் 8 (பிறந்த தேதி 8, 17, 26)

குரு பார்வையைப் பெறும் உங்கள் எண்ணின் நாயகன் உங்களுக்கு உகந்ததைச் செய்வார். சிலருக்கு திடீர் விபத்துக்கள் ஏற்படுவது போலத் தோன்றி விலகும். இரவில் படுக்கும்போது வெள்ளிக்கிழமைதோறும் சிறிதளவு எள்ளைத் தலைக்கடியில் வைத்திருந்து மறுநாள் சனிக்கிழமை காலையில் சிறிதளவு புது சாதத்துடன் கலந்து காக்கைக்கு இட்டு இடறைத் தவிருங்கள். சனி பகவானை விளக்கிட்டு ஆராதனை செய்யுங்கள். வாகனங்களில் செல்லுபவர்கள் விவேகத்துடன் வேகத்தைக் குறைத்து கவனமுடன் செல்லுங்கள். மேற்குத் திசையிலிருந்து மேலான செய்திகள் சிலருக்கும், வேதனை தரும் செய்திகள் சிலருக்கும் வரும். 5, 6 இதன் தொடர் எண் உள்ள தேதிகளில் நன்மை தரும். 7, 2 ஆகிய தேதிகளைத் தவிர்க்கவும்.

### எண் 9 (பிறந்த தேதி 9, 18, 27)

உங்கள் எண்ணின் நாயகன் பகை வீட்டில் புகுந்திருந்தாலும், மதிப்புடனேயே இருக்கிறார். எனவே விளையாட்டு, போட்டி, பரீட்சை ஆகியவைகளில் கலந்து கொண்ட அநேகருக்கு மிகச் சிறந்த வெற்றிகள் கிடைக்கும். தோல்வியடைந்தாலும் குறைந்த வித்தியாசத்திலேயே இருக்கும். வெற்றியைக் கண்டு வீண் அகம்பாவமும் வேண்டாம். தோல்வியைக் கண்டு துவளவும் வேண்டாம். இரண்டுமே இக்காலகட்டத்தில் உதவுபவைகளாக இல்லை. ஆயினும் இம்மாதம் பூராவும் உற்சாகமான நிகழ்ச்சிகள் குடும்பத்தில் நடக்கும். செவ்வாய் தோஷம் பெற்றுள்ள பாவையர்களுக்கும் வாலிபர்களுக்கும் திருமணம் கைகூடி வரும். கொதிகலன்களைக் கொண்டும் எரி பிழம்பினைக் கொண்டும் நடத்தப்படுகிற தொழிற்சாலைகளில் தேக்க நிலை நீங்கி உற்பத்தி பெருகும். 6, 9, 18, 27 அதைத் தொடர்ந்து வரும் எண்ணுடைய தேதிகளில் நன்மை நடக்கும். 5, 8 ஆகிய தேதிகள் உதவாதவை.

## உள்ளங்கை உரைப்பதென்ன?

அடுத்து என்ன நடக்கும் என்பதை அறிந்து கொள்ளும் ஆசை அனைவருக்குமே உண்டு. இதை நன்றாக அறிந்திருந்த நமது மகரிஷிகள் வேதங்களின் ஓர் அங்கமாக ஜோதிட சாஸ்திரத்தை அன்றே உருவாக்கி

குரு மேடு
சனி மேடு
சூரிய மேடு
புதன் மேடு
கீழ் செவ்வாய் மேடு
மேல் செவ்வாய் மேடு
சுக்கிர மேடு
சந்திர மேடு

ஞர்கள். அத்தகைய ஜோதிடக் கலையில் பல பிரிவுகள் உண்டு. கிரக சஞ்சாரத்தை அடிப்படையாகக் கொண்ட ஜாதகக் கலை, அங்க அமைப்புகளைக் கொண்ட சாமுத்திரிகா லட்சணம், எண்களை அடிப்படையாகக் கொண்ட எண் குறிக் கலை என மூன்று விதங்களில் முக்காலத்தைப் பற்றி அறியலாம். அங்க லக்ஷணங்களின் ஒரு பிரிவுதான் கைரேகைக் கலை ஆகும்.

நமது உள்ளங்கை நமது வாழ்க்கையின் அமைப்பு முறையை உள்ளவாறு உணர்த்தும் ஓர் உன்னதக் கலையாகும். பொதுவாக ஜோதிட சாத்திரங்கள், ஆண்களுக்குரிய பலனை அதிகம் கூறுகிறது என்றாலும், சில விஷயங்களில் பெண்களுக்கும் தனிப்பட்ட பலன்களைக் கூறுவதைப் பார்க்கலாம். கைரேகைக் கலையில் ஆண்களுக்கு வலது கையும் பெண்களுக்கு இடது கையும் பார்க்க வேண்டுமென்பது நியதி. கைரேகை பற்றிய புத்தகங்களில் பெண்களுக்கென தனியாக எந்தப் பகுதியும் விளக்கப்படுவதில்லை. இக் குறையைப் போக்க வேண்டுமென்றே இப் பகுதி.

படத்தில் உள்ள மேடுகளையும், ரேகைகளையும் உங்கள் கையைப் பார்த்து நினைவில் கொள்ளுங்கள். வராகமிகிரருக்கு முன் வந்த ஜோதிட மகான்கள் 7 கிரகங்களைத் தான் குறித்துள்ளனர். அந்த 7 கிரகங்களுக்கும் கையில் இடம் ஒதுக்கியுள்ளனர். கட்டை விரலுக்கு அடிப்பகுதி சுக்கிரமேடு. ஆள் காட்டி விரல் எனும் நான்காவது விரலுக்கு அடிப்பகுதி குருமேடு. பாம்பு விரல் எனப்படும் நடுவிரலுக்கு அடிப்பகுதி சனிமேடு. இரண்டாவது விரல் எனப்படும் மோதிர விரலுக்கு அடிப்பகுதி சூரிய மேடு. சுண்டு விரல் எனப்படும் சிறு விரலின் அடிப்பகுதி புதன் மேடு. புதன் மேட்டுக்கும், குருமேட்டுக்கும் கீழ்ப்பகுதி கீழ் செவ்வாய் மேடு — புதனுக்குக் கீழ் மேல் செவ்வாய் மேடு. மேல் செவ்வாய் மேட்டிற்குக் கீழே, சுக்கிர மேட்டிற்கு எதிரே பக்கவாட்டில் இருப்பது சந்திர மேடு. ஆக இந்த 7 கிரகங்களைத்தான் ஜாதகக் கட்டத்தில் 12 ராசிகளாகப் பிரித்துச் சூரிய, சந்திரனுக்குத் தலா ஒரு வீடும், மற்ற கிரகங்களுக்குத் தலா இரண்டு வீடுகளும் மொத்தம் 12 வீடுகளாக கட்டங்களாகப் பிரித்துள்ளனர். ராகு—கேது சாயாக் கிரகங்கள் எனப்படுவதால் அவர்களுக்கு என ராசியில் தனி வீடும், கைகளில் தனிமேடும் இல்லை. எனவே குறிக்கப்பட்டுள்ள மேடுகளைத் தங்கள் கைகளுடன் ஒப்பிட்டுப் பார்த்துக் கொண்டு பெயர்களை நன்கு நினைவில் கொள்க.

— ஜெயலட்சுமி கிருஷ்ணன்

# முருகப் பெருமானின் பிறந்த நாள்

சுபயோகம் விவேகா
சித்திரம்: கணேசன்

அகிலாண்ட நாயகியான அன்னை பரமேஸ்வரிக்கே ஆச்சரியம், இப்படியும் கூட தவத்தின் கனல் தகிக்குமா என்று!




சூரபத்மன் என்னும் அந்த அசுரன், தான் நடத்தும் யாகத்தில் இறைவனுக்கான ஆகுதியாகத் தன் உடல் தசைகளையே அரிந்து கொடுத்தான்!



யாகத்தைத் தொடரும்படி தன் தம்பி பானு கோபனிடம் தெரிவித்துவிட்டு, அக்னி குண்டத்தின் தீயில் அவனே இறங்கி அமர, தீ நாக்குகள் அவனைச் சுட்டெரித்து விழுங்கின!

அக்கணமே அங்கு சிவதரிசனம்!






முன் வினை தீவினை என்பவையெல்லாம்
தேவர்களையும் விடவில்லை.




சூர பத்மனின் வழியில் கிளம்பிய சூறவளி,
தேவர் உலகினரைச் சின்னாபின்னமாக்கியது!




அதர்மத் தாக்குதல்கள் அளவு மீறவே, தேவர்கள் சிவபெருமானை நாடி முறையிட்டுக் கதறினர். தன் சக்தியை வெளிப்படுத்த வேண்டிய சமயம் அதுவென்று தீர்மானித்தார் இறைவன். அவருடைய நெற்றிக் கண்ணிலிருந்து ஞானத் தீச் சுடர்கள் கிளம்பின!




சிவபெருமானின் ஆணைக்கிணங்கி
அக்னி தேவன் அச்சுடர்களைத் தாங்க –



வாயு தேவன் வழி நடத்திச் சென்று
அவற்றைப் பாகீரதி நதியில் சேர்த்தான்.



பாகீரதி அவற்றைச் சரவணப் பொய்கையில் சேர்த்துவிட, சிவனின் ஞானச் சுடர்கள் அங்குள்ள ஆறு தாமரை மலர்களில் ஆறு குழந்தைகளாய் மாறின. ஆறு கார்த்திகைப் பெண்கள் அவர்களை வளர்த்தனர்.




குழந்தைகள் அறுவரையும் பார்வதிதேவி ஒன்றாகச் சேர்த்தெடுத்தாள். அன்னையின் மடியில் ஆறுதலைகள் கொண்ட ஒரே குழந்தையாக உருவெடுத்தார் சிவ பாலன்.










இவ்வாறு அன்புப் பெருக்கின் வழியெல்லாம் அனேகத் திரு நாமங்கள் கொண்ட முருகப் பெருமான், தக்க பருவம் அடைந்ததும்—

அதர்மம் அழிய-அவதார நோக்கம் நிறைவேற-சூர பத்மனுடன் போரிட்டார். பல உருவங்களெடுத்து இறுதியில் மாமரமாக மாறிய அவனைத் தன் சக்தி வேலால் இரு பகுதிகளாகப் பிளந்தார்!



மரத்தின் ஒரு பாதி மயிலாகவும் இன்னொரு பாதி சேவலாகவும் உரு மாறின!




தீவினைகளை அழித்து நல்வினைகளை அளிக்கும் தீந்தமிழ்க் கடவுள் முருகப் பெருமான். வைகாசி மாதத்தில் பௌர்ணமியும் விசாக நட்சத்திரமும்கூடிய நன்னாளே அவருக்குப் பிறந்தநாள். வைகாசி விசாகத் திருநாள், முருகன் திருத்தலங்களெங்கும் விசேஷமாகக் கொண்டாடப் படுகிறது.

அன்று காலையில், முருகனுக்குப் பூஜை செய்தும்...



திருப்புகழ், கந்தர் அலங்காரம், கந்தர் அனுபூதி, சண்முகக் கவசம் முதலிய நூல்களை ஓதியும்...





மாலையில், முருகன் குடியிருக்கும் ஆலயங்களுக்குச் சென்றும், முருகப் பெருமானை வழிபடலாம்.



விசாகப் பெருமானின் அருள், வைகாசி விசாக விரதத்தின் மகிமையால் ஆரோக்கியமும் செல்வமும் அருளும், கன்னிப் பெண்களுக்கு விவாகம் கைகூடவும் வரமளிக்கும்!



**இதோ PET 14 D**

# எலெக்ட்ரானிக் ட்யூனர் கொண்ட போர்ட்டபிள் டிவி




மெகானிகல் ட்யூனர் கொண்ட
PET-14 E-யும் கிடைக்கிறது.

# சாலிடேர்

-தொல்லையில்லாத் தொலைக்காட்சி-

Insight-DE-508

# துன்பம் நேர்கையில்...

17

பெரியவர்கள் யாருமில்லாமல், அம்மாவும் உள்ளே வா என்று அழைக்காமல், தாங்களாகவே செய்து கொண்ட கிரகப் பிரவேசம் முடிந்ததும் அதே மணக்கோலத்தோடு சித்ராவின் வீட்டுக்குச் சென்றது அந்த ஜோடி.

ஈஸ்வரி விவரம் புரிந்ததும் மௌனமாக அழுதாள்., பிறகு தன்னையே சமாதானப் படுத்திக் கொண்டாள். ஒரு விதத்தில் தன்னை விட தன் மகள் கௌரவமான காரியத்தைத் தான் செய்திருக்கிறாள், அவள் தனக்கென்று முறைப்படி மஞ்சள் கயிறால் ஒரு வேலி கட்டிக் கொண்டு இனி அதில்தான் வாழப் போகிறாள், உலகம் இதைத் தூற்றாது என்று உணர்ந்து அதிலேயே மகிழ்ந்து போய் அவர்களை ஆசீர்வதித்தாள்.

ஹரிக்குதான் இது ரொம்ப அதிர்ச்சியாயிருந்தது. அவன் சித்ராவிடம் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. முகத்தைத் திருப்பிக் கொண்டு வெளியே எங்கோ போய் விட்டான். அவனின் அந்த அலட்சியம்சித்ராவின் வேதனையைக் கிளப்பிவிட அவள் அழ ஆயத்தமான போது முரளி அவளைச் சமாதானப்படுத்தி அழைத்துக் கொண்டு போய் விட்டான்.

அன்றைக்கு முழுவதும் சம்பா பூஜையறையை விட்டு வெளியே வரவேயில்லை. சாப்பிடவும் இல்லை. முரளியும் அதை சட்டை செய்யவில்லை. இரண்டு நாளானால் அந்த இறுக்கம் தன்னால் குறையும் என்று விட்டு விட்டான்.

சித்ராவுக்குத்தான் என்னமோ போலிருந்தது. முழுக்க முழுக்கப் புது இடம். வரும் போதே சண்டை சச்சரவு. அதுவும் அந்த வீட்டின் அதிகாரம் பூராவும் கையில் வைத்திருக்கும் பெரிய தலையே தன் வரவை எதிர்க்கிறது என்ற பட்சத்தில், ஒன்றும் தெரியாத அந்த இடத்தில் நிஜமாகவே அவளுக்கு எங்கே நிற்பது என்ன காரியம் செய்வது என்று புரியவில்லை.

வேலை செய்யவும் பயமாக இருந்தது. செய்யாமல் நிற்கவும் பயமாக இருந்தது.

வித்யா சுப்ரமணியம்

முதல் நாள் முழுவதும் முரளி கூடவே இருந்தாலும்சம்பாபூஜையறையைவிட்டுவெளியே வராததாலும் எப்படியோ ஓடி விட்டது.

அன்றைக்கு இரவு முரளியே தன் அறையை அலங்கரித்தான். முதலிரவுக்கு ஏற்பாடுபண்ணிவிட்டுசித்ராவைப்பார்த்துச் சிரித்தான்.

"நம்ப நிலையைப் பார்த்தயா, சித்ரா? எதெல்லாம் பெரியவங்க இருந்து அவங்க ஆசீர்வாதத்தோட பண்ணணுமோ அதெல்லாம் நாம்பளே பண்ணிக்க வேண்டியிருக்கு. சித்ரா, பூஜையறையும் சாத்தியிருக்கு. நீ மனசார ஸ்வாமிக்கும், உன் அம்மா, மாமியார், உமாவோட அம்மா, அப்பா எல்லாருக்கும் நமஸ்காரம் பண்ணிட்டு உள்ளே வா,"

என்ற போது சித்ராவுக்கு வெட்கத்தோடு தன் நிலையை நினைத்து அழுகையும் சேர்ந்து வந்தது.

மறுநாள் காலை நாலு மணிக்கே அசந்து தூங்கிக் கொண்டிருந்த சித்ராவை எழுப்பி குளிக்கச் சொல்லி பாத்ரூமைக் காட்டினான்.

அவள் குளித்து விட்டு வந்ததும், "நெத்தில குங்குமம் வச்சுக்கிட்டு கீழே போ சித்ரா. அம்மா வெளில வந்துட்டான்னு நினைக்கறேன். எதுக்கும் பயப்படாத. அவளோட போக்குக்கே போய் அவளை மாற்ற வேண்டியது இனி உன்னோட பொறுப்பு. எல்லாம் நீ நடந்துக்கறதுலதான் இருக்கு. பெஸ்ட் ஆஃப் லக்" என்று கூறிக் கீழே அனுப்பிய போது, பயத்தில் பலி ஆடு மாதிரிதான் வந்தாள் சித்ரா.

சாதாரணமாக முதல் நாள் இரவே கழுவ வேண்டிய அடுக்களை மேடையை, அப்போது தான் கழுவிக் கொண்டிருந்தாள், சம்பா.

பயத்தில் கால்கள் பின்னிக் கொள்ள, நாக்கு மேலண்ணத்தில் ஒட்டிக் கொள்ள எப்படியோ அடுக்களை வாசற்படியைத் தாண்டி உள்ளே வந்து, வலுக்கட்டாயமாக தைரியத்தை வரவழைத்துக் கொண்டு,

"நான் கழுவி விடறேனே, எங்கிட்ட துடைப்பத்தைத் தாங்க அம்மா" என்று கேட்டாள்.

அவளுடைய அந்தக் குரல் காதில் விழுந்ததும் விறுக்கென்று திரும்பி தீவிழி விழித்தவள்,

"உன்னைப் பத்து மாசம் சொமந்து பெத்தேன் பாரு, நீ அம்மான்னு கூப்பட. அம்மாவாம் அம்மா. மூதேவி. இது லக்ஷ்மி கடாக்ஷம் நிறைஞ்ச சமையல் கட்டு. கண்ட

சனியன்களும் காலை வெச்சா இங்க இருக்கற சீதேவி வெளில போய்டுவா. மொதல்ல நீ வெளில போடி. இது உள்ள நுழைய உனக்கு அருகதையில்லை. புரிஞ்சுதா?"

திராவகத்தில் தோய்ந்து வந்த வார்த்தைகளின் உக்கிரத்தைத் தாங்க மாட்டாமல் நத்தையாய்ச் சுருங்கி, கண் கொள்ளாத நீருடன் வெளியே வந்தாள்.

"என்ன சித்ரா? அழறயா? எல்லாம் நான் பார்த்துக்கிட்டுத்தான் இருந்தேன். முட்டிய பேத்துக்காம சைக்கிள் விட்டவனும் இல்லை. திட்டு வாங்காம மாமியார்கிட்ட "நல்ல பேர் வாங்கினவளும் இல்லை. மனசைத் தளர விடாதே ஓ. கே.? பி சியர் ஃபுல் ஸ்வீட் சித்ரா."

செல்லமாக அவள் கன்னத்தில் தட்டி ஆறுதல் சொன்னான் முரளி.

அன்றைக்கு மத்தியானத்திற்கு மேல் முரளி யாரையோ பார்த்துவிட்டு வருவதாகக் கூறிவிட்டு வெளியே போனான். அவனும் துணைக்கு இல்லாமல் எப்படி மாமியாரைச் சமாளிக்கப்போகிறோம்என்றிருந்தது சித்ராவிற்கு. காலையில் அவள் கத்திய பிறகு அடுக்களைப் பக்கமே போகவில்லை. அவளே சமைத்தாள், சமைத்துத் தன் பூஜையை முடித்துக் கொண்டு அவளே முதலில் சாப்பிட்டாள். வேண்டுமென்றே குறைவாக வடித்திருந்தாளோ என்னவோ.

அவள் சாப்பிட்ட பிறகு இருந்தவை ஒரு வயிற்றுக்கே போதாமல் இருந்தது. இருந்ததை இரண்டு பேருமாகச் சாப்பிட



முடிவு செய்து உட்கார்ந்த போது, பேசாமல் இருந்த சம்பா, முரளிக்குச் சாப்பாடு போட்டு விட்டுத் தானும் போட்டுக் கொண்டு, முதல் வாய் சாதத்தைச் சாப்பிட ஆரம்பிக்கும் போது,

''காணாததைக் கண்ட மாதிரி முழுங்கறதைப் பாரு. வெக்கம், ரோஷமில்லாத பக்கி ஜென்மம்''

என்றாள் சத்தமாக. அவ்வளவுதான். குபுக்கென்று கண்ணில் நீர் பிரவாகமெடுக்க அப்படியே எழுந்து விட்டாள் சித்ரா. முரளி ஆத்திரத்துடன் தாயை முறைத்தான்.

''பிச்சைக்காரிக்கு ரோஷம் வேற ஒரு கேடு'' என்று இன்னும் இளக்காரமாகப் பேசிவிட்டு மறுபடியும் பூஜை உள்ளில் நுழைந்து கொண்டாள் சம்பா மாமி.

முரளிக்கும் அம்மா பேசியது வருத்தத்தைத் தர அவனும் சாப்பிடாமலே எழுந்து விட்டான். பிறகு ஒரு ரொட்டியும் அரை டஜன் வாழைப்பழமும் வாங்கி வந்து சித்ராவுக்கும் கொடுத்து தானும் சாப்பிட்டான். இப்படியே மூன்று நாள் ஓடிவிட்டது. நான்காம் நாள் பிற்பகல்.

மணி மூன்றாகி விட்டது. வெளியே போன முரளி இன்னும் வரவில்லை. தலை வலித்தது. காப்பி சாப்பிட வேண்டும் போல் இருந்தது. இருந்தாலும் எப்படிச் சாப்பிடுவது. அந்த வீட்டில் முரளியின் மனைவி என்ற உரிமையைத் தவிர வேறெதுவும் தனக்கு இல்லை என்று அவளுக்குத் தெரிந்தது. எதற்கும் முரளியின் உதவியையே நாட வேண்டியிருந்தது.

''தேங்காயெண்ணெய் தீர்ந்து போய்டுத்து. சமையல்கட்டில் இருந்தால் கொஞ்சம் கொண்டு வந்து தர்றீங்களா?''

''எண்ணெய் தேய்ச்சுக் குளிக்க சீக்காப் பொடி வேணுமே என்ன பண்றது? வாங்கித் தர்றீங்களா?''

இப்படி எல்லாவற்றிற்கும் முரளியின் உதவி அவளுக்குத் தேவைப்பட்டது.

தூரத்தில் முரளி வருவதை மாடி அறை ஜன்னலிலிருந்து பார்த்த பிறகுதான் கொஞ்சம் நிம்மதியும் சந்தோஷமும் வந்தது.

முரளி கூட வருவது யார்? உற்றுப் பார்த்தாள். ஹரி! ஆம் ஹரியேதான். அவளுக்கு இன்னும் சந்தோஷமாக இருந்தது. தன் மேல் அவனுக்கிருந்த கோபம் நீங்கி விட்டதா? கண்டிப்பாக நீங்கி இருக்கத்தான் வேண்டும். இல்லையென்றால் முரளியுடன் சிரித்துப் பேசியபடி வருவானா?

இருவரும் உள்ளே நுழைந்தபோது நல்ல காலம் சம்பா பூஜை ரூமில் இருந்தாள். முரளி ஹரியுடன் மாடிக்கு வந்தான்.

கையில் சின்னப் பூப்பொட்டலம், பையில் ஒரு சம்புடம் நிறைய திரட்டுப் பால் சகிதம் வந்து நின்ற ஹரியைப் பார்த்துக் கண் கலங்கினாள் சித்ரா.

''சாரி சித்ரா. உன் மனசைத் தெரியாம கஷ்டப்படுத்திட்டேன். உமா எனக்கு விவரமா எல்லாம் சொன்னா. உடனே உன்னைப் பார்க்கக் கிளம்பி வந்தேன். வழியில் இவரையும் பார்த்தேன். நீ எப்படி இருக்க சித்ரா? சௌக்கியமா இருக்கியா? அங்க நீ இல்லாம வீடே நல்லால்லே. அம்மா அடிக்கடி அழறா. எனக்கு வீட்ல இருக்கவே பிடிக்கிறதில்லே'' என்று சொல்லும் போதே அவனுக்குக் கண் கலங்கியது.

சித்ராவுக்கும் அழுகை வந்தது.

கொஞ்ச நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டு முரளி போட்டுக் கொண்டு வந்த காப்பியைக் குடித்துவிட்டு ஹரி கிளம்பிப் போனான். அவனுடன் முரளியும் வெளியே எங்கோ போனான்.

சித்ரா அம்மா கொடுத்தனுப்பியிருந்த அந்தத் தேங்காய்த் திரட்டுப் பாலை ஆசையுடன் ஓர் உருண்டை சாப்பிட்டுப் பார்த்தாள். அம்மா கையே தனி வாசனைதான். என்று மகிழ்ந்து கொண்டிருக்கும் போது கீழே அடுக்களையில் மாமியார் குரல் பெரிதாகக் கேட்க லேசாக எட்டிப் பார்த்தாள்.

''எந்த நாய் உள்ள நொழஞ்சு பாலைக் குடிச்சுட்டுப் போச்சோ, சனியன் கட்டேல போக'' என்றாள்.

சுருக்கென்றது சித்ராவுக்கு. ஹரி வந்ததைப் பார்த்திருப்பாளோ, அதை மறைமுகமாகச் சாடுகிறாளோ, இனி நாமாகவே சொல்லி விடுவதுதான் நல்லது என்று நினைத்து திரட்டுப்பாலை எடுத்த அடையாளம் தெரியாமல் சரிப்படுத்தி மூடி கையைக் கழுவிக் கொண்டு ஹரி கொடுத்த பூவையும் எடுத்துக் கொண்டு கீழே வந்தாள்.

''இந்தாங்கம்மா. என் தம்பி ஹரி வந்திருந்தான். நீங்க பூஜை ரூமில இருந்தீங்க. கொஞ்ச நேரம் இருந்தான். அப்புறம் லேட் ஆயிடுத்துன்னு போய்ட்டான். உங்கிட்டக் கொடுக்கச் சொன்னான்,'' மெதுவாகக் கூறினாள்.

விஷப்பார்வை பார்த்தாள் சம்பா.

''கொண்டா அதை'' என்றாள். மலர்ச்சியுடன் மாமியார் கையில் கொடுத்த அந்தச்

---

பெருங்காயம் கருங்கல் போல் கெட்டியாய், பாக்கு வெட்டிக்குக்கூட மசியவில்லையா? பெருங்காயத்துடன் 2 (அ) 3 பச்சை மிளகாய் வைத்துவிட்டால் பெருங்காயம் இளகிக்கொடுத்து கையால் கூட வேண்டிய சிறு துண்டுகளாய்க் கிள்ள முடியும். 4 நாளைக்கு ஒருமுறை பச்சை மிளகாய் மாற்றவும். காயத்துடன் வசித்த பச்சை மிளகாய் தாளித்த குழம்போ, கூட்டோ இரு மடங்கு மணம்... சுவை...

— கனகவல்லி

# மாசிலா மேனி

மாசிலா மேனியெழில் பெற நீங்கள் மனதில் முடிவெடுத்தால் போதும்.

தினமும் உங்களுக்கெனச் சிறிது நேரம் ஒதுக்குங்கள். கூடவே கொஞ்சம் லாக்டோ-காலமைனும் எடுத்துக்கொள்ளுங்கள்.

லாக்டோ-காலமைன் மாசுமறுக்களை அகற்றுகிறது. உங்கள் மேனியை மென்மையாகவும் மாசற்றதாகவும் வைத்திருக்கிறது.

லாக்டோ-காலமைன், ஒப்பனைத் திரையிட்டு மறைக்கவே விரும்பாத உன்னத எழிலைத் தருவது.

ஆம், எழிலான மேனியில் மறைக்க எதுவுமே இல்லை!




**லாக்டோ-காலமைன்**

Sista's-DIL-13/84A Tam R

# நியூட்ராமுல் சக்தி



க்ரீம் வளம்கொழிக்கும் அமுல் பால், நலம் தரும் மால்ட், இன்சுவைமிக்க கோக்கோ, அம்மாதும்! இவற்றின் நற்பயனுக்குத் தான் வலிவூட்டுகிறது நியூட்ராமுல், எதனாலும் மிஞ்சமுடியாத சுவையிலேயே கிடைக்கிறது!

| | 1000 gms. | 500 gms. | Refil. |
|---|---|---|---|
| நியூட்ராமுல் | 37.21 | 19.29 | – |
| மால்டோவா | 43.75 | 24.65 | 22.79 |
| பூஸ்ட் | – | 24.89 | 23.06 |
| போர்ன்விடா | 47.48 | 24.67 | 22.81 |

Prices as on 1st January, 1987. Local taxes extra.





விற்பனையாளர் விநியோகம்:
குஜராத் கோ-ஆப்பரேட்டிவ் மில்க்
மார்க்கெட்டிங் ஃபெட. லிட.,
ஆனந்த்-388 001.

அமுல் வழங்கும்
# நியூட்ராமுல்

விளங்குங்கள் நியூட்ராமுல் வஸ்தாத்தாக

daCunha/GCM/135/86 TAM

சின்ன சம்புடமும் பூவும் அடுத்த நிமிடம் ஆங்காரத்துடன் தூக்கி எறியப்பட்டன.,

இருக்கும் பலத்தை எல்லாம் பிரயோகித்ததில் அந்தச் சின்ன அலுமினியச் சம்புடம் சப்பையாய் நசுங்கி மூடித் திறந்து கொள்ள உள்ளே இருந்த திரட்டுப் பால் நாலா பக்கத்திலும் சிதறியிருந்தது.

''இந்த ஊசிப் போன திரட்டுப்பால் வரலேன்னுதான் ஒப்பாரி வெச்சு அழுதுண்டிருந்தேன் பாரு. மரியாதை கெட்ட குடும்பம்! திருட்டுத்தனமா வந்து என்ன பார்க்க வேண்டியிருக்கு? ஒழுங்காக் கல்யாணம் பண்ணிண்டாத்தானே எல்லாம் ஒழுங்கா நடக்கும்? திருட்டுக் கல்யாணம் பண்ணிண்டவளைப் பார்க்கத் திருட்டுத்தனமாத்தான் வந்துட்டுப் போவா. வந்து பன்றுடையாட்டம் இருக்கற பாலையெல்லாம் காப்பியாக்கி மாடு மாதிரி குடிச்சுட்டுப் போவா.

''இங்க பாருடி. இனி உங்க வீட்டு மனுஷங்க யாராவது உள்ள கால் வெச்சா, கொலையே நடக்கும். ஆமா, ஏதோ என் பிள்ளை வாய்க்கு பயந்துதான் நீ இந்த வீட்டுல இருக்கறதைச் சகிச்சுண்டிருக்கேன். போ என் எதிர்க்க நிக்காத. போய்டு மூதேவி.''

புஸ் புஸ் என்று மூச்சிரைக்கச் சத்தம் போட்டுக் கத்திவிட்டு ஆயாசத்துடன் ஹால் சோபாவில் உட்கார்ந்தாள்.

கழுகத்துடன் அணைத்து ஆதரவளித்து எல்லாம் கற்றுத் தர வேண்டியவளே விஷமாக வெறுத்து ஒதுக்கிய நிலையில் பொல பொலவென்று கண்ணீர் வழிந்தது சித்ராவுக்கு. மாடிக்குப் போகத் திரும்பியவளை, ''நில்லுடி'' என்ற குரல் தடுக்கத் திரும்பினாள்.

''நீலிக் கண்ணீரா வடிக்கற. அவன் வந்து அவங்கிட்ட ஏதாவது இப்ப நடந்ததைப் பத்திச் சொல்லி அம்மாவையும் பிள்ளையையும் பிரிக்கப் பார்த்தே... ஜாக்கிரதை''

ஆள்காட்டி விரலை ஆங்காரத்துடன் காட்டியவள் தொடர்ந்து.

''எல்லாம் என் போறாத காலம். லக்ஷ்மி தேவியா இந்த வீட்டுக்குள்ளே வரணும்னு ஆசைப்பட்ட அந்த உமாவை வேண்டாம்னுட்டு ஏதோ மூதேவியைக் கூட்டிக்கிட்டு வந்திருக்கான். இது நீலி அழுகை அழுதே வீட்டை சூன்யமாக்கறது. என் மோகன் போறான். அவன் தந்த பணத்துல பாதியும் போச்சு. உமாவும் கைநழுவிப் போறா. அவளோட வர வேண்டிய செல்வமும் கைநழுவிப் போச்சு. இதுக்கெல்லாம் காரணம் நீ. முரளியை நீ மயக்கி கைக்குள்ளே போட்டுக்காம இருந்திருந்தா இந்நேரம் எவ்வளவோ சிறப்போட சுகமா வாழ்ந்துண்டு இருப்பான். இதுக்கெல்லாம் உன்னைப் பழி வாங்காம விடாது தெய்வம்.''

தலையில் கை வைத்துக் கொண்டு புஸ புஸவென்று அழுதாள்.

சுளீர்! உமா இந்த வீட்டுக்கு வர ஆசைப் பட்டாளா? முரளி மறுத்தானா? தன்னிடம் சொல்லவேயில்லையே! இந்த விஷயம் அவளுக்கு அதிர்ச்சியாயிருந்தது.

குத்தல் பேச்சுக்களும், கூப்பாடுகளும், இடிபாடும் இரண்டு வருடங்களுக்குத் தொடர்ந்து அவளைப் பாடாய்ப் படுத்தின.

(தொடரும்)

## முலாம்பழ கஸ்டர்டு

**தேவையான பொருட்கள்:**

முலாம்பழத் துருவல் — 400 கிராம்,
கஸ்டர்டு பவுடர் — 80 கிராம்,
பால் — முக்கால் லிட்டர்,
சர்க்கரை — 300 கிராம்,
வெனிலா எசன்ஸ்—சிலதுளிகள்
மிக்ஸட் ப்ரூட் ஜாம் — 2 டேபிள் ஸ்பூன்.

**செய்முறை:**

சர்க்கரையையும் கஸ்டர்ட் பவுடரையும் ஒரு பாத்திரத்தில் போட்டுச் சிறிது பாலை விட்டு நன்றாகக் குழைத்துக் கொள்ளவும். மீதிப் பாலை ஒரு பாத்திரத்தில் விட்டுச் சுண்டக் காய்ச்சவும். அதோடு குழைத்த கஸ்டர்ட்டைச் சேர்த்துக் கிளறி விடவும். நன்கு கலந்து வந்ததும் எசன்ஸ் சேர்த்து கலக்கி இறக்கவும். இதோடு முலாம் பழத் துருவலையும் சேர்த்துக் கலந்து குளிர்ச்சாதனப் பெட்டியில் சிறிது நேரம் வைக்கவும். இதைக் கிண்ணங்களில் போட்டு மேலே சிறிது ஜாம் போட்டுப் பரிமாறவும். ஃப்ரிட்ஜ் இல்லாதவர்கள் ஐஸ் கட்டி வாங்கி அதன் மீது கஸ்டர்டு பாத்திரத்தை வைத்துக் குளிர்விக்கலாம்.

— விசாலாட்சி.


வளர்ச்சியான கூந்தலா!

# தயாரிக்க 15 நிமிடங்கள்



## வெஜிடபிள் டோஸ்ட்

சமைக்கும் நேரம் 15 நிமிடங்கள் (நான்கு பேருக்கு)

4 ரொட்டித் துண்டு,
8 பிரெஞ்சு பீன்ஸ் (நறுக்கிய துண்டுகள்)
கால் கப் பொடியாக நறுக்கிய கோஸ்,
கால் கப் காரட் துருவல்,
2 ஸ்பிரிங் ஆனியன் (வெங்காயம்) (இதையும் உரித்துப் பொடியாக நறுக்க வேண்டும்.)
சோம்பு — ஒரு சிட்டிகை,
அரை டீஸ்பூன் சர்க்கரை,
1 டீஸ்பூன் மிளகுபொடி,
1 உருளைக்கிழங்கு வேக வைத்து உரித்தது.
அரை டீஸ்பூன் சோயா சாஸ்,
1 டீஸ்பூன் வினிகர்,
கால் கப் மைதா,
அரை கப் தண்ணீர்,
பொரிக்க எண்ணெய்,
ரொட்டி பௌடர் (ப்ரெட் க்ரம்ஸ்),

இதோடு முளை கட்டிய பயிறும் ருசியாக இருக்கும். 4 டீஸ்பூன் எண்ணெயை வாணலியில் விட்டு, சோம்பைப் போடவும். அது வெடித்ததும் காய்கறிகள், சர்க்கரை, மிளகு பொடி, உப்பைப் போட்டு வதக்கவும். நன்கு இது வெந்த மாதிரி வதங்கியதும், இதோடு உருளைக் கிழங்கை நசுக்கிப் போட்டு, சோயா சாஸ், வினிகரை விடவும். இதை நன்கு கலந்து,ஒருரொட்டித்துண்டின்மீதுபரவலாக தடவி அடுக்கவும். இந்த மாதிரி எல்லாத் துண்டுகள் மீதும் தடவவும். பிறகு மைதாவில் தண்ணீரை விட்டுக் கலக்கி அந்தக் கலவையை ரொட்டித் துண்டின் மீது பரவலாகத் தடவி அதன் மேல் ரொட்டித் தூள்களைத் தூவி வைக்கவும். பிறகு எண்ணெயை ப்ரையிங் பேனில் விட்டு அதில் ரொட்டிகளைப் பொரித்து எடுக்கவும். இது பொன் நிறத்தில் இருக்க வேண்டும். இதை நாலு முக்கோணமாக வெட்டி, ஸ்வீட் அண்ட் ஹாட் சாஸோடு பரிமாறவும்.

இதை மற்றொரு விதமாகவும் செய்யலாம். இந்தக்காய்கலவைகளில்உருளைக்கிழங்கைப் பிசைந்து அதை வடைபோலத் தட்டி ரொட்டித் தூளில் புரட்டி பொரிக்கலாம். இதற்கு உருளைக்கிழங்கு அதிகம் வேண்டும். மைதா மாவு கலவை வேண்டாம். அதற்கு பதில் இதோடு ஊறிய ஜவ்வரிசியைப் போட்டுப் பிசையலாம்.

## தேங்காய் புட்டிங்

1 நல்ல இளநீருடன் கூடிய, வழுக்கல் தேங்காய் உள்ள இளநீர்,
3 டேபிள் ஸ்பூன் சர்க்கரை,
1 ஜெல்லி பாக்கெட்,
கால் கப் தண்ணீர்,

ஜெல்லியை ஒரு கிண்ணத்தில் போட்டு அதில் தண்ணீரை ஊற்றிக் கலக்கவும். இந்தக் கிண்ணத்தைக் கொதிநீர் உள்ள ஒரு பாத்திரத்தில் வைக்கவும். இதை நன்றாகக் கரையும் வரை கலக்கிக் கொண்டே இருக்கவும். பிறகு இளநீரைச் சீவி இளநீர், தேங்காய் வழுக்கல், சர்க்கரையை மிக்ஸியில் போட்டு நன்றாகச் சேரும்படி அடிக்கவும். இதில் ஜெல்லியைப் போட்டுக் கலக்கவும். நன்கு கலக்கி கண்ணாடிக் கிண்ணங்களில் ஊற்றி ப்ரீஸரில் வைக்கவும். இது நன்றாக செட் ஆகும் வரை ப்ரீஸரில் வைத்திருக்கவும்.

## ஆல்மண்ட் ப்ரூட் ப்ளோட்

2 கப் பால்
2 கப் தண்ணீர்
10 டேபிள் ஸ்பூன் சர்க்கரை
2 பாக்கெட் ஜெல்லி
ஆல்மண்ட் எஸென்ஸ்
அன்னாசி, ஆரஞ்சு, திராட்சை ஆப்பிள் முதலிய பழ கலவை 2 கப்
சிரப்: 3 கப் தண்ணீர்
½ கப் சர்க்கரை
ஆல்மண்ட் எஸென்ஸ்

முதலில் சர்க்கரைப் பாகு வைக்கவும். தண்ணீரைக் கொதிக்க வைத்து சர்க்கரையைப் போட்டுச் சர்க்கரை கரையும் வரை வைக்கவும். பிறகு இதை குளிரச் செய்து ஆல்மண்ட் எஸென்ஸை விட்டு குளிர வைக்கவும். ஜெல்லியை ½ கப் தண்ணீரில் விட்டு

கலக்கிச் சுடுநீர் இருக்கும் ஒரு பாத்திரத்தில் வைக்கவும். அது நன்கு கரையும் வரை கலக்கிக் கொண்டிருக்கவும். பிறகு பாக்கி 1½ கப் தண்ணீரில் பால், சர்க்கரையைக் கலக்கவும். இதைச் சூடாக்கவும். கொதி நிலை வரும் முன்பு இறக்கிவிடவும். இதைச் சிறிது குளிரச் செய்தபின், ஜெல்லியைக் கலக்கி எஸென்ஸையும் விடவும். இதை ஒரு அலுமினிய பாத்திரத்தில் விட்டு மூடி நன்றாக செட் ஆகும் வரை வைக்கவும். பிறகு இதை டையமண்ட் ஷேப்பில் வெட்டிச் சர்க்கரைச் சிரப்பில் மிதக்கவிட்டு பழத் துண்டுகளையும் போட்டுத் தரவும்.

## ஸ்டப்டு வெள்ளரிக்காய்

4 சுமாரான நீளமுள்ள வெள்ளரிக்காய்
1 உருளைக் கிழங்கு
6 டீஸ்பூன் எண்ணெய்
1 டீஸ்பூன் இஞ்சி விழுது
½ டீஸ்பூன் பூண்டு நசுக்கியது
¼ டீஸ்பூன் நசுக்கிய வெங்காயம்
¼ கப் முளைகட்டிய பயிர்
¼ கப் காரட் துறுவல்
1 சிட்டிகை சோம்பு
½ டீஸ்பூன் மிளகுப் பொடி
உப்பு
1 டீஸ்பூன், சாஸ்

தக்காளி, சோயா, ஸ்வீட் அண்ட் ஹாட் சாஸ் எதுவானாலும் சரி.

வெள்ளரிக்காயைக்கழுவித்தோலைச்சீவி, நீளவாக்கில் இரண்டாகச் செய்யவும். விரைகளை, சுரண்டி மெதுவாக எடுக்கவும். உருளைக்கிழங்கை வேகவைத்து தோலை உரித்து நசுக்கவும். அதில் உப்பைப் போட்டுக் கலந்து வைக்கவும்.

வாணலியில் எண்ணெயை விட்டுச் சோம்பைப் போட்டுப் பொரிக்கவும். அதில் இஞ்சி, பூண்டு, வெள்ளரி விதை, முளைப் பயிறு காரெட் போடவும். தேவையான உப்பு, மிளகுப் பொடியைச் சேர்த்து நன்றாக வேகும் வரை வதக்கவும். இதில் வேக வைத்த உருளைக்கிழங்கு, சாஸைச் சேர்க்கவும். நன்றாக இதைக் கலந்து இறக்கவும். இதை ஆற வைத்து வெள்ளரிக் காய்களில் நிரப்பவும். பிறகு ப்ரையிங் பேனில் எண்ணெயை விட்டுவெள்ளரிக்காயைவரிசையாக அடுக்கவும். பிறகு இதை மூடி 5, 6 நிமிடங்களுக்கு வேக வைக்கவும். தீ குறைவாக இருக்க வேண்டும். பிறகு இதைத் தட்டில் அழகாக அடுக்கி வைத்து மேலே சாஸை விடவும். இதை ரொட்டியோடு (அ) சாதத்தோடும் சாப்பிடலாம். அல்லது காரப் பொரி, ஓமப் பொடி கலவையில் சிறிது பச்சை வெங்காயம், பச்சை மிளகாய், கொத்துமல்லித் தழை பொடிப் பொடியாக நறுக்கியது, தக்காளியைத் துண்டுகளாக நறுக்கிப் போட்டு சிறிது உப்பு, காரப் பொடி போட்டு நன்றாகக் கலக்கிச் சிறிது எலுமிச்சம் பழம் பிழிந்து இதோடு சேர்த்துச் சாப்பிடலாம்.

## தர்பூசணி சூப்

4 கப் தர்பூசணி துண்டுகள்
1 வெள்ளரிக்காய்
¼ கப் நாய்க்குடை வேக வைத்தது ஆனால் இது அவசியமில்லை
¼ கப் பட்டாணி வேக வைத்தது
¼ கப் முட்டைகோஸ் பொடியாக நறுக்கியது
¼ கப் அன்னாசி துண்டுகள்
1 சிட்டிகை சோம்பு
உப்பு, மிளகுப் பொடி
4 கப் தண்ணீர்

தர்பூசணி துண்டுகளிலிருந்து விரைகளை நீக்கவும். பிறகு மிக்ஸியில் போட்டு அடித்து, கெட்டியான ஜூஸாக வைத்துக் கொள்ளவும். வெள்ளரியை தோல்சீவிச் சிறிய துண்டுகளாகச் செய்யவும். ஒரு பாத்திரத்தில் தண்ணீரை ஊற்றி அதில் தர்பூசணி ஜூஸைப் போடவும். இந்தக் கலவையைக் கொதிக்க வைக்கவும். இதில் நாய்க்குடை, வெள்ளரித் துண்டு, சோம்பைப் போட்டு, 2 நிமிஷம் கொதிக்க விடவும். பிறகு பட்டாணி, கோஸ், அன்னாசித் துண்டுகள், உப்பு, மிளகுப் பொடி போட்டு 1 நிமிஷம் மூடாமல் கொதிக்க வைத்து இறக்கவும். பரிமாறும் போது சிறிது க்ரீம் சேர்த்துக் கொடுக்கலாம்.

— **சரோஜா பாலகிருஷ்ணன்**

## மீன் வைத்தியம்



அசைவம் சாப்பிடுபவர்களுக்கு ஒரு சிறந்த வைத்திய முறை இது. பிரசவத்தில் சிஸேரியன் செய்யப்பட்ட பெண்களுக்குஇரண்டாவது அல்லதுமூன்றாவது நாளில் இருந்து தினமும் விரால் மீனை மருந்துப் பக்குவங்களுடன் சமைத்துக் கொடுப்பது நல்லது. வயிற்றுப் புண் ஆறுவதுடன், தையல் பிரிப்பதும் சுலபமாகி விடுகிறது. என் மகளுக்குச் சிங்கப்பூரில் பிரசவம் நடந்தபோது ஒரு சீனப் பெண்ணின் அனுபவ அறிவுரைப்படி, நான் செய்து பார்த்து, விரைவில் அவளுக்கு குணமாகியதில் எங்களுக்குத் திருப்தி தந்த வைத்தியம் இது!

— திருமதி கமலா துரைமுத்து

# ஒரு கனவு நனவாகிறது!

ஒரு பைலட். அதுதான் அவன் எப்போதும் ஆக விரும்பியது. ஒரு குழந்தையாக இருந்தபோதே அவனது பேச்செல்லாம் அது பற்றிதான் இருக்கும். ஒரு நாளைக்கு இரு தடவை ஹார்லிக்ஸைக் குடித்துப் பெரியவனாக, வலுவுடன் வளர் என்று அவனுக்கு நான் சொன்னது நினைவிருக்கிறது.

இப்போது, அதெல்லாம் உண்மையாகவே நடந்துவிட்டது. ஒரு நாளைக்கு இரண்டு வேளை ஹார்லிக்ஸ் குடிக்கும் பழக்கத்தை அவனுக்கு நாங்கள் ஏற்படுத்தியது குறித்து நான் மகிழ்ச்சியடைகிறேன். இத்தனை வருஷங்களிலும் அவனுக்கு அது உறுதுணையாக இருந்து வந்துள்ளது.



வளரும் குழந்தைகளுக்கு நலமளிப்பது.

மால்டெட் பார்லி, முழு ஆடைப்பால் மற்றும் பொன்னிற கோதுமை கொண்ட ஹார்லிக்ஸ் ஒரு சுவையான, சத்தான பானம். ஊட்டச் சத்திற்கு மூலாதாரமான ஒரு லட்சிய பான மென்ற நற்பெயரைப் பெற்றது. எனவே கடந்த நூறு வருடங்களாக கோடிக்கணக்கான குடும்பங்கள் உலகமெங்கும் ஹார்லிக்ஸின் மேல் நம்பிக்கை வைத்து வருகிறார்கள் என்பதில் ஆச்சரியமில்லை.




சிறந்த ஊட்டச்சத்துமிக்க பானம்

HMM-9240 TAM



— ஜெ. துர்க்கா

20 புள்ளி 10 வரிசை
10 புள்ளி 5 வரிசை



— ஜெபமணி

நேர்புள்ளி — 21 லிருந்து
2 — 2 ஆகக் குறைத்து
1 புள்ளி வரை



— சுமதி ரகுநாதன்

# புக் ஷெல்ஃப்

### வகை வகையான கோலங்கள்

பாகம் — 1 தொகுப்பு — மணிமேகலை பிரசுர ஆசிரியர் குழு விலை ரூ. 4.50

### ஊறுகாய் வகைகள்

ஆசிரியர் — இராமசுப்பிரமணியன் விலை ரூ. 3.50

### பிராமணச் சமையல்

தொகுப்பு: மணிமேகலைப் பிரசுர ஆசிரியர் குழு விலை ரூ. 7.00

### குடும்பம் நடத்துவது எப்படி?

கணவனுக்கும் மனைவிக்கும் அறிவுரைகளைத் தருகிறார் ஆசிரியர் தமிழ்வாணன் விலை ரூ. 7.00

### புகுந்த வீட்டில் பெண்கள் நடந்து கொள்ள வேண்டிய முறைகள்

தொகுப்பு: மணிமேகலைப் பிரசுர ஆசிரியர் குழு விலை ரூ. 5.25

### கொண்டை அலங்காரங்களும் கூந்தல் பராமரிப்பும்

தொகுப்பு: மணிமேகலைப் பிரசுர ஆசிரியர் குழு விலை ரூ. 6.50

### வீட்டில் பயனுள்ள மரங்களை வளர்ப்பது எப்படி?

தொகுப்பு: மணிமேகலைப் பிரசுர ஆசிரியர் குழு விலை ரூ. 10.00

### மென்ஸஸ் தொல்லைகள்

ஆசிரியர்: லேனா தமிழ்வாணன் விலை ரூ. 6.50

### குழந்தை இல்லாத குறையா?

தொகுப்பு: மணிமேகலைப் பிரசுர ஆசிரியர் குழு விலை ரூ. 8.00

### பெண்களின் நோய்கள்

ஆசிரியர்: தமிழ்வாணன் விலை ரூ. 14.00

(மேற்கண்ட பத்து புத்தகங்களின் பதிப்பாளர் மணிமேகலைப் பிரசுரம், தபால் பெட்டி எண்: 1447, 4, தணிகாசலம் செட்டி ரோடு, தி. நகர், சென்னை — 17.)

### இயேசு என்ன போதித்தார்?

தத்துவ விளக்கங்கள் ஆசிரியர்: மெர்வின். விலை ரூ. 5.90

(பூங்காற்று பதிப்பகம், 4, சபாபதி தெரு, குரோம்பேட்டை, சென்னை — 44.)

### வீட்டிலேயே சுலபமாக ருசிமிக்க கேக், பிஸ்கட்டுகள் செய்முறை:

ஆசிரியர்: சீதாலக்ஷ்மி விலை ரூ. 7.00

### ஸ்ரீரங்க புராணம்

கதைகளுடன், கோவிலின் சிறப்புப் பற்றியும் உள்ளது. ஆசிரியர்: ஏ. எஸ். வழித்துணை ராமன் விலை ரூ. 5.00

### தாய்மை

கர்ப்ப கால, பிரசவ கால நிலைகள் பற்றியவை. ஆசிரியர்: டாக்டர் திரிபுரசுந்தரி (லக்ஷ்மி). விலை ரூ. 15.00

(மேற்கண்ட மூன்று புத்தகங்களின் பதிப்பாளர் — பாரதி பதிப்பகம், 108, உஸ்மான் சாலை, தி. நகர், சென்னை — 17.)

### பரமாச்சார்யர்

பரமாச்சார்யர் பற்றிய பல்வேறு நபர்களின் அனுபவங்கள். விலை ரூ. 6.50

(பரந்தாமன் பதிப்பகம், எல் 23, தெற்கு போக் சாலை, சென்னை — 17.)

### சாண அடுப்பும், சூரிய அடுப்பும்

சாண, சூரிய அடுப்புகளின் உபயோகங்கள் மற்றும் விவரங்கள். ஆசிரியர் ஆண்டாள் பிரியதர்ஷினி விலை ரூ. 5.00

### சுருதி பிசகாத வீணை

நாவலின் ஆசிரியர்: ஆண்டாள் பிரியதர்ஷினி விலை ரூ. 20.00

(இரண்டு புத்தகங்களின் பதிப்பாளர்: ஆண்டாள் பதிப்பகம், த.பெ. எண்: 1068, சென்னை — 15.)

### வாழ்க்கைத் தத்துவங்கள்

அர்த்தம் புரியாமல் அனுஷ்டித்து வரும் பல சடங்குகளுக்கும் விளக்கமளித்து வாழ்வின் தத்துவத்தையும் கூறுகிறார் ஆசிரியர் நஜன். விலை ரூ. 15.00

### கல்யாணமே, வைபோகமே

திருமணங்களின் சடங்குகளைப் பற்றிய விளக்கங்கள்: ஆசிரியர் நஜன். விலை ரூ. 10.00

### தமிழக முதல்வர்கள்

1920 லிருந்து ஒரு தமிழக வரலாற்று நூல். ஆசிரியர்: நஜன். விலை ரூ. 18.00

(மூன்றுபுத்தகங்களின் பதிப்பாளர்: பிரதிபா பிரசுரம், 39, ஆடம் தெரு, சென்னை — 4.)

### மூன்

'இலக்கியச் சிந்தனை'யின் 1986 ஆம் ஆண்டின் பன்னிரண்டு சிறந்த சிறுகதைகள். விலை ரூ. 12.00

### மனிதன் எப்படி வாழ வேண்டும்?

ஆசிரியர்: பி. சி. கணேசன் விலை ரூ. 6.00

### மாண்புமிகு முதலமைச்சர்

சரித்திர நாவலின் ஆசிரியர் கோவி. மணிசேகரன் விலை ரூ. 20.00

### ரத்தம் ஒரே நிறம்

ஆங்கிலேய ஆட்சிக் காலத்தைக் கூறும் நாவல். ஆசிரியர்: சுஜாதா. விலை ரூ. 32.00

(மூன்று புத்தகங்களின் பதிப்பாளர்: வானதி பதிப்பகம், 13, தீனதயாளு தெரு, தி. நகர், சென்னை — 17.)

# சொல்ல விரும்புகிறோம்



* 'ஆவின் பால்' கருத்தரங்கம் அருமை. அன்றாடத்தேவையான ஆவின் பாலைப்பற்றி மனத்தில் எழும் சந்தேகங்களைத் தீர்க்கும் வண்ணம் அழகாக அமைந்திருந்தது.

ராஜபாளையம், ஜீவா ராம்ராஜ்.

* வேர்களை அரிக்கும் பூச்சிகளான பல ருக்கு வில்லியம்ஸின் தீர்க்கதரிசனமான வார்த்தைகள் ஓர் எச்சரிக்கை. கடவுளை வணங்குவதைவிட கடவுளின் படைப்பு களிடம் அன்பு வைத்தாலே போதும் என்பது ஆழமான வரி.

திருத்துறைப்பூண்டி,
டி. டேவிட் ஜான் பிரிட்டோ.

* 'புது' மொழிகள் பகுதியில் எட்டு புது (பழ)மொழிகளும் டாப்பு. சிரித்து விட்டோம்.

விருத்தாசலம், கார்த்திகை ராஜா

* "சொல்லுங்கள் பார்க்கலாம்" புகைப் படவினா—விடைப் பகுதிக்கு 'சென்ற மாதம்' என்று தலைப்பிட்டுள்ளீர்களே தவிர, கேள்வி களில் பெரும்பாலானவை மார்ச் மாதம் நிகழ்ந்த சம்பவங்கள் பற்றியே உள்ளனவே!

தஞ்சை, கே. முரளி.

* 'வெள்ளிக்கிழமை விரதம்' படக்கதை மிகவும் அருமை. அதனினும் அருமை, அதனைத் தொடங்கும் காலத்தினைக் கூறி தக்க சமயத்தில் வெளியிட்டது.

விழுப்புரம், கே. வி. துளசிபாய்.

* 'சூழ்நிலைகளுக்குஏற்பஎப்படிவாழ்க்கை நடத்துவது?' என்று ஒவ்வொரு முறையும் வழிகாட்டும் மங்கையர் மலரே! உன்னுடைய சென்ற இதழில் இடம் பெற்ற 'பத்து கட்டளை களை'ச் சிரம் தாழ்த்தி வணங்கி வரவேற் கிறோம்!

நீடாமங்கலம், ஜெ. நளினி.

* மருத்துவத் துறையில் உள்ள சிறப்பு மிக்க நிபுணர்களை அடிக்கடி பேட்டி கண்டு வெளியிடுவதால் எங்களுடைய மருத்துவ அறிவு விரிவாகிறது.

நெருஞ்சிப்பேட்டை, சுகம் சினேகலதா.

* சியாமளாவின் 'ஜீவநதிகள்' ஆரம்ப முன்னோட்டமே, அற்புதமாக — மனத்துக்கு நிறைவை அளிக்கும்படி செல்கிறது!

பள்ளிப்பாளையம், இரமேஷ்.

* பத்துக் கட்டளைகள் — என்னைப் போன்ற 'மறதி மன்னர்'களுக்கு மிகவும் பயனுள்ள ஒன்றாகும். உடனேயே கையோடு கட்டிங் செய்து வைத்துக் கொண்டுவிட்டேன். இவ் விடுமுறையில் "டூர்" போகும்போது பய னுள்ளதாக இருக்குமல்லவா?!

தஞ்சாவூர், கோ. இராஜேஷ்.

* 'நீங்களே டாக்டராகாதீர்கள்' பயனுள்ள கட்டுரை. நன்றி.

இருமேனி, திருமதி சுஹரவர்தீன்.

* உண்மையிலேயே உங்களைப் பாராட்ட வார்த்தைகளைத் தேடி அலைகின்றேன். லைப் இன்ஷூரன்ஸைப் பற்றி எளியோரும் புரிந்து கொள்ளத் தக்க விதத்தில் நிர்மலா சக்கரவர்த்தி எழுதிய விஷயங்கள் போற்றிப் பாதுகாத்துச் செயற்படுத்த வேண்டிய ஒன்று கும்.

கச்சநகரம், எஸ். மீனாட்சி மாணிக்கம்.

* பாரதிப்ரியா அவர்களின் "வேர்களை அரிக்கும் பூச்சிகள்" படைப்பு மிகப் பிர மாதம். உயர்ந்த கொள்கைகள் உங்கள் லட்சி யங்களாக இல்லாவிட்டாலும் மனித உயிர் களை மதிக்கும் அடிப்படை குணத்தையாவது வளர்த்துக் கொள்ளுங்கள்" என்ற வரிகள் எங்களைக் கண்ணீர்விடச் செய்துவிட்டது.

மதுரை, எஸ். சுந்தரவல்லி.



1

1. அண்மையில் புது தில்லியில் எதிர்க் கட்சிகளைச் சேர்ந்த முதல்வர்களின் மாநாடு ஒன்று நடைபெற்றது. இந்த மாநாட்டில் கலந்து கொண்ட முதல்வர்கள் யார்?
2. அமெரிக்க சுகாதார அமைச்சர் சென்னை அடையாறில் உள்ள புற்று நோய் மருத்துவ மனைக்கு விஜயம் செய்தார். இந்த ஆஸ்பத்திரியின் இயக்குநர் டாக்டர் சாந்தா அங்கு அளிக்கப்படும் சிகிச்சையை அமெரிக்கரிடம் விளக்குகிறார். அமெரிக்க அமைச்சரின் பெயரென்ன?
3. வெலிங்டனில் (உதக மண்டலம்) ராணுவப் பயிற்சிக் கல்லூரியின் வரலாற்றை விவரிக்கும் நூலை பீல்டு மார்

6



2



3




8



4



# சென்ற மாதத்தில்...

ஷல் மானெக்ஷா வெளியிடுகிறார். இவர் இந்த கல்லூரியில் 1959—62 வரை முதல்வராக இருந்தவர். இந்தக் கல்லூரி எப்போது தொடங்கப்பட்டது?

4. சென்னை சென்ட்ரல் புறநகர் ரயில் நிலையம் முன்பு ரூ 50,000 செலவில் வைக்கப்பட்டிருக்கும் மாடல் இது. இது என்ன கட்டிடம்?

5. மாநிலக் கல்வி அமைச்சர் பொன்னையன், கவர்னர் குரானா, அண்ணா பல்கலைக்கழகத் துணைவேந்தர் குழந்தைசாமி, ஜெர்மனி தூதர் கந்தார் ஸ்காடல் ஆகியோர் படத்தில் உள்ளனர். ஜெர்மனியிடமிருந்து அண்ணா பல்கலைக் கழகம் பெறும் உதவி என்ன?

6. சென்னை திருவல்லிக்கேணி பார்த்தசாரதி கோயில் தேர்த் திருவிழா இது. இந்தக் கோயிலுக்கு விஜயம் செய்த சரித்திர 'புகழ் பெற்ற ஹிந்து மதத் துறவி யார்?

7. மிடில்செக்ஸ் (லண்டன்) ஆஸ்பத்திரியில் 32 வயதான 'எய்ட்ஸ்' நோயாளி ஒருவரைச் சந்திக்கும் இந்த நபர் யார்?

8. ராஜீவ் காந்தியைச் சந்திக்கும் இந்த சிறுவனை யாரென்று தெரிகிறதா?

9. இதை பூதம் என்று எண்ணி பயப்படாதீர்கள். இது ஒரு விளையாட்டுக்கு அணிந்து கொள்ளும் உடை. என்ன விளையாட்டு என்று சொல்ல முடியுமா?




7



9



விடை:

1. ஜோதிபாசு (மே. வங்காளம்), என்.டி. ராமாராவ் (ஆந்திரம்), ஈ.கே. நாயினர் (கேரளா), பர்னலா (பஞ்சாப்), நிருபன் சக்கரவர்த்தி (திரிபுரா), ராமகிருஷ்ண ஹெக்டே (கர்நாடகா)
2. அமெரிக்க சுகாதார அமைச்சர் போவென்
3. 1947—ஆம் ஆண்டு
4. பழைய மூர்மார்க்கெட்
5. 4.5 கோடி ரூபாயை அறிவியல் ஆய்வு சாதனங்கள் வாங்க மேற்கு ஜெர்மனி கொடுக்கிறது.
6. சுவாமி விவேகானந்தர்
7. இளவரசி டயானா சார்லஸ்
8. ஆப்பிரிக்க நிதி உதவிக்காக முதன் முதலாக ரூபாய் 150 ஐ வழங்கிய சிறுவன் ஹேமநாத் ஷாமம். தன்னுடைய கைச் செலவுக்கான பணத்தைச் சேமித்து வைத்து இந்த நிதிக்கு வழங்கினான் இச் சிறுவன். இவனே சேலத்திற்கு அண்மையில் ராஜீவ் காந்தி வந்தபோது சந்தித்தார்.
9. ஐரோப்பாவில் பிரபலமாக விளையாடப்படும் 'ஐஸ் ஹாக்கி.'

தொகுப்பு:
தாம்பிரவருணி

# திருமண மலர்

* Mutual/seperate alliance for Vellal Mudaliar/Pillai Girl 35 years, S.S.L.C., tailoring, homely and for brother 38 years Central employed. Preferable employed girls. Reply with Horoscope to Box No. 4896.

* சொந்தமாக பிஸினஸில் மாதம் ரூ. 2000/— க்கு மேல் சம்பாதிக்கும் 39 வயதான, பாரத்வாஜ, பிரகசரண (பி. ஏ.) அஸ்வினி பையனுக்கு, இரண்டாம் தாரமாக வாழ்க்கைப்படச் சம்மதமுள்ள ஐயர் பெண் தேவை. மெலிந்த தேக வாகும், சிவப்பு நிறமும், 5' 2'' க்கு குறைவான உயரமும் நற்பண்புகளும், ஆங்கில டைப்பிங் தேர்ச்சியும் பெற்றிருக்க வேண்டும். முதல் தாரம் குணக் கேட்டால் எந்த விலங்கமும் இல்லாமல் விவாகரத்தாகி விட்டது. ஜாதகம் மற்றும் விவரங்கள் அனுப்பவும். பெட்டி எண்: 4897.

* விஸ்வ கர்மா, தெலுங்கு. வயது 29, உயரம் 5' 7'' மூலம் நட்சத்திரம், மாத வருமானம் ரூ. 1600/— டி. வி. எஸ். குரூப்பில் பணிபுரியும் வரனுக்கு அதே இனத்தில் அழகான குடும்பப்பாங்கான பெண் தேவை. ஜாதகம் மற்றும் குடும்ப விவரத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 4898.

* Alliance invited from educated preferably unemployed Brahmin Girls for State employed Engineer, Visakam 28/158/1800 of intercaste parentage, father Vadama-Koundinya; mother Vellala-Padayachi. Box No. 4899.

* .Vadama Bride in transferable Government service for Vadama Kowsika Bachelor 44 in Government service S.S.L.C. Rs. 1600/- Graduates and non-Vadamas need not apply. Horoscope to Box No. 4900.

* ஆர்ய வைசியர், காவல் துறையில் வேலை, ரூ. 1000/—, 5' 6'' திருவாதிரை, 30 வயதுள்ள 'வரனுக்கு அதே சமுதாயத்தைச் சேர்ந்த நல்ல அழகான மணமகள் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 4901.

* பாலக்காடு அய்யர், வடமான், கௌண்டின்ய, அனுஷம், எஸ். எஸ். எல். ஸி. பாஸ் செய்த, 32 வயது அழகான குடும்பப் பெண்ணிற்கு நிரந்தர வேலை மற்றும் சொந்த வியாபாரம் செய்யும் மணமகன் தேவை. சகோதரர், 36 வயது, அவிட்டம், நிரந்தர வேலையில் இருப்பவருக்குக் கேரளாவில், அல்லது கேரளாவிற்கு மாற்றம் செய்யக் கூடிய வேலைக்குப் போகும் மணமகள் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 4902.

* மாநில அரசில் பணிபுரியும் முதலியார் இன (சதயம்) மாதம் ரூ. 1100/— சம்பளம் பெறும் 29 வயதுள்ள வரனுக்குத் தகுந்த மணமகள் தேவை. எஸ். எஸ். எல். ஸிக்குக் குறையாமல் படித்த குடும்பப்பாங்கான அழகுடன் கூடிய பெண் தேவை. பணிபுரியும் பெண்களும், மற்றும் வசதியுள்ளவர்களும் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 4903.

* மாநில அரசில் ரூ. 1000/— ஊதியம் பெறும் முதலியார் இன (வயது 30) வரனுக்குப் பணிபுரியும் மணமகள் தேவை. (அல்லது) வசதியுள்ள எஸ். எஸ். எல். ஸிக்குக் குறையாமல் படித்த, அழகுடன் குடும்பப்பாங்கான பெண்களும் தொடர்பு கொள்ளவும். உடனே திருமணம். பெட்டி எண்: 4904.

* சுத்த ஜாதகம், பாரத்வாஜ கோத்திரம், வடமாள், தமிழ் அய்யர் குலம், வடஆற்காடு ஜில்லா எம். எஸ்.ஸி படித்துவிட்டு, தற்போது பம்பாயில் காலேஜ் லெக்சரராக ரூ. 2000/— மாத சம்பளத்தில் பணியாற்றி வரும் 26 வயது நிரம்பிய, மாநிறமான 5' 2'' உயரம், சதயம் 2 ஆம் பாதத்தில் ஜனித்த அழகிய பெண்ணிற்கு, பம்பாயிலேயே தகுந்த வேலையில் பணிபுரியும் அழகிய மணமகன் தேவை. உடனடித் திருமணம் நடத்தும் உத்தேசம். ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 4905.



* பூர நக்ஷத்திரம், 29 வயது. செவ்வாயும் குருவும் 8 இல் உண்டு. தேசிய பேங்கில் பியூன் (சப்ஸ்டாஃப்) ஆக இருக்கும், பையனுக்கு, சம்பளம் ரூ. 1250/— உயரம் 5' 4'' படிப்பு, எஸ். எஸ். எல். ஸி., வேலையில் உள்ள, இல்லாத பெண் தேவை. தந்தை பாரத்வாஜ கோத்திரம், தெலுங்கு நியோகி பிராமின், தாய் அய்யர், வடமான், கார்க்கிய கோத்திரம், அய்யர் பெண்கள் மட்டும் ஜாதகத்துடன் எழுதவும். பெட்டி எண்: 4906.

* சைவ முதலியார், சிவப்பு நிறம், அழகான 23/160 செ. மீ., பி.யூ.சி., தமிழ், ஆங்கிலம் டைப்ரைட்டிங் தேர்ச்சி பெற்ற பெண்ணுக்கு, சிவப்பு நிறம் அல்லது மாநிறமுள்ள அரசு/தனியார் துறையில் வேலை பார்க்கும் மணமகன் தேவை. உடனே திருமணம் செய்து தரப்படும். பெட்டி எண்: 4907.

* காரைக்கட்டு வெள்ளாளர் வயது 29, 163 செ. மீ. உயரம், பட்டதாரி, அரசு கூட்டுறவுத் துறையில் ஆடிட் இன்ஸ்பெக்டர், சம்பளம் ரூ. 1200/—, சொந்த வீடு, நிலமும் உள்ள மணமகனுக்கு மத்திய/மாநில அரசுத்துறையில் பணிபுரியும் மதுரைக்கு மாற்றலாகி வரக் கூடிய நல்ல நிறமுள்ள மணமகள் தேவை. ஜாதி உட்பிரிவு சம்மதம். பெட்டி எண்: 4908.

* வேளாளர் வகுப்பைச் சேர்ந்த டாக்டரின் மகள், வயது 21, உயரம் 5' 4'' நல்ல சிவப்பு, பட்டதாரி, பெண்ணுக்கு வேளாளப் பிள்ளை, சொந்தத் தொழில் செய்பவர், டாக்டர், எஞ்சினியர் அல்லது நல்ல பதவியில் உள்ள

28 வயதுக்கு மிகாத, மணமகள் தேவை. பெட்டி எண்: 4 909.

* இந்து சௌராஷ்டிரா 29 வயது ஸ்கூல் ஃபைனல் எளிய நடுத்தர குடும்பம் கடவுள் பக்தி கொண்ட பெண்ணிற்கு மணமகனும் அவரது சகோதரன் 27 பி. காம். டைப்பிஸ்ட் (தனியார் ரூ 800 சம்பாதிப்பவருக்கு மணமகளும் தேவை.) ஜாதி தடை இல்லை. எளிய திருமணம். பெட்டி எண்: 4 910.

* கௌசிக கோத்திரம், வடமாள், ஐயர், உத்திராடம், 24/174 கண்டக்டர் & ஹெவி டிரைவிங் லைசென்ஸ் பெற்று பி. ஏ. இறுதி யாண்டு முடிக்கும் சிவந்த அழகிய தோற்றமுள்ள பையனுக்கு நல்ல வேலை வாங்கிக் கொடுத்து மணம் புரிய விரும்பும் வேலையில் உள்ள/வேலையிலில்லாத 21 வயதிற்குட்பட்ட அழகிய ஐயர் மணமகள் தேவை. வரதட்சணை வேண்டாம். எளிமையான திருமணம். பெட்டி எண்: 4 911.

* ஆயில்யம் நட்சத்திரம், 30 வயது, பி. யு. சி. படித்த நர்சரியில் வேலை பார்க்கும், குடும்பப்பாங்கான ஐயர் பெண்ணுக்கு நிரந்தர வேலையிலுள்ள ஸ்ரீவத்ஸ கோத்திரமல்லாத 36 வயதுக்குள் வரன் தேவை. ஐயரில் உட்பிரிவு சம்மதம். வரதட்சிணை கிடையாது. எளிமையான திருமணம். ஜாதகம் இல்லை. பெட்டி எண்: 4 912.

* Broad-minded fair goodlooking educated young Mudaliar Bride for Mudaliar widower 36/153 having two male children 3/7 propertied own business monthly income Rs. 5000/-. Contact Post Box 188, Erode - 638 001.

* A very fair, beautiful Graduate Bride from good affluent family wanted for handsome Aiyer Company Executive, 31, earning over Rs. 3500 p.m. with liberal perks. Haritha gothram, Tiruvadirai star, shuddha jatakam, son of an affluent, well placed senior company executive. Reply with Horoscope & particulars to Box No. 4913.

* Brahmin Girl 34 years, employed in Private firm, divorcee after 4 months married life, no encumbrances, fair, young look. Alliance invited from well settled bachelor, widower, divorcee — no bar. No dowry, simple marriage. Box No. 4914.

* Hindu Bride 35/155 cms. backward caste Graduate vegetarian State Govt. salary 1450/- Madras



settled domestically well trained Industrious, soft natured seek decently employed Groom from responsible families. Salary, education relaxable to some extent. Box No. 4915.

* காசியப வடமாள், ஸ்மார்த்த பிராமணன், தமிழ், வடாற்காடு, உத்திரம்—4, உயரம் 5' 2'' சிவப்பு நிறம், தனியார் துறையில் சம்பளம் ரூ. 4 50/— குடும்பப்பாங்கான மணமகனுக்கு அரசாங்க, தனியார் துறை, கம்பெனி, பாக்டரியில் நிரந்தர வேலையிலுள்ள 35/41 வயது மணமகள் தேவை. ஐயரில் எந்த உட்பிரிவும் சம்மதம். குடும்ப விவரம், ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 4 916.

* கௌண்டின்ய கோத்திரம், பிராமணன், வடமாள் ஆயில்யம் 4 ஆம் பாதம் நட்சத்திரம், பட்டதாரி, வயது 31, உயரம் 5' 5'' நல்ல நிறமுள்ள பையனுக்குப் படித்த மாநில அரசு உத்தியோகத்தில் உள்ள, குடும்பப்பாங்கான மணமகள் தேவை. பெட்டி எண்: 4 917.

* இந்து மதம், கொங்கு செட்டியார் வகுப்பைச் சார்ந்த சொந்தத் தொழிலில் மாதம் ரூ. 2000 முதல் ரூ. 3000 வரை சம்பாதிக்கும் 30 வயது, உயரம் 5' 11'' பி. காம்., பட்டதாரியான மணமகனுக்கு அழகும், குணமும் உடைய படித்த மணமகள் தேவை. இந்து மதம், செட்டியார் வகுப்பில் எந்த உட்பிரிவிலும் சம்மதம். பெட்டி எண்: 4 918.

* வயது 32, மத்திய அரசில் பணி, மாத வருமானம் ரூபாய் 2000/— கால்சிறிது ஊனம். ஆனால் நன்றாக நடக்க முடியும். ரூபாய் 60 ஆயிரம் மதிப்புள்ள இசைக் கருவிகளுக்குச் சொந்தமான (எதிர்காலத்தில் இசையமைப்பாளராக வரலாம்) அழகான இசைக் கலைஞருக்குப் படித்த, அழகும் அறிவும் உள்ள ஜாதி, மத பேதமற்ற மணமகள் தேவை. பெட்டி எண்: 4 919.

* வாணிய செட்டியார், நெடுங்கால் மகரிஷி கோத்திரம், மூல நட்சத்திரம், மூன்றும் பாதம், 25 வயது, உயரம் 5 அடி 2 அங்குலம், நல்ல சிவப்பு நிறம், பி. யு. சி. படித்த, சென்னையில் தனியார் கம்பெனியில் பணிபுரியும் பெண்ணுக்கு இதே இனத்தைச் சேர்ந்த வரன் தேவை. குடும்ப விவரம், படிப்பு, உத்தியோகம், ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 4 920.

* தஞ்சை ஜில்லா, தமிழ் அய்யர், கௌசிக கோத்திரம், வடமாள், சித்திரை — 4, (33) ரூ. 2000/—, அழகான, சிவப்பு நிறமான பாண்டிச்சேரி அரசு ஊழியருக்கு மணமகள் தேவை. ஜாதகம் மற்றும் குடும்ப விவரத்துடன் எழுதவும். உட்பிரிவுகளும் விண்ணப்பிக்கலாம். பெட்டி எண்: 4 921.

* பிரஹசரணம், பாரத்வாஜம், பூரம், வயது 30, 163 செ.மீ., பி. காம்., 4 இல் செவ்வாய் தோஷம், மாத வருமானம் ரூ. 2000/— டெல்லியில் வேலை பார்க்கும் பையனுக்கு நல்ல குடும்பப்பாங்கான, பட்டதாரி மணமகள் தேவை. பெண்ணின் ஜாதகம், குடும்ப விவரத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 4 922.

* வடமாள், கௌசிகம், வயது 31, மாத வருமானம் ரூ. 2000/—, பி. எஸ்ஸி., மோட்டூரில் முதன்மை நிலை வகிக்கும் தனியார் நிறுவனத்தில் பணிபுரியும் மணமகனுக்கு நிரந்தர வேலையில் உள்ள மணமகள் தேவை. பெட்டி எண்: 4 923.

* சோழிய வெள்ளாளர் பிள்ளை வகுப்பைச் சேர்ந்த 28 வயது, எஸ். எஸ். எல். சி. படித்த குடும்பப்பாங்கான மாநிற நடுத்தர வகுப்பைச் சேர்ந்த பெண்ணிற்கு அதே இனத்தைச் சேர்ந்த கரூரில் உறவினர்கள் உள்ள மணமகன் தேவை. வருமானம், குடும்ப விவரம், ஜாதகம் — எதிர்பார்க்கும் சீர் வரிசை விவரங்களுடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 4 924.

* Alliance invited from well employed and well qualified Balija Naidu Groom aged around 32 yrs for a Graduate Central Govt. employed Girl at Bombay aged 29 years of decent family drawing salary Rs. 1800/- p.m. Star Aswani. Reply to Box No. 4925.

* வடமாள், வசதி வாய்ந்த பெற்றோருக்கு ஒரே பிள்ளை. வயது 33, தனியார் நிறுவனத்தில் உத்தியோகம். வலிப்பு நோய் வந்து சிகிச்சை பெற்றவர். கல்யாணமாகி இரண்டு மாதத்திற்குள் மனைவி நடந்து கொண்ட முறை

வில் சட்டப்படி விவாகரத்து ஆனவர். இந்த வரனுக்கு குடும்பப் பாங்கும், பையனுடன் அனுசரித்து, அவனுக்கு ஆதரவாகவும் உள்ள, வேலையிலுள்ள/இல்லாத, நல்ல குடும்பத்தைச் சேர்ந்த பெண் தேவை. வரதட்சணை வேண்டாம். இதற்குச் சம்மதம் உள்ளவர்கள் மட்டும் ஜாதகம், குடும்ப விவரங்களுடன் விண்ணப்பிக்கவும். உட்பிரிவுகள் பாதகமில்லை. பெட்டி எண்: 4926.

* சௌராஷ்டிர வகுப்பைச் சேர்ந்த 27 வயது வரனுக்கு அதே வகுப்பைச் சேர்ந்த 26 வயதுக்குட்பட்ட படித்த நல்ல குடும்பப் பாங்கான அழகுள்ள பெண் தேவை. பையன் விஸ்வாமித்திர கோத்திரம், உத்திரட்டாதி நட்சத்திரம், பி. எச். இ. எல்.லில் நல்ல உத்தியோகம், மாதச் சம்பளம் ரூ. 1500/— எதிர்கால முன்னேற்றம் உண்டு. செவ்வாய் தோஷமில்லாத பெண்ணின் ஜாதக விவரத்துடன் (விலாசத்துடன்) விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 4927.

* கொனசீம தெலுங்கு பிராமண, கௌண்டின்ய சித்திரை 3 ஆம் பாதம், 26 வயது 5' 8'' உயரம், பி. எஸ்.ஸி., சி. ஏ. ஐ. ஐ. பி., தேசிய வங்கி வேலை, மாநிறப் பையனுக்கு, 23 வயதிற்குட்பட்ட தமிழ் நாட்டுத் தெலுங்கு பிராமண, மாறுதல் பெறத்தக்க அரசுப் பணியும் நற்குணமும், அழகும், ஆரோக்கியமும் உடைய கண்ணாடி அணியாத பட்டதாரிப் பெண் தேவை. உட்பிரிவு சம்மதம். ஜாதகம், குடும்ப விவரங்களுடன் எழுதுக. வெளி மாநிலம் வேண்டாம். பெட்டி எண்: 4928.

* தெலுங்கு நியோகி பராசர கோத்திரம், கேட்டை 2 ஆம் பாதம், 29/153; சம்பளம் ரூ. 900/— சென்னையில் அரசாங்க வேலையில் ஸ்டெனோவாகப் பணிபுரியும் எஸ். எஸ். எல். சி. படித்த பிராமணப் பெண்ணுக்கு நல்ல அரசு/தனியார் வேலையில் உள்ள வரன் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். ஜாதகத்துடன் எழுதவும். பெட்டி எண்: 4929.

* சோழிய வெள்ளாளர் (சைவ பிரிவு) குலத்தைச் சார்ந்த மூல நட்சத்திரம், பி. யு. சி. படித்துச் சென்னையில் தனியார் நிறுவனமொன்றில் பணிபுரியும் 31 வயது மணமகனுக்கு அதே குலத்தைச் சார்ந்த பெண் தேவை. சென்னையில் வேலை பார்க்கும் பெண்களுக்கு முன்னுரிமை அளிக்கப்படும். வேலையில் இல்லாதவர்களும் விண்ணப்பிக்கலாம். ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 4930.

* ஐயர், பிரஹசரணம் வயது 29, உயரம் 5' 3'' பட்டதாரி நல்ல குணம், அழகு உள்ள கணவனை இழந்த குழந்தை இல்லாத பெண்ணிற்கு பிராமண சமூகத்தைச் சேர்ந்த (உட்பிரிவு எதுவாயிருந்தாலும் பரவாயில்லை) நல்ல வேலையும் குடும்பத்தையும் சேர்ந்த பரந்த நோக்கமுள்ள 36 வயதுக்குட்பட்ட வரன் தேவை. (மனைவியை இழந்தவர் விண்ணப்பிக்கலாம்.) பெட்டி எண்: 4931.

* Alliance invited from Sourashtra Bride fair looking preferably Graduate for a Sourashtra Boy 32 employed in State Bank. Please send horoscope and family details to Box No. 4932.

* இந்து பருவதராஜ குலத்தைச் சார்ந்த (நாட்டார்) வயது 30, 5' 11'' ஆட்டோமொபைல் எஞ்சினியரிங் கல்ஃப் ரிடர்ண்ட் பம்பாயில் சொந்தமாகத் தொழில் செய்யும் வரனுக்குப் பெண் தேவை. நல்ல வசதியுள்ளவர். அழகான நல்ல நிறமுடைய நல்ல குடும்பத்தைச் சார்ந்த குறைந்த பட்சம் எஸ். எஸ். சி. படித்த, வேலைக்குப் போகாத 25 வயதுக்குட்பட்ட குடும்பப் பெண் தேவை. இந்து மதத்தைச் சார்ந்தவர்கள் யாவரும் தொடர்பு கொள்ளலாம். பெட்டி எண்: 4933.

* Alliance invited for fair M.A. M.Ed. Govt employed Hindu Nadar Boy, aged 29 from a fair Graduate Nadar Girl (B.Ed is preferable). Apply with Horoscope to Box No. 4934.

* Alliance invited for Smartha Brahmin Vadamal Girl, 26 Srivatsa Gothra, S.S.L.C., unemployed star Uthiram. Subsect no bar. Apply with Horoscope and family details to Box No. 4935.

* முதலியார் (துளுவ வேளாளர்) வகுப்பைச் சேர்ந்த பல்லவனில் 'நடத்துனர்' ஆகப் பணிபுரியும் 35 வயது மணமகனுக்கு அதே வகுப்பைச் சேர்ந்த சென்னையில் பணிபுரியும் மணமகள் தேவை. பெட்டி எண்: 4936.

* தஞ்சை ஜில்லா — மழை நாடு பிரஹசரணம், கௌண்டின்ய கோத்திரம், சுவாதி நட்சத்திரம், வயது 26, எம். ஏ. ஆங்கிலம், சென்னையில் டீச்சர் வேலை, பி. எட். படிக்கும் ஐந்து அடி உயரம், மாநிறமுள்ள பெண்ணுக்குத் தகுந்த வரன் தேவை. உட்பிரிவு சம்மதம், ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 4937.

* குடும்பப் பாங்கு, பத்து வரை படிப்பு, மாநிறம், முப்ப வயதுள்ள சைவ வெள்ளாளப் பெண்ணிற்கு அரசாங்கம்/தனியார்/வசதியுள்ள மணமகனும், மத்திய தொலைபேசியில் இளநிலைப் பொறியாளராக, முதல் வகுப்பு பட்டதாரி சிவப்பு நிறம், உன்னத குணம், நடத்தை உள்ள 31 வயது அண்ணனுக்குப் பெண்ணும் ஜாதகக் குறிப்புடன் உடன் எழுதுக. பெட்டி எண்: 4938.

* 31 வயதான சிவப்பான ஒல்லியான உயரமான ஹரித கோத்ரம் திருவாதிரை கடவுள் பக்தியுள்ள வடமாள் ஏழைப் பெண்ணுக்கு நற்பண்புடன் நிரந்தர வேலை உள்ள குடும்பத் தொந்தரவில்லாத அதே பிரிவு சென்னையில் வசிக்கும் வரன் தேவை. எளிய அல்லது ரிஜிஸ்டர் மேரேஜ் மட்டுமே. பெட்டி எண்: 4939.

* செங்குந்த முதலியார் வகுப்பைச் சார்ந்த 30 வயது மாநிறம், மெலிந்த நல்ல இளமையான தோற்றம் மாநில அரசு நிரந்தரப் பணியில் மாதம் ரூ 1000/— வருமானம் கொண்ட நல்ல குடும்பத்தைச் சார்ந்த பெண்ணிற்குத் தகுதியான வரன் தேவை. உட்பிரிவுகளும் சம்மதம். பெட்டி எண்: 4940.

* ஆத்ரேய கோத்திரம், வடமாள். உத்திரம் வயது 24: உயரம் 4' 10'', + 2 தையல், எம்ப்ராய்டரி, டி.டி.சி. பாஸ் செய்த வேலை இல்லாத குடும்பப்பாங்கான மணப் பெண்ணிற்கு மத்திய, மாநில, அரசுகளில் வங்கி தனியார் துறைகளில் பணிபுரியும் நல்ல மணமகன் தேவை. குடும்ப விவரம் ஜாதகம் அனுப்பவும். பெட்டி எண்: 4941.

* பிரஹசர்ணம் கௌசிக கோத்திரம் ஆயில்ய நட்சத்திரம் 33 வயது மாநிறமான வீட்டு வேலைகள் நன்கு தெரிந்த எஸ்.எஸ்.எல்.சி. படித்த பெண்ணிற்கு 40 வயதிற்குள் நிரந்தர வேலையில் உள்ள மணமகன் தேவை. ஜாதகம் அவ



• திருமண மலர் பகுதியில் விளம்பரம் செய்யக் கட்டணம் ரூ 50/—. தொகையை "மங்கையர் மலர்" என்ற பெயருக்கு போஸ்டல் ஆர்டராகவோ, அல்லது சென்னையில் உள்ள ஏதாவது ஒரு வங்கியில் மாற்றக் கூடிய டிமாண்ட் ட்ராப்டாகவோ அனுப்ப வேண்டும். ஒரு விளம்பரத்தில் ஒரு வரனுக்கு 30 வார்த்தைகளுக்குள் விவரங்கள் தரவேண்டும். திருமணமலர் பகுதியில் விளம்பரம் செய்பவர்களின் விலாசங்களைக் கொடுப்பதற்கில்லை. விளம்பரங்களுக்கு பதில் அனுப்புபவர்கள் "விளம்பரதாரர், பெட்டி எண் ..... C/o. மங்கையர் மலர், கிண்டி, சென்னை—600 032" என்ற விலாசத்துக்கு அனுப்ப வேண்டும். பதில்கள் உடனுக்குடன் விளம்பரம் கொடுத்தவர்களுக்கு அனுப்பி வைக்கப்படும். தனிப்பட்ட கடிதப் போக்குவரத்து கிடையாது.

யெமில்லை. உட்பிரிவுகள் சம்மதம். மணமகன் விவரம் மற்றும் குடும்ப விவரத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 4942.

• பிராம்மண குலத்தைச் சேர்ந்த (ஐயங்கார்) பெண்ணுக்கு 42 முதல் 45 வயது வரை உள்ள, நல்ல வேலையில் இருக்கும் வரன் தேவை. ஐயர் குலத்தைச் சேர்ந்தவர்களும் தொடர்பு கொள்ளலாம். பெண் எம்.ஏ. (லிட்ரேச்சர்), பிரெஞ்சு மொழியில் டிப்ளமா வாங்கியவள். ஒரு பள்ளியின் காரியாலயத்தில் பணி புரிகிறாள். கோதுமை நிறம். நல்ல உயரம். (5' 6"). பெட்டி எண்: 4943.

• ஸ்ரீவாலி பிராமண ராவ், துளு பேசக் கூடிய பெண்ணிற்கு அதே ஜாதியைச் சேர்ந்த நல்ல படித்த பையன் தேவை. கோத்திரம் பார்கவ கோத்திரம். பெண்ணின் பிறந்த தேதி: 6.2.1959. நட்சத்திரம் திருவோணம். படிப்பு எம்.எஸ்ஸி. பி.எட். உயரம் 5'. பெண் ஊட்டியில் டீச்சராகப் பணிபுரிகிறாள். நன்கு வசதியுள்ள குடும்பத்தைச் சேர்ந்தவள். நன்றாக திருமணம் செய்து கொடுக்கப்படும். பெண் பார்ப்பதற்கு அழகாக வெள்ளையாக இருப்பாள். ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 4944.

• திருநெல்வேலி சைவ பிள்ளை 25 3/4 வயது/6 அடி உயரம்/கம்பீர தோற்றமுள்ள மத்திய அரசு அதிகாரிக்கு பண்பும், அழகும் குடும்பப்பாங்கும் நிறைந்த பெண் தேவை. பிள்ளை/முதலியார் பிராமணர் மற்றும் பிற சைவ வகுப்பாரும் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 4945.

• கௌசிக கோத்திரம் வடமாள் திருவோணம் 24 வயதுள்ள காது கேளாத பேச வராத ரூ 1000/—க்கு மேல் மாத வருமானமுள்ள 145 செ.மீ. உயரமுள்ள பெண்ணிற்கு வேலையில் உள்ள இதே ஊனமுள்ள/ஊனமில்லாத/வேறு ஊனமுள்ள பிராமண வரன் தேவை. ஜாதகம் மற்றும் குடும்ப விவரங்களுடன் எழுதவும். பெட்டி எண்: 4946.

• வசதியுள்ள சைவ வேளாளர்/உத்ராடம் 2—ம் பாதம்/26/165 செ.மீ./பி.ஏ. மணமகனுக்கு நல்ல துறையொன்றில், உத்தியோகம் கொடுத்து, பெண் கொடுக்கும் வரன் தேவை. வரதட்சணை தேவையில்லை. திருமணமானவுடன் தனிக் குடித்தனம். ஜாதகம் இதர விவரங்களுடன் இருபது தினங்களுக்குள் தொடர்பு கொள்க. பெட்டி எண்: 4947.

• Alliance for Tamil Vadama Iyer Srivatsa Gotram Boy M.A. 29 yrs/168 cm. employed in Central Government, New Delhi drawing Rs. 1400/- p.m. smart, good-looking homely Girls employed in Delhi prefered. Reply with Horoscopes to Box No. 4948.

• Alliance invited for B.Com/29/5' 7"/2000 Accountant in reputed company in Bombay well settled with flat in Bombay. Inter caste parents with Tirunelveli origin. Caste no bar. Vegetarian Vellala preferable. Reply to Box No. 4949.

• Alliance for a Keralite Iyer Boy Brahacharanam Koundinyam, Ayilyam, Kuja in 7th place, 27 yrs/160 cm B.Com, ICWA (Inter) NTPC 1700/- and a Bridegroom for his Sister, Avittam, B.Sc., Computer Programming 22½ yrs/142 cm. fair, no job. Preferred mutual. Send Horoscope and Bio-Data to Box No. 4950.

• Parents seek employed/unemployed Hindu backward/forward caste Bride domestically trained for Groom 32/165 cm. permanent Clerk, Madras Rs. 1000/-/SSLC Hindu backward (Non-Vegetarian) soft natured teatottaler backed by savings, no dowry. Box No. 4951.

• Wanted Solia Vellala Pillai/Mudaliar Bridegroom, Engineers, Banks, Professors and other well employed persons in Government Services for a fair, 28 years Graduate Girl. Box No. 4952.

• Wanted for a Kerala Vadamal Iyer Boy of aged 30 years, well settled in Business, a good looking Bride preferably a Graduate for immediate alliance. Gothram Bharadwajam. Box No. 4953.

• Match for Palghat Iyer Girl employed in foreign company in New Delhi, 22 years, Bhargawa Gothram, Kettai, fair and beautiful. Full particulars, Horoscope of Delhi settled Boys welcome. Box No. 4954.

• Alliance invited for Srivatsa Vadakalai Graduate Iyengar Groom employed in a Nationalised Bank at Madras 26 yrs/1650 p.m. From parents of well employed Vadakalai/Tenkalai Girls. Box No. 4955.

• Employed Girl for Thuluva Vellala Mudaliar Boy, I.C.F. Madras, P.U.C. 31/165 cm/1400. Reply with Horoscope and family details to Box No. 4956.

• . கேரளா ஐயர் அஷ்ட சகஸ்ரம், காசியப கோத்திரம். தேசிய வங்கியில் வேலை. சம்பளம் 2500/— பாங்கு மூலமாக சொந்த வீடு. வயது 35. உயரம் 150 செ.மீ. நட்

# பட்டர்ஃபிளை வழங்கும்
# ஸ்டாண்டர்ட் பிரஷர் குக்கர்






**இலவசம்!**
சேலம் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் 18 G ல் ஆன ஒரு அன்னக்குத்தி மற்றும் கரண்டி.

ஸ்டாண்டர்ட் பிரஷர் குக்கர்-சமையல் உபகரணங்கள் தயாரிப்பில் முன்னணியில் உள்ள பட்டர்ஃபிளை நிறுவனத்தினரின் மற்றுமொரு புதிய படைப்பு. நல்ல தரமான ''ஸ்டாண்டர்ட்'' பிரஷர் குக்கரை உங்களுக்கு வழங்க எங்களது 40 ஆண்டு கால அனுபவத்தை அர்ப்பணித்திருக்கிறோம். அவை ஒவ்வொன்றும் தரத்தில் தலைசிறந்த உலோகக் கலவையினால் தயாரிக்கப்பட்டு அதிக உறுதியும் கனமும் கொண்டவை. உங்களுக்கு வாழ்நாள் முழுவதும் உழைப்பவை.

முழுப் பாதுகாப்பிற்கு தனித்தன்மை வாய்ந்த"காஸ்கெட் ரிலீஸ் சிஸ்டம்" பொருத்தப் பட்டுள்ளது. துரித சமையல். எனவே, எரிபொருள் மற்றும் நேரம் மிச்சம்.

ஒவ்வொரு ஸ்டாண்டர்ட் பிரஷர் குக்கரும் உற்பத்தியின் ஒவ்வொரு நிலையிலும் கடுமையான தரக் கட்டுப்பாடு பரிசோதனைக்குப் பின்பே வெளிவருகிறது.




**7.5, 10 & 12 லிட்டர்களில் உள்ளன.**

பிரஷர் பான்களும் 2 அளவுகளில் உள்ளன.

## ஸ்டாண்டர்ட் பிரஷர் குக்கர்

சமையலறையில் ஒரு சிறந்த சாதனம்
உங்கள் பணத்திற்கு சிறந்த மதிப்பு.

தயாரிப்பாளர்கள் :-
**கங்காதரம் எண்டர்பிரைசஸ்,**
272, அண்ணாசாலை,
(கோ-ஆப்டெக்ஸ் வானவில் சமீபம்)
தேனாம்பேட்டை, சென்னை-600 018.
போன் :- 454186, 412091, 418171

Concept/M

சத்திரம் உத்திரட்டாதி. நல்ல நிறம். மாற்றம் கிடைக்கும். வேலையில் உள்ள பெண் தேவை. உட்பிரிவு சம்மதம். ஜாதகம் இல்லாதவர்கள் பூ கட்டி பார்க்கலாம். பெட்டி எண்: 4957.

* சோழ நாட்டு வடமாள் fair 26/170/2500 போஸ்ட் கிராஜுவேட், பப்ளிக் செக்டாரில் வேலை பார்க்கும், நல்ல குணமுள்ள பிராமணப் பையனுக்கு தகுந்த கிராஜுவேட் மணமகள் 20/23 வயதில் தேவை. ஜாதகத்துடன் குடும்ப விவரத்துடனும் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 4958.

* பி. காம் (சி.ஏ.ஐ.ஐ.பி.—II, எம்.காம்) 25 வயது, பிரஹசரணம், பாரத்வாஜம், உத்திரட்டாதி, பாங்க் வேலையிலுள்ள உடல் ஊனமுற்ற தமிழ் அய்யர் பெண்ணிற்கு பட்டதாரி/PG/C.A. படித்த நல்ல வேலை பரந்த மனப்பான்மையுள்ள 32 வயதிற்குள்ளான மணமகன் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். பெட்டி எண்: 4959.

* சைவ வேளாளப் பிள்ளை தேசிய வங்கிப் பணி எம்.எஸ்ஸி வயது 32, 169 செ.மீ. உயரம் சம்பளம் ரூ 1700 சிவப்பான அழகிய பையனுக்கு அதே இனத்தில் அழகிய சிவந்த நிறம் 155 செ.மீ.க்குக் குறையாத உயரமுள்ள பெண்ணின் பெற்றோரிடமிருந்து ஜாதகத்துடன் விசாரணை வரவேற்கப்படுகிறது. பெட்டி எண்: 4960

* செங்குந்த முதலியார்/எம்.ஏ./35/5' 3''/சித்திரை/ஸ்டேட் பாங்கில் வேலையில் உள்ள மணமகனுக்கு அதே இனத்தில் பொருத்தமான மணமகள் தேவை. மணமகள் பட்டதாரியாகவும் 26 வயதுக்குள்ளும் குடும்பப்பாங்கானவராகவும் இருக்க வேண்டும். தற்போது வங்கி/அரசு அலுவலில் இருந்தாலும் ஆட்சேபம் இல்லை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 4961.

* கலப்பு மண பெற்றோர் (அய்யர்/சைவ முதலியார்) மகளுக்கு வேலையில் உள்ள பையன்கள் வரன் தேவை. பெண் 12 வரை படிப்பு, சிவப்பு, நல்ல குணம், 7—ல் செவ்வாய் தோஷம் உள்ளது. எந்தப் பிரிவும் சம்மதம். முகவரி: N. Chandrasekar Rajesh Bhavan II Floor, Valmiki-Nagar, Nagpur 440 010.

* Wanted an alliance for a Girl aged 35, height 5' pleasing manners, long hair, Kannada Brahmin, Koundinya Gotram, Central Govt. employee. Salary Rs. 2500/-. Please send Horoscope, requirements to Box No. 4962.

* Mutual/Separate alliance for Thenkalai Iyengar Viswamitra Gothra Girl aged 30 Chitrai, P.U.C., Typing Higher English and Tamil. Domestically well trained. Boy aged 37, Thiruvonam, Revenue Inspector. Prefers employed Girl. Sub-sect no bar. Apply with Horoscope and details to Box No. 4963.

* Tharakayana, Iyer Girl 31, B.Sc., good looking Vathima slightly affected by polio in left leg (not identifiable) functionally no problems, seeking suitable alliance. Reply with Horoscope. Sub-sect no bar. Box No. 4964.

* திருநெல்வேலி சைவ வேளாளப் பிள்ளை வகுப்பைச் சேர்ந்த, வயது 28, உயரம் 5' 4''. தேசிய வங்கியில் பணிபுரியும் வரனுக்கு, அதே இனத்தைச் சேர்ந்த வங்கி/மத்திய அரசு/பட்டதாரி, சென்னையில் வேலை பார்க்கும் சிவப்பு நிறமும் அழகும் உள்ள பெண் தேவை. ஜாதகம் குடும்ப விவரத்துடன் தொடர்பு கொள்க. பெட்டி எண்: 4965.

* வட இந்தியாவில் மத்திய அரசில் அதிகாரியாகப் பணிபுரியும் 26 வயதுள்ள மணமகனுக்கு, தஞ்சை மாவட்ட இசை வேளாளர் வகுப்பைச் சேர்ந்த பட்டதாரி மணமகள் தேவை. பெட்டி எண்: 4966

* கார்காத்த வேளாளர் சைவம், சேக்கிழார் கோத்திரம், வயது 30, 5' 9'' நல்ல பழக்க வழக்கமும், கடவுள் பக்தியும் உள்ள, தனியார் நிறுவனத்தில் மாத வருமானம் ரூ 1000/— மணமகனுக்கு அதே ஜாதியில் தனியார்/அரசாங்க வேலையில் உள்ள மணமகள் தேவை. ஜாதகம் மற்றும் விவரங்களுடன் தொடர்பு கொள்க. பெட்டி எண்: 4967.

* சைவ வேளாளர் வயது 37, உயரம் 180 செ.மீ. பி.எஸ்ஸி பட்டம் பெற்ற பொது தர்ம துறையில் கௌரவ பதவி வகிக்கும் மற்றும் சொந்த விவசாயத் தொழில் மேன்மையுறச் செய்து வரும் வரனுக்கு தகுந்த சைவ வேளாளர்/கார்காத்தார் பெண் தேவை. ஜாதகம் மற்றும் குடும்ப விவரத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 4968.

* சோழிய வேளாளர் இனத்தைச் சேர்ந்த பி.ஏ. (லிட்ரேச்சர்) படித்த 5' 3'' உயரமுள்ள 21 வயதுடைய மாநிறமுள்ள பெண்ணிற்கு அதே இனத்தைச் சேர்ந்த முப்பது வயதிற்குற்பட்ட எம்.பி.பி.எஸ். எம்.டி. எம்.எஸ். டாக்டர் மணமகன் தேவை. ஜாதகத்துடன் விவரங்கள் கொடுக்கவும். பெட்டி எண்: 4969.



* தஞ்சை ஜில்லா அகம்படியர் வகுப்பைச் சேர்ந்த (தேவர்) வயது 22, 5' 3'' திருவாதிரை நட்சத்திரம் படிப்பு + 2 வரை வடநாட்டில் படித்த பெண்ணுக்கு அதே வகுப்பைச் சேர்ந்த படித்து நல்ல வேலையில் உள்ள மணமகன் தேவை. திருமணம் நல்ல முறையில் செய்துத் தரப்படும். பெட்டி எண்: 4970.

* சோழிய வேளாளர் பிள்ளை வகுப்பைச் சேர்ந்த 35 வயதுள்ள 9—வது வரை படித்த வசதியான மணமகனுக்கு அதே சமுதாயத்தைச் சேர்ந்த 8 வகுப்புக்குள் படித்த லட்சணமான குடும்பப் பாங்கான, வேலையில் இல்லாத, எளிய குடும்பத்தைச் சேர்ந்த மணமகள் தேவை. ஜாதகம் மற்றும் இதர விவரங்களுடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 4971.

* மாத்வா, தேசஸ்த மராட்டி, 26 வயது, உயரம் 5' 1'' பி.ஏ. பட்டதாரி, விஸ்வாமித்ர கோத்திரம், திருவோண நட்சத்திரம், மணமகளுக்கு இதே வகுப்பில் மத்திய அரசு, வங்கி, தனியார் நிறுவனத்தில் அதிகாரியாக வேலை பார்க்கும் கௌரவமான குடும்பத்தைச் சேர்ந்த மணமகன் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 4972.

* Equal or better qualified Groom in any field preferably Mudaliar/Pillai others also acceptable for Girl, M.D., Green Card Holder, working in New York 37 years, medium complexion, 160 cms, pleasing manners. Box No. 4973.

* சொந்தத் தொழில் புரியும் எவ்வித கெட்ட பழக்கங்களும் இல்லாத 45 வயது ஐயருக்கு, (கௌசிக கோத்திரம்) நல்ல வேலையிலுள்ள, தாய்மை அடையும் வாய்ப்பில்லாத வாழ்க்கைத் துணைவி தேவை. பிராமண இனத்தவர் மட்டும் எழுதுக. மொழி தடையில்லை. பெட்டி எண்: 4974.

# பாதுகாப்பும் வசதியும் உணர்ந்து மகிழ

## புதிய காம்ஃபிட் ஆல்வேஸ்

### சரிசெய்யக்கூடிய டாப்-என்ட்ஸ்

**உங்களுக்கு நாள் முழுவதும் நீடிக்கும் புத்துணர்ச்சியைத் தருவதற்காகவே தயாரிக்கப்பட்டது.**

காம்ஃபிட் ஆல்வேஸ் சரிசெய்யக்கூடிய சானிட்டரி நாப்கின்ஸ், கீழ்ப்புறம் இரண்டு அடுக்கு டிஷ்யூக்களுடன் மிருதுவான, இணைவற்ற கவரை உடையவை, கவர் உலர்ந்திருக்கையில் மிருதியாக உறிஞ்சக்கூடிய உட்புற அடுக்குகள் ஈரத்தை இழுத்துக் கொள்கின்றன. ஒரு நீலநிற பிளாஸ்டிக் பாதுகாப்பு உறை, கறை எதுவும் ஏற்படுவதைத் தடுப்பதற்கு நாப்கின் பூராவையும் மூடிக் கொள்கிறது.

அதுவே உங்களுக்குப் பூரண பாதுகாப்பாகும், மிகவும் கடுமையான நாட்களில்கூட, பூரணமாக உலர்ந்திருப்பதை உணருகிறீர்கள், எப்போதும் புத்துணர்ச்சியோடு இருப்பீர்கள்.

**காம்ஃபிட் ஆல்வேஸ் டாப்-என்ட்ஸ் எந்த உடல் உருவம், அளவு அல்லது வடிவத்துக்கேற்ப சரிசெய்யமுடியும், நேர்த்தியான சொருகுக்கும் நெருங்கிய இசைவுப் பொருத்தத் துக்கும்.**

நீங்கள் உங்கள் அலுவல்களை செய்து வந்ததைப் போல நம்பிக்கையுடன் செய்யமுடியும்.







**தேர்ந்தெடுப்பதற்கு இரண்டு பேக்குகள் 10 மற்றும் 20 நாப்கின்ஸ்**

வீட்டிலே தயாரிக்கப்படும் சுகாதாரமற்ற நாப்கின்களை உபயோகிக்காதீர்கள். இனி சரிசெய்யக்கூடிய டாப்-என்ட்ஸ் கொண்ட காம்ஃபிட் ஆல்வேஸை உபயோகியுங்கள்.

Dazzal/CH/401 TAM

# அழகிய தோற்றம்
# அனைவரின் நாட்டம்




22 CT. தங்க நகைகள் எளிதில் வாங்கிட
எங்களது நகை சேமிப்பு திட்டத்தில் சேர்ந்து பயனடைவீர்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ரூ 500/- | × | 15 மாதம் | — | ரூ 8650/- | ? |
| ரூ 100/- | × | 15 மாதம் | — | ரூ 1730/- | ? |
| ரூ 50/- | × | 15 மாதம் | — | ரூ 865/- | ? |
| ரூ 25/- | × | 15 மாதம் | — | ரூ 430/- | ? |

தரமான தங்கம், வெள்ளி மற்றும் வைர நகைகளை
தவறாமல் வழங்குபவர்கள்

Echo

விபரங்களுக்கு தொடர்பு கொள்க




## பிரின்ஸ் ஜூவல்லரி

**GOLD • SILVER • DIAMONDS**

13-நாகேஸ்வரராவ் சாலை (பனகல்பார்க் எதிரே)
தி-நகர், சென்னை-600 017. போன்: 446783

* வயது 34/160 செ.மீ./1000 எஸ்.எஸ்.எல்.சி. சென்னை தொலைபேசி குஜராத்தி (பிராமண பிள்ளைக்கு ஐயர்/ஐயங்கார் வகுப்பைச் சேர்ந்த குடும்பப்பாங்கான மணமகள் 32 வயதுக்குள் தேவை. வேலைக்குச் செல்லும் பெண்களுக்கு முன்னுரிமை வழங்கப்படும். குடும்ப விவரங்களுடன் ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 4975.

* Wanted Graduate well employed Vadama Tamil Iyer non-bharadwaja Girl for Delhi Supreme Court Advocate Boy with Shevvai Eighth place Moolam, Star. Aged thirty years. Reply with horoscope/full details to Box No. 4976.

* வடமாள் ஸ்ரீவத்ஸ கோத்ரம் உத்ரட்டாதி வயது 26½ எஸ்.எஸ்.எல்.சி. பிரபல தனியார் கம்பெனியில் மாத வருமானம் ரூ 1300. நிரந்தர வேலையுள்ள பையனுக்கு நல்லநிறமும், லக்ஷணமும், கிராஜுவேட் அல்லது + 2 பாஸ் செய்த குடும்பப்பாங்கான, வேலைக்குச் செல்லாத பெண் தேவை. ஜாதகம் குடும்பப் பின்னணியுடன் எழுதவும். பெட்டி எண்: 4977.

* Wanted service oriented Sourashtra Groom preferably outside Madurai for Girl SSLC/25/150 and handicapped Graduate/employed. Convent educated Bride for Sourashtra Boy 29/160/1600. Public Sector undertaking in Capital. Box No. 4978.

* சென்னையில் உள்ள இந்து நாடார் வகுப்பைச் சார்ந்த + 2 வகுப்பு பாஸ் செய்து, ஆசிரியப் பயிற்சி டிப்ளமோ பாஸ் செய்த குடும்பப்பாங்குள்ள, மாநிறமுள்ள வசதியான பெண்ணிற்கு அதே வகுப்பைச் சேர்ந்த படித்த வேலையில் உள்ள அல்லது வசதியான தொழில்புரியும் மணமகன் தேவை. பெட்டி எண்: 4979.

* திருச்சியிலிருக்கும் வெள்ளாளக் கவுண்டர், பி.யு.சி. படித்த 5' 2'' மாத வருமானம் ரூ 1000/— சொந்த வியாபாரம், எந்தவிதமான கெட்ட பழக்கமில்லாத நல்லொழுக்கமுடைய மணமகனுக்கு வயது 25' 30க்குள் எந்தவிதமான உறவுமில்லாத அனாதையாக இருக்கும் குடும்பப்பாங்கான அமைதியான குணமுடைய படித்த வேலையில்லாத அனாதை இல்லத்திலுள்ள பெண்கள் மட்டுமே விண்ணப்பிக்கவும். ஜாதி, மத, இன, பேதமில்லை. வரதட்சணை தேவையில்லை. பெட்டி எண்: 4980.

* Alliance from well settled gentlemen 50—56 for Iyer, Bharathwaja fair, slim, 45, SSLC 5' 3" domestically trained lady. Widowers with one or two children also invited. Box No. 4981.



* ஹரித கோத்ரம், பிரஹசரணம், பூரம், வயது 26/160/ பி.எஸ்ஸி படித்துள்ள புதுவை அரசில் எல்.டி.சி. யாகப் பணிபுரியும் பெண்ணுக்கு, புதுவைக்கு (பாண்டி ஸ்டேட்) மாற்றல் பெறக் கூடிய தேஷனலைஸ்ட் பாங்க்/ஜெனரல் இன்ஸ்யூரன்ஸ் கம்பெனி அல்லது புதுவை அரசிலேயே பணிபுரியும் மணமகன் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். பெட்டி எண்: 4982.

* இந்து ஆதி திராவிடம் 28/5½/III பி.ஏ. அடிப்படை வசதியுடன் சென்னையில் சொந்த வீடு. 26 வயதுக்குள் உத்தியோகத்தில் உள்ள/இல்லாத, எஸ்.எஸ்.எல்.சி/அதற்கு மேலும் படித்த மணமகள் தேவை. கலப்பு மணத்திற்கு உண்மையிலேயே விருப்பம் உள்ளவர்களும், குழந்தை இல்லாத விதவைகளும்கூட விண்ணப்பிக்கலாம். பெட்டி எண்: 4983.

* சோழ வேளாளர் சமூகத்தைச் சார்ந்த பி.எஸ்ஸி படித்த ரூ 1150 ஊதியம் பெறும் பெண்ணுக்கு 29' 32 வயதுள்ள நடுத்தர குடும்பத்தைச் சார்ந்த பட்டதாரி மணமகன் தேவை. திருப்பத்தூர் N.A. அல்லது அதற்கருகில் மாற்றிக் கொள்ளக் கூடிய உத்தியோகத்திலுள்ளவர்கள் ஜாதகம், குடும்ப விவரம், ஊதியம் முதலிய விவரங்களுடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 4984.

* இந்து நாடார் வகுப்பைச் சேர்ந்த சொந்தத் தொழில் மூலம் ரூ 4000 வரை மாத வருமானம் பெறும் எம்.எஸ்ஸி படித்த வரனுக்கு. அதே இனத்தைச் சேர்ந்த நல்ல அழகும் தோற்றமும் உடைய குடும்பப் பெண் தேவை. பெட்டி எண்: 4985.

* சௌராஷ்டிரா, பி.காம்., (ஏ.சி.ஏ.), (ஏ.சி.எஸ்.) (பி.எல்.), மத்திய அரசு உத்தியோகம் வயது 26, வெலாகை கோத்திரத்தைச் சேர்ந்த சிவப்பு நிறப் பையனுக்கு அதே இனத்தில் 21 வயதுக்குட்பட்ட, பட்டதாரி அல்லது + 2 நல்ல சிவப்பு நிறமுள்ள அழகான பெண் தேவை. மதுரையைச் சேர்ந்தவர்களானால் உத்தமம். விவரங்களுடன் தொடர்பு கொள்க. பெட்டி எண்: 4986.

* Wanted suitable Bridegroom between 33 and 38 years of age professionally qualified well settled respectable and cultured for Mudaliar Bride age 33/153 cms M.A. B.Ed., (Eng. Litt.) permanent emplolyment near Madras. Pooradam, no dosham fair complexion, subsect no bar. Box No. 4987.

* Well settled, qualified, Madras based, Brahmin Groom for professionally qualified fair Girl of 30. Intercaste parentage. Mother Iyengar, Father Chettiar. Parents separated. Box No. 4988.

* Wanted Graduate employed Bank/Central Govt./Engineers/CAs for good looking Ashta Sahasram Athreya Gothram, star Bharani fair complexioned Girl aged 22/160 cm. B.A. Honours Graduate. Decent marriage. Subsect no bar. Correspond with Horoscope and other particulars to K. Gurumurthi, Post Box No. 53, Sambalpur P.O. Orissa-768001

* 34 வயது பூசம் நட்சத்திரம் ஆத்ரேய கோத்ரம் 5' 8'' பாம்பேயில் நல்ல வேலையிலிருக்கும் பையனுக்கு 30 வயதுக்குள் பாம்பேயிலோ அல்லது பாம்பேயிற்கு மாற்றல் ஆகக் கூடிய வேலையிலிருக்கும் டிகிரி படித்த அழகும் நல்ல குணமும் உள்ள பெண் தேவை. பெட்டி எண்: 4989.

* விவாகரத்தான, வயது 36, எம்.ஏ. (appeared) மத்திய அரசு ரூ 1500 C.S.I. பெண்ணிற்கு, கிறிஸ்துவ பக்தியுள்ள/கிராஜுவேட்/போஸ்ட் கிராஜுவேட் விருப்பமானவர், தாரமிழந்தவர் ஒரு குழந்தை இருந்தாலும் பரவாயில்லை. பெண்ணிற்கு ஒரு குழந்தை கான்வென்டில் படிக்கிறது. பெட்டி எண்: 4990.

* வில்லங்கம் இன்றி விவாகரத்து செய்துவிட்ட குழந்தைகள் இல்லாத அரசாங்க வேலையிலிருக்கும் 32 வயது ஐயர் பெண்ணிற்கு உண்மையான பரந்த மனப்பான்மை கொண்ட நிரந்தர வருமானம் உள்ள எந்த வகை தொல்லைகளும் இல்லாத விவாகரத்து ஆனவர், தாரம் இழந்தவர் ஐயர் பையன்களும் மற்ற பிரிவுகளும் விண்ணப்பிக்கவும். பெண்ணிற்கு உடம்பில் சிறிது வெள்ளை தழும்புகள் உண்டு. ஆனால் வாழ்க்கையை

பாதிக்காது. எளிமையான திருமணம்தான். மனப் பொருத்தம் தான். உடனடி திருமணம். பெட்டி எண்: 4991.

* நல்ல மனமும் அச்சு வெல்ல குணமும் கல்லூரிப் படிப்பும் புதுமைத் துடிப்பும் பூரணமாய்ப் பெற்ற சென்னைவாழ் 32 வயது பிராமண இளைஞர் கணவனை இழந்த காரிகைக்கு மங்கலக் குங்குமம் வழங்கிட வருகிறார். வெள்ளை நிலாவுக்குப் பிள்ளை நிலா இருப்பினும் இதய வானில் இருவருக்கும் இனிய இடமுண்டு. ஜாதி பார்க்காமல் நல்ல தேதி பார்த்து, விருப்பமுடைய எம்மதத்தாரும் விண்ணப்பம் நல்கி — விதி தேவன் மூக்குடைத்துப் புதுநீதி ஆக்கிடுக. பெட்டி எண்: 4992.

* நாற்பது வயது நிரம்பியும் திருமணமின்றி வீட்டோடு நிற்கும் பெண் அல்லது இந்த வயதில் குழந்தையற்ற விதவை, விலக்கு பெற்றவர், கைவிடப்பட்டவர், அபலை போன்ற அம்மையார் தேவை. நோக்கம் பதிவு மணம். இந்த ஏற்பாடு, ஒரு துணை, உதவி வயோதிக பாதுகாப்பு வேண்டுவோர்க்கு மட்டுமே உதவும். மணமகன் வயது அறுபது. விலக்கு பெற்றவர். அசைவம். முதலியார். வெண் தழும்பு உடல். மாத வருவாய் பென்சனுடன் ஆயிரம். அம்மையார் எந்த சாதி ஆயினும் சமையல் திறன் குடும்பப்பாங்கு. கல்வி ஞானம் அவசியம். விவரங்களுக்கு பெட்டி எண்: 4993.

* பி. காம் படித்து, 23 வயது, 5 ½' உயரம், 800/— சம்பளம் கொண்ட சென்னை தனியார் நிறுவனமொன்றில் வேலை பார்க்கும் அழகும் அடக்கமும் உள்ள, இயேசு கிறுஸ்துவிடம் மட்டும் நம்பிக்கையும், பக்தியும் உள்ள பிராமணப் பெண்ணுக்குப் படித்த முற்போக்கு எண்ணங் கொண்ட 32 வயதுக்குட்பட்டவர்களிடம் இருந்து விண்ணப்பங்கள் வரவேற்கப்படுகிறது. ஜாதக, சாஸ்திர சம்பிரதாயங்களில் நம்பிக்கை இல்லை. பெட்டி எண்: 4994.

* பால்ய விவாகத்தால் 13 வயதில் திருமணமாகி கணவனை இழந்த செங்குந்த முதலியார் வகுப்பைச் சேர்ந்த பெண்ணிற்கு முற்போக்கு எண்ணம் கொண்ட அதே வகுப்பைச் சார்ந்த அரசு நிறுவனத்தில் பணிபுரியும் மணமகன் 37 வயதுக்குள் தேவை. (குழந்தை இல்லாத விவாகரத்து பெற்றவரும், மனைவியை இழந்தவரும் விண்ணப்பிக்கலாம்.) எம்.ஏ. பி.எட். படித்து அரசு பள்ளியில் ஆசிரியையாகப் பணிபுரிந்து வருகிறார். பெண்ணின் வயது 32. நல்ல குடும்பத்தைச் சேர்ந்தவர். பெட்டி எண்: 4995.

* 24 மனை தெலுங்குச் செட்டியார் வகுப்பைச் சேர்ந்த 29 வயதுள்ள அமெரிக்காவில் மேற்படிப்பு படித்து அங்கேயே பொறியாளராக வேலை பார்ப்பவருக்கு அதே வகுப்பைச் சார்ந்த எட்டு வீட்டில் படித்த பட்டதாரியான அழகான கடவுள் பக்தி நிறைந்த பெண் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 4996.

* 24 மனை தெலுங்குச் செட்டியார், வகுப்பைச் சார்ந்த காண்ட்ராக்டர் வேலை பார்க்கும் மாத வருமானம் ரூ 2500/— உள்ளவருக்கு அதே வகுப்பைச் சார்ந்த 25 வயதுள்ள எட்டு வீட்டைச் சேர்ந்த பட்டதாரியும் அழகும் கடவுள் பக்தியும் நிறைந்த பெண் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 4997.

* அஷ்டசகஸ்ரம், ஹரித கோத்ரம், பூசம் நட்சத்திரம், 28 வயது 5' 3'' உயரம், மாநிறம், பி.ஏ. படித்த குடும்பப்பாங்கான பெண்ணிற்கு நல்ல வேலையில் உள்ள வரன் தேவை. முழு விவரம், ஜாதகத்துடன் தொடர்பு கொள்க. பெட்டி எண்: 4998.

* Hindu Nadar alliance from decent family good looking fair complexioned Girl wanted for a decent well known undivided family Boy 27 B.Com., having good personality well settled in business, divorced within 30 days (without encumbrance). Dowry no problem. Decent Marriage. Box No. 4999.

* Wanted suitable Groom for a Christian Nadar, 30 years, 5' 2" fair, working as Lecturer in a College, doing Ph.D., divorced within one week after marriage. Divorcee, widower may also apply. Caste, religion no bar. Box No. 5000.

* Bombay based Iyer Boy 34/168/2250 handsome young looking seeks alliance good looking employed preferably under Graduate Bombay Girl 25-28, no dowry. Reply to Box No. 5001.

* Alliance invited from well-employed Iyengar Boy of good family/habits for Vadagalai Naidruva Kasyapa Girl Anusham 27/150 Central Job Delhi. Full particulars/horoscope to Box No. 5002.

* Mutual/seperate alliance for Thengalai Iyengar Kousika Giri 39, SSLC, domestically trained, smart and charming Uthiram also for Brother 43, Avitam, Engineer in Public Sector, drawing over 3500. Box No. 5003.

* ஹிந்து, விஸ்வகர்மா, தமிழ் ஆசாரி சந்திர குலம் (காமாட்சி அம்மன்) வயது 28, உயரம் 5' 4'' தமிழ்நாடு அரசு நிறுவனம் ஒன்றில் மாதச் சம்பளம் ரூ 1400/— பெறும் மணமகனுக்கு இதே வகுப்பைச் சேர்ந்த அழகிய, பண்பும், குணமுடைய, வங்கி, தமிழ்நாடு, மத்திய அரசில் வேலைப் பார்க்கும் மணமகள் தேவை. (வேலையில் இல்லாத படித்தவர்களும் விண்ணப்பிக்கலாம்.) (உடல் ஊனமுற்றவர்களும் விண்ணப்பிக்கலாம்.) பெட்டி எண்: 5004.

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாகப் பரதன் அச்சகத்தில் ஆசிரியர் பொறுப்பேற்று அச்சிட்டு வெளியிடுபவர்: வி. முரளி. துணை ஆசிரியர்: மஞ்சுளா ரமேஷ்.

நிர்வாகக் காரியாலயம்: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை—600 032. போன்: 431543, 434157.

ஆசிரியர் குழு அலுவலகம்: 28, ஐந்தாவது தெரு, ஏரி வட்டம், நுங்கம்பாக்கம், சென்னை—600 034. போன்: 473389.

ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ 36/—; வெளிநாடு: விமானத் தபால்: ரூ 250/—; கப்பல் தபால்: ரூ 100/—.

